# ஸ்ரீ பக்த ஆண்டாள்

[ நாடகம் ]

நாகர்கோவில் கிருஷ்ணன்



மஹேஸ்வரி பிரசுரம்
55, சோலையப்பன் தெரு,
மயிலாப்பூர், சென்னை – 600 004



இறைவனை நினைத்துச் செய்யும் எந்தக் காரியத்துக்கும் பயன் உண்டு. அறியாமல் செய் தால் கூட அதற்கும் பயன் உண்டு.

— ஸ்ரீஆசார்ய சுவாமிகளின் அருளமுதம் —

□ முதற் பதிப்பு : 1992 □ விலை ரூபாய் 25-00 □



Sri Baktha Andal - a Puranic & Historical Drama written by Nagercoil Krishnan in his usual inimitable Style □ The Drama dialouges are very divine thought Provoking & Powerful □ First Edition 1992. □ 1000 Copies □ Published by Maheswari Pirasuram, Madras - 600004. Printed at Kanna Palani Achakam, Madras - 600005.



AID TO AUTHOR'S SCHEME

இந்நூல் திருமலை திருப்பதி தேவஸ்தானம் பொருளுதவி பெற்று பிரசுரிக்கப்பட்டது.

This book is Published with The Financial Assistance of Tirumala - Tirupathi Devasthanams Under Their Scheme "Aid To Publish Religious Books"



# அடியேனுரை

ஸ்ரீயப்பதியாகிய ஸ்ரீமந்நாராயணன் எழுந்தருளி, திருவருள் பாலிக்கும் திருப்பதி திருமலை தேவஸ்தானத்தின் பொருளுதவிபெற்று, ஸ்ரீபக்த ஆண்டாள் எனும் இந்நூல் வெளிவருவது இம்மையில் யாம் பெற்ற பேரின்பமாகும்.

அடியேனுக்கும் அருள்பாலிக்கும் மங்கையுறை மார்பன் ஸ்ரீபத்மாவதி சமேத ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பெருமானுக்கும், திருச்சுகனூரில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ அலர்மேல் மங்கை தாயாருக்கும் அடியேனின் நிலம் கிடந்த சாஷ்டாங்க நமஸ்காரங்கள்!

ஸ்ரீபக்த ஆண்டாள் ஒரு நாடக நூல். இந்நாடகத்தில், ஆண்டாள், பெரியாழ்வார் இவர்களுடைய வைபவங்கள் மிகச் சிறப்பாக சொல்லப்பட்டுள்ளன. இந்நாடகத்தை கோதைபிராட்டியாரின் கடாக்ஷம் இல்லாமல், ஒருபோதும் என்னால் எழுத முடியாது.

ஒவ்வொரு காட்சியும் மிக அற்புதமாக அமைந்துள்ளது என்று நான் பெருமிதம் பொங்க, சொல்கிறேன் என்றால் அது தற்பெருமை அல்ல; அந்த ஆண்டாளின் பேரருளின் ஒப்பற்ற மகிமை ஒன்றேதான்.

ஸ்ரீ பக்த ஆண்டாள் எனும் இப்புண்ணிய புராண பொக்கிஷத்தைப் பிராட்டியாரின் பாத கமலங்களுக்கு தொடுத்து முடித்த பாரிஜாதப் புஷ்ப மாலை போல், சிரம்தாழ்த்திச் சமர்ப்பிக்கின்றேன்.

எளியவனின் ஆன்மீகப் பணிக்கு பேரருளை வர்ஷிக்கும் ஸ்ரீகாஞ்சி காமகோடி ஸ்ரீஸ்ரீஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகளின் பாதாரவிந்தங்களுக்கு அநேக தண்டன் சமர்ப்பித்து, க்ருதக்ஞதையைத் தெரிவித்துக் கொண்டு, பக்தர்களுக்கு இந்நூலை அளிக்கின்றேன்.

சென்னை-4 அன்பன்

**17-12-92** **நாகர்கோவில் கிருஷ்ணன்**



**தேவஸ்ய மஹிஷீம் திவ்யாம் ஆதௌ கோதரம் உபாஸ்மஹே**
**யந்மௌலி மாலிகாம் ப்ரீத்யா ஸ்வீகரோதி ஸ்வயம் ப்ரபு ||**

எவள் சூடிக் கொடுத்த மாலையை எம்பெருமானே உவப்புடன் ஏற்றுக் கொண்டானோ, அந்த நாராயண னின் திவ்ய மஹிஷியான அத்தகைய கோதையை முதலில் உபாஸிக்கிறோம்.

□□□

# அடியேன் பெற்ற அருளாசிகள்

"இந்நூலின் ஆசிரியரும் இவ்விதமே தெய்வீக நூல்களை எழுதிக் கொண்டு ஜனங்களிடையே தெய்வ பக்தியையும் நல்லொழுக்கத்தையும் வளர்ப்பதின் மூலம் எல்லா மேன்மைகளையும் அடைவார்களாக."

—ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸ்ரஸ்வதீ ஸ்வாமிகள்

"வர்த்திஷ்ணுவான இந்த ரசயிதா இன்னும் அனேகமான க்ரந்தங்களை எழுதி ஸர்வேச்வரனுடைய க்ருபா பாத்ரர் ஆகவேணும் என்று அனேக மங்களா சாஸனங்களைப் பண்ணுகிறோம்."

—ஸ்ரீமந் நாராயண ராமானுஜ ஜீயர் (ஆந்திரப் பிரதேசம்)

"இந் நூலாசிரியர் மூலமாக இத்தகைய நூல்கள் மேன் மேலும் அடிக்கடி வெளிவருமாக, அலர்மேல் மங்கையுறை மார்பனுடைய அருள் இந்நூலாசிரியர்க்கு எளிதாயிற் றென்று மிக மகிழ்கின்றேன்.

—ஜகதாசார்யர் : P. B. அண்ணங்கராசாரியர்

"படித்ததுமே நெஞ்சில் பதியும்படி எழுதிக்
கொடுப்பதிலே நாகர் கோவில் கிருஷ்ணனிவர்
கைதேர்ந்து விளங்குகிறார்", அன்னவரின்
நூல்படிக்க நெஞ்சம் நுழைந்திட்டால் தெய்வ அருட்
பால் குடித்துத் தெளிவு பெறும்; பக்திக் கனிவு பெறும்!
வழிகாட்டி கிருஷ்ணனுக்கு மனங்கனிந்தநன்றியை நம்
விழிகாட்டிக் கொண்டிருக்க விரதம் கடைப்பிடிப்போம்!

—திருமதி சௌந்தரா கைலாசம்

## பதிப்புரை



ஸ்ரீபக்த ஆண்டாள் அற்புதமான ஓர் நாடக நூல்— ஆண்டாள், பெரியாழ்வார் திருப்பாத கமலங்களுக்கு சாத்தப்படும் தமிழ் மணம் கமழும் நாடக நந்தவனம் ☐

ஸ்ரீமந் நாராயணன்- பூமி பிராட்டியாரின் வைபவங்களைச் சொல்லும் வண்ண களஞ்சியம் ☐

திருப்பாவை, நாச்சியார் திருமொழி, மற்றும் பெரியாழ்வார் பாசுரங்கள் தளிர்நடை பயிலக்காணும் ஆசிரியரின் தண் தமிழ் நடை அழகு ☐

வசனம் அனல் பறக்கும்— கன்னல் தமிழ் பிறக்கும்— பக்தி சுவை தேன் சிந்தும்— படிக்க படிக்க பேரானந்தம் பொங்கிப் பெருகும் ☐

இந்நூல் எங்கள் பிரசுரத்தின் வெளியீடுகளுக்கு அழகு சேர்க்கும் ஒரு நவரத்தின மணி மாலை! ☐

மார்கழி திங்கள் மதி நிறைந்த நன்னாள் இந்நூல் வெளி வருவது எங்கள் தவப் பயனே! ☐

அரங்கன் திருவடியே சரணம்!

ஆண்டாள் திருவடியே
சரணம்!

**பதிப்பகத்தார்**

## கதாபாத்திரங்கள்



ஸ்ரீ விஷ்ணு
பூமிபிராட்டியார்
ஸ்ரீ லக்ஷ்மி
கருடாழ்வார்
நாரதர்
தேவேந்திரன்
ருக்மணி
சத்யபாமா
பெரியாழ்வார்
ஆண்டாள்
விரஜை
முகுந்தப்பட்டர்
பதுமவல்லி
வல்லபதேவன்
பாண்டிமா தேவி
செல்வநம்பி
சோழ மன்னன்
அர்ச்சகர்
குருதேவர்
வில்லி
கண்டன்
அவைப் புலவர்கள்
மற்றும் தேவர்கள்
காவலர்—தோழியர்

□□

## காட்சி : 1

இடம் : பரமபதம்.

கதாபாத்திரங்கள் : மகாவிஷ்ணு— பூமிதேவி— ஸ்ரீதேவி
நீளாதேவி—நாரதர்—கருடாழ்வார்—தேவர்கள்.

குரல் : ஓம் நமோ நாராயணா! ஓம் நமோ நாராயணா!

[பாசுரம்]

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம் மல்லாண்ட திண்தோள்
மணிவண்ணா உன் சேவடி செவ்வி திருக்காப்பு
அடியாமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம்
பல்லாண்டு
வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும்
பல்லாண்டு
வடிவார் சோதிவலத் துறையும் சுடராழியும்
பல்லாண்டு
படைப்போர்புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்னியம்
பல்லாண்டு!!

[புகை மண்டலம்— பேரொளி பிறக்கிறது—மணி ஓசை—சங்கு நாதம்—மணிக்கதவுகள் திறக்கின்றன ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீதேவி — பூதேவி, நீளாதேவி சமேதராய் சேவை சாதிக்கின்றார்]

குரல் : ஸ்ரீமந் நாராயணன்—ஸ்ரீ விஷ்ணு என்ற பரமாத்மா பிரத்யக்ஷம்— அனுமானம் எனும் பிரணாமங்களுக் கெல்லாம் அப்பாற்பட்ட ஜோதி சொரூபனாக—

ஸ்ரீ தேவி, பூதேவி, நீளாதேவி சமேதராய் எழுந்தருளி யுள்ள பேரானந்தம்!

[தேவர்கள்—கந்தர்வர்கள்— நாரதர்— நான்முகன் எம்பெருமானைத் தரிசித்துப் போகின்றனர்—பூமி பிராட்டியார் திருவடியை வருடியவாறு இருத்தல்]

இதுவே பரமபதம்! பரமபதத்திலுள்ள ஸ்ரீ வைகுண்டம் எனும் திவ்ய க்ஷேத்திரத்தில் வேதங்களை யும், சாஸ்திரங்களையும் தூண்களாகக் கொண்டு ஆயிரம் திருக்கால்களை உடைய ஒப்பற்ற நவரத்தின திருமாமணி மண்டபத்தில்... அற்புதமான சிம்மாசனம் அந்த சிம்மாசனத்தில் எட்டு அதிதேவதைகளை கொண்ட நித்தியசூரிகள் எனப்படும் எட்டுத் தளங்கள் கொண்ட தாமரை... பீடமாக விளங்க...அதன் மீது ஞானமே உருவான...அணி ஆயிரம் கொண்ட ஆதிசேஷன் சப்ரமஞ்சமாய்த் துலங்க— அவன் மீது விஷ்ணு அருள்பாலிக்கும் ஆனந்த திருக்கோலத்தின் புண்ணியத்தின் பொலிவைத்தான் என்னென்பது!

[நாரதர் பரமனைத் துதிப்பாடிக் கொண்டு வருதல் —நாராயணனை நமஸ்கரித்தல்]

நாரதர் : நாராயணா...! நாராயணா! ஸ்ரீ மந் நாராயணனே ஸ்ரீ லக்ஷ்மி! அந்த ஸ்ரீ லக்ஷ்மியே ஸ்ரீமந் நாராயணன்! தர்மமே தாமோதரன்! அந்த தர்மத் துக்கு சத்கிரியை ஸ்ரீமகாலக்ஷ்மியே! நாராயணா...! நீர் சந்தோஷம்! அந்த சந்தோஷத்தை ஏற்படுத்தும் சந்துஷ்டி ஸ்ரீ தேவி பிராட்டியார்! உங்கள் இருவருக்கும் பிரம்மபுத்திரனின் சிரசா வந்தனங்கள்!

ஸ்ரீ தேவி : உனக்கு மங்களம் உண்டாகட்டும் பிரம்ம புத்திரா! இந்த பிரம்ம முகூர்த்த வேளையில் பரமபதம் வந்த காரணம்... இந்த பரமனைத் தரிசிக்கவா...? இல்லை... உன் கலகத்துக்கு புகலிடம் தேடவா?

நாரதர் : சௌபாக்கியதேவி! ஸ்ரீமந் நாராயணனின் இதயவாசுகியே! எனது வந்தனங்கள் மீண்டும் மீண்டும்! அடியேன் பரமனின் பாதகமலங்களைத் தொழுது... ஒரு சிறு விக்ஞாபத்தை சமர்ப்பிக்கவே வந்துள்ளேன்.

நாராயணன் : நாரதா! நீ வினா எழுப்புகிறாய் என்றால் அது பூவுலகிற்கு விடிவுகாலம் பிறப்பதற்குத் தான்...

நாரதர் : திருவாழி திருச்சங்குடன் சேவை சாதிக்கும் கேசவா! ஆதியும் யக்ஞபுருஷனாகவும், சகல யக்ஞங்களாலும் ஆராதிக்கத் தக்கவனாகவும் விளங்கும் ஸ்ரீமந் நாராயணா! பிறக்கப் போகும் கலியுகத்தில் மானுடர்கள் ஞானமார்க்கத்தைக் காண வழியறியாது அவதிப்படப் போகிறார்கள்... பரந்தாமனின் கல்யாண குண வைபவங்களின் பேரானந்த பெருவெள்ளத்தை உணர சக்தி அற்றவர்களாக...சம்சார சாகரத்தில் உருக்குலைவர்... அவர்களுக்கு க்ஷேமத்தை வருஷிக்க பெருமான் திருவுள்ளம் கொள்ள வேண்டும்.

ஸ்ரீ தேவி : நாரதா! உன் எண்ணம் ஈடேறும்! இந்த எளியவள் ஒன்பது அவதாரங்களிலுமே ஐயனுடன் எழுந்தருளும் பாக்கியம் பெற்றவள் அல்லவா?

நாரதர் : ஒன்பது அவதாரத்திலும் ஐயனுடன் எழுந்தருளினீர்கள் என்றால் எப்படி...? ராமாவதாரத்தில் சீதை... கிருஷ்ணாவதாரத்தில் ருக்மணி...வாமனாவதாரத்தில் தேவி!

ஸ்ரீ தேவி : நாரதா! இது கலகத்திற்கான கேள்வியா... இல்லை அறிந்து கொள்வதற்கு ஆசைப்படுகிறாயா?

நாரதர் : அறிந்து கொள்ளவே ஆசைப்படுகிறேன்...

ஸ்ரீ தேவி : வாமன அவதாரத்தில் வாமனின் உபநயன வைபவத்தின் போது...சரஸ்வதி ஐயனுக்கு ஜபமாலை அளித்தாள். தேவதைகள் தாழங்குடைகள் தர—ஸப்தரிஷிகள் தர்ப்பைகள்—குபேரன் பஞ்சபாத்திரம்—

பிரம்மதேவர் கமண்டலம் என்று ஆசீர்வாதம் நடக்கும் போது, கௌரி முதல் பிக்ஷயை அளித்தாள்...என் ஐயனின் திருமார்பில் அலங்கரித்த பூணூலில் கட்டியிருந்த மான்தோலில் இந்த எளியவள் எழுந்தருளினேன்...இது உனக்குத் தெரியாததா என்ன?

நாரதர் : ஆகா...! மூவடி அளந்த முகுந்தனின் இதய கமலத்தில் வாசம் புரியும் தாங்கள் ...அந்த வாமன அவதாரத்தில் மான்தோலில் வாசம் புரிந்தது எத்துணை சிரேஷ்டம்!

பூமி பிராட்டியார் : நாரதா! எனது நெடுநாளைய ஓர் ஆசையை எம்பெருமானிடம் சமர்ப்பிக்க நீ ஒரு நல்ல தருணத்தைத் தந்தாய்! பிரபோ! இந்த பூமிபிராட்டியாருக்கு தேவரீரிடம் ஒரு புனிதமான விக்ஞாபனம்... ஒரு பவித்ரமான வரம்!

மகாவிஷ்ணு : தேவி! சந்திரகாந்த சொரூபிணி! கமல வாசினி! யாது வரம் வேண்டும்...? கேள்!

பூமி பிராட்டியார் : ஓங்கி உலகளந்த உத்தமனே! இந்த அடியவள்... உமது பேர்ப் பாடிப் பைந்தமிழ் பாமாலை பாட வேண்டும்... கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா! உம்மைப் பாடி பறை கொண்டு யாம் பெறும் இன்பம் பெருக...கோடிக் கோடி குடலைப் பூ மாலைக் கட்டி உம் கழலடியிணைக்கு சாத்தி மகிழ வேண்டும்! மாலே! மணிவண்ணா! இதுவே இந்த பூமி பிராட்டியாரின் பிரார்த்தனை!

விஷ்ணு : பூமிதேவி! உனது ஆசையை யாம் பூர்த்தி செய்வோம். நாரதரின் விருப்பமும் ஈடேறும். அன்று துஷ்ட சம்ஹார சிஷ்ட பரிபாலனத்திற்காக யாம் பூமலாகத்தில் அவதரித்தோம்... இன்று சிஷ்டர்களைபரிபாலிப்பதற்காக மட்டும் எமது பன்னிரு அம்சங்களையும் பற்பல வர்ணங்களில் பூலோகத்தில் அவதரிக்கச் செய்வோம்.

லோகத்தை உத்தாரணம் செய்வதற்காக அவதரிக்கும் அவர்களை பன்னிரு ஆழ்வார்கள் என்று அகிலமே ஏற்றிப் புகழும். ஆழ்வார்கள் பன்னிருவரும், எமது கல்யாண குண வைபவம் எனும் கடலை மேகங்களாக்கி அந்த அருள் மேகத்தை பக்தி மழையாகப் பொழிந்து எங்கும் பேரானந்த வெள்ளத்தை பெருகச் செய்வர். நமக்கு அருந்தமிழ்த் தேனால் திருமஞ்சனம் செய்வர்...

வேதத்தின் சாரத்தைப் பக்தர்கள் புரியும்வண்ணம் அமுதத் தமிழில் பாடுவர்... அந்தப் பாமாலைகளை நாலாயிரத் திவ்ய பிரபந்தம் என்று பிரபஞ்சமே கொண்டாடும்... நமது பெரிய திருவடி பூவுலகில் எமது பரம பக்தனாய் அவதரிப்பான்... அவனுக்குக் குமாரத்தியாக... கோதையாக என் உளம் கவரும் பக்தையாக... கோவிந்தனைக் கொண்டாடும் ஆண்டாளாக... நீ அவதரிப்பாய்...

பூமி பிராட்டி : சுவாமி...! இந்த எளியவள் தன்யானேன்! ...தமிழ்ப் பாமாலை எனும் பூமாலையால் தேவரீரின் திருவடிக் கமலங்களை ஆராதிக்கும் சுக்ருதம் கண்டேன்.

கருடாழ் : சர்வலோக சரண்யா! பூவுலகில் பிறப்பு எடுப்பதால் எம்பெருமானுக்கு திருத்துழாய் கைங்கரியம் செய்யும் திருத்தொண்டினை... இந்த அடியவனுக்கு அருளிச் செய்தீர்... தாமோதரா! உமது தங்கமணி திருவடிக் கமலங்களுக்கு... எனது அநேக கோடி வந்தனங்கள்!

ஸ்ரீமந் : எல்லோர்க்கும் மங்களம் உண்டாகட்டும்... மங்களானுபவந்து!

நாரத : நாராயணா... நாராயணா!

[எல்லோரும் நாராயணனைப் புகழ்ந்து போற்றுதல்]

—திரை—

## காட்சி : 2

இடம் : திருக்கோவில் சந்நதி

கதாபாத்திரங்கள் : முகுந்தபட்டர்-பதுமவல்லி-அர்ச்சகர்-விஷ்ணுசித்தர்

(ஆலயத்தில் ஆராதனை நடக்கிறது - முகுந்த பட்டர், பதுமவல்லி பெருமானைச் சேவித்தல்)

குரல் :- பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து என்று சிறப்பிக்கப்படும் முத்தும் முத்தமிழும்... முதன்மை பெற்று விளங்கும் பாண்டியநாடு... அங்கே... வில்லி எனும் வேடுவனால் நிர்மாணிக்கப்பட்ட திவ்ய க்ஷேத்ரம்... ஸ்ரீவில்லிபுதூர்... ஸ்ரீமந் நாராயணன் வடபத்ரசாயி எனும் திருநாமம் பூண்டு...அர்ச்சாவதார மூர்த்தியாக எழுந்தருளி சேவை சாதிக்கும்... சுந்தர மான திவ்ய க்ஷேத்ரம்...

அங்கு வசித்து வந்த... அனந்தனைப் பாடும் அடி யார்களுள் முகுந்தபட்டர்—அவரது பாரியாள் பதும வல்லி... இத்தெய்வீக தம்பதியர்க்கு வடபத்ரசாயின் பேரருளால்... குரோதன ஆண்டு... ஆனிமாதம்... சுக்ல ஏகாதசி... சுவாதி நக்ஷத்திரம் கூடிய சுபயோக சுப தினத்தில் பெரிய திருவடியின் அம்சமாக ஓர் ஆண் குழந்தை பிறந்தது... அக்குழந்தைக்கு விஷ்ணுசித்தர் என்று நாமகரணம் சூட்டினர் .. விஷ்ணுசித்தனும் வளர்ந்து வாலிபனானான்.

வசுதேவ சுதம் தேவம்—கம்ஸசாணூர மர்தனம்
தேவகீ பரமானந்தம்—க்ருஷ்ணம் வந்தே
ஜகத்குரும்!!

(விஷ்ணுசித்தர் தனி தோற்றம்)

குரல் : விஷ்ணுசித்தன் பால்மணம் மாறா பருவத்திலேயே, பரந்தாமனின் பேரருளைப் பெற்றவன். எம்பெருமானுக்குத் திருத்துழாய் கைங்கர்யம் செய்யும் திருத்தொண்டன்!

(மேடையில் இருள்-மீண்டும் ஒளி)

(முகுந்தபட்டர், பதுமவல்லிக்கு அர்ச்சகர் சடாரி சாத்தி, தீர்த்தம் துளசி கொடுத்தல்-இருவரும் பகவானை வணங்குதல்)

(விஷ்ணுசித்தர் பூமாலையுடன் ஆலயத்திற்கு வருதல்—அர்ச்சகரிடம் பூமாலை கொடுத்தல்)

அர்ச்ச : சுவாமி எம்பெருமானுக்கு... உங்க பிள்ளை விஷ்ணுசித்தரின் பூமாலை, என்றால் கொள்ளை இன்பம்...

முகுந்த : சுவாமி!... அவனும் தான் நாள் தவறாமல்... வேளை தவறாமல் திருமாலுக்கு திருமாலைச் சாத்தி சேவிக்கிறான்...

விஷ்ணு : அதனால் தான் தந்தையே! பெருமானுக்கு ஒரு நந்தவனம் அமைக்கும் பாக்கியத்தை அருளவேண்டும் என்று தினமும் பிரார்த்திக்கின்றேன்...

அர்ச்ச : உன் ஆசை பூர்த்தியாகும்... நம் உப்பில்லா அப்பன் உனது ஒப்பிலா ஆசையை நிறைவேற்றுவான்... மங்களானுபவந்து!

(கற்பூர ஆராதனை நடக்கிறது... அர்ச்சகர் பிரசாதம் கொடுத்தல்—முகுந்தபட்டர் பாடுதல்)

—திரை—

## காட்சி : 3

இடம் : முகுந்தபட்டர் இல்லம்

கதாபாத்திரங்கள் : முகுந்தபட்டர் - பதுமவல்லி - விஷ்ணு சித்தர்

(முகுந்தபட்டர் ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடிக் கொண்டிருத்தல் - பக்கத்தில் பதுமவல்லி நிற்கிறாள்.)

முகுந்த : எங்கே இன்னும் நம் கண்மணியைக் காணவில்லை...?

பதும : சுவாமி! நம் விஷ்ணுசித்தன் பெருமானுக்கு நந்தவனம் அமைப்பதற்கு அல்லும் பகலும் பாடுபடுகிறான். இந்த சின்ன வயதில் எப்பேர்ப்பட்ட பக்தி!

முகுந்த : பதுமவல்லி! நீ சொல்வது என்னவோ வாஸ்தவம் தான்... இருந்தாலும்... அவன் போக்கு எனக்கு பிடிக்கவில்லை...

பதும : ஏன்... சுவாமி?

முகுந்த : பின்ன என்ன...? குருவிடம் சென்று வித்தை பயிலுவதில் அவனுக்கு அக்கரை போதாது... ஏதோ... நான் சொல்கிறேன் என்பதற்காக போய் வருகிறான்.

பதும : போகப் போக சரியாகிவிடும்.

முகுந்த : நான் அவனைத் தட்டிக் கேட்டால்... நீ அவனுக்காக பரிந்து பேசுகிறாய்... அவனுக்கு என்னிடத்தில் பயமே இல்லை!

பதும : சுவாமி! நமது அன்புக் குமாரனைப் பற்றி எதுக்காக இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்... அவன் காதுகளில் வீழ்ந்தால் மிகவும் வேதனை கொள்வான்... அதோ... அவனே வருகிறான்.

(விஷ்ணுசித்தர் ஏடும், எழுத்தாணியுடன் வருதல்)

பதும : விஷ்ணு! வாப்பா...

முகுந்த : விஷ்ணு! இன்று குருவிடம் என்ன கற்றாய்...?

பதும : சுவாமி! வீட்டிற்கு வந்தவுடனேயே... நீங்கள் கேள்வி கேட்பதா... சோர்ந்து போய் வந்தவனுக்கு பால் சோறு ஊட்ட வேண்டாமா...?

விஷ்ணு : அம்மா! நீங்கள் சொல்வதுதான் சரி... முதலில் என் வயிற்றுப் பசியைப் போக்குங்கள்...

முகுந்த : விஷ்ணு! உன்னை நான் உலகு போற்றும் மாபெரும் பண்டிதனாகக் காண ஆசைப்படுகிறேன்... ஆனால் நீயோ... ஏட்டையும், எழுத்தாணியையும் எட்டிக்காயாக நினைக்கிறாய்... வெறுக்கிறாய்... உன் போக்கை நினைத்தால்... என் நோக்கம் நிறைவேறாது என்று தோன்றுகிறது!

விஷ்ணு : தந்தையே! நான் எங்கும்... எதிலும்... எப்பொழுதும் எனது நாராயணனையே காண்கிறேன். தினமும் திருக்கோவில் செல்வதனையும், திருமாலுக்குத் திருத்துழாய்க் கைங்கரியம் செய்வதனையுமே நான் பெற்ற பெரும் பேறாகக் கொள்கிறேன்...

பதும : வாடா கண்ணா! உனக்கு பிடிக்குமே என்று சர்க்கரை அவல் செய்து வைத்துள்ளேன்!

விஷ்ணு : பெருமானுக்குக் கூட அவல்னா ரொம்ப இஷ்டம்... இல்லேன்னா... கல்லும் மண்ணும் கலந்த

அவலை தின்றுவிட்டு பால்ய சிநேகிதன் குசேலனுக்கு அஷ்ட ஐசுவரியங்களையும் கொடுப்பானா என்ன...?

பதும : அவல் கொடுத்த குசேலனுக்கு அநுக்கிரகம் செய்த அந்த பரந்தாமன், ஆரம் கொடுக்கும் உனக்கு அத்தனை சாஸ்திரங்களையும் கலைகலையும் அறிந்து கொள்ளும் சக்தியைக் கொடுக்காமலா போய்விடுவான்?

முகுந் : இரண்டு பேரும் இப்படி பேசி பேசியே காலத்தை கடத்துங்கள்.

பதும : அவன்... உங்கள் புத்திரன்... இன்னும் கொஞ்ச நாள் போகட்டும்... நீங்கள் அவன் தந்தை என்று சொல்லிக் கொள்வதில் பெருமை அடையப் போகிறீர்கள்!

விஷ்ணு : ஆம் தந்தையே! இந்த விஷ்ணுசித்தன் குருகுலம் செல்லாமலேயே... குவலயம் கொண்டாடும் மேதை யாவான்... எப்படி என்று கேட்காதீர்கள்... குன்றைக் குடைப் பிடித்த கோகுலத்துப் பாலன்... என்னை ஒரு போதும் கைவிடமாட்டான்...

பதும : குருடனுக்குக் கண் வேண்டும்... கோகுலத்துக் கண்ணன் கொடுத்தால் என்ன...? குருகுலத்து ஆசான் கொடுத்தால் என்ன?... இருந்தாலும் குருகுலம் போவதனை மட்டும் நிறுத்திவிடாதே!

விஷ்ணு : ஆகட்டும் தந்தையே!

—திரை—

## காட்சி : 4

இடம் : குருகுலம்

கதாபாத்திரங்கள் : குருதேவர்—விஷ்ணுசித்தர்— வில்லி—கண்டன்—மகாவிஷ்ணு

[குருநாதர் உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்து இருக்க-விஷ்ணுசித்தர் அவரை வணங்கி நிற்கிறான்]

குரு : ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளியிருக்கும் பரமபதம் பொன் மயமான திவ்ய க்ஷேத்ரம்! அந்த பரமபதம்... இந்த பரந்த உலகத்தை விட மும்மடங்கு பெரிதாக விளங்குகிறது...அதனால் தான் பரமபதத்தை திரிபாதம் என்பர்...திரிபாதம் என்றால் மூன்று திருப்பாதங்களைக் கொண்டது என்று பொருள்... இப்பேர்ப்பட்ட பரம பதத்தில் ஜெகஜோதியாக விளங்குகிறது ஸ்ரீ வைகுண்டம் எனும் திருக்ஷேத்ரம்... அத்திருக்ஷேத்ரம் திருநாடு என்று போற்றப்படும் பேரொளி பொங்கும் ஆனந்த க்ஷேத்ரம்!

விஷ்ணு : குருதேவா! பரமபதத்தைப் பற்றித் தெரிந்து கொண்டோம்... அதே போல் இந்த ஸ்ரீ வில்லி புதூரைப் பற்றியும் தெரிந்து கொள்ள ஆசைப்படு கிறேன்...குருதேவர் திருவாய் மலர்ந்து அருளி...இந்த எளியவனை அனுக்கிரஹிக்க வேண்டும்.

குரு : இரண்டும் ஒன்றுதானே...! எங்கும் பரந்து... என்றும், எதிலும், எப்பொழுதும் நிலைத்து நிற்கின்ற பரம்பொருளாக விளங்கும், ஸ்ரீமந் நாராயணன் ...வடபத்ரசாயி என்னும் திருநாமத்துடன் நமது வில்லிப்புதூரில் கோவில் கொண்டுள்ளார்...

பக்தி வளமிக்க இப்புனித பூமியிலே...பக்தர் நலம் பெருக...வைணவம் மேன்மையுற்று விளங்க...உருவான புண்ணிய தலம் தான் இந்த ஸ்ரீ வில்லிபுதூர் எனும் திருப்பதி...ஒரு காலத்தில் இங்கு கல்லும்...முள்ளும்... கற்பாறைகளும்... காட்டாறுகளும் காணப்பட்டன... இங்கு வேள்விப் புகை கிடையாது... வேத கோஷம் கிடையாது...இது வேடுவர்களின் பாசறை... வன விலங்குகளின் அட்டகாசம் நிறைந்த அபாய நகரம்... இங்கு வசித்து வந்த வேடுவர் கூட்டத்து தலைவனுக்கு வில்லி, கண்டன் என்று இரண்டு பிள்ளைகள்...ஒரு நாள் இந்த வில்லியும், கண்டனும் காட்டிற்கு வேட்டையாடச் சென்றனர்...அங்கே...

[மேடையில் இருள் — மீண்டும் ஒளி]

[வில்லியும் கண்டனும் வில்லும் அம்பும் தாங்கி நிற்கின்றனர்]

கண்டன் : அண்ணா! அதோ பார்...ஒரு பயங்கரமான புலி...நான் அதனை வேட்டையாடி வருகிறேன்.

வில்லி : நீ என் தம்பி அல்லவா! பாயும் புலியென நீயும் தாவிப் புறப்படு...அந்தப் புலியைக் கொன்று...அதன் பல்லைப் பிடுங்கி வா...உன் வருங்கால மனைவிக்குத் தாலி கட்டலாம்...

[கண்டன், வில்லியை வணங்கி... வில்லில் நாணேற்றி... புலியைத் துரத்துகிறான்— நிழற் காட்சியில் புலி ஓடுவதனையும், கண்டன் துரத்துவதனையும் காண்பிக்கின்றோம் — முடிவில் புலி மறைந்து இருந்து, கண்டன் மீது பாய்ந்து அவனை அடித்துக் கொல்கிறது—கண்டனின் உடலைத் தின்னப் போகும் தருணத்தில், ஒரு மரம் ஒடிந்து புலி மீது விழுகிறது—புலியும் இறந்து போகிறது]

—மேடையில் இருள்-மீண்டும் ஒளி—

— வில்லி தனிமொழி —

வில்லி : அந்திசாயப் போகுது...இன்னும் கண்டனைக் காணவில்லையே! வீரம் பேசிப் போனவன் வீழ்ந்து விட்டானா...? பாய்ந்து புறப்பட்டவனை அந்தப் புலி பதுங்கி இருந்து பாய்ந்து கொன்றதோ... என் ஆருயிர்த் தம்பியை...அந்த கொடிய விலங்கு வேட்டையாடி விட்டதா...? கண்டா... ஐயோ...! என் தம்பி கண்டா ...நீ இல்லாமல் நான் மட்டும் எப்படி ஊர் செல்வேன் ...பெற்றோர்களுக்கு என்ன பதில் சொல்வேன்...? உடன் பிறந்த வீரத் திருமகனே திக்குத் தெரியாத இந்த காட்டில் உன்னை எப்படி கண்டு பிடிக்க போகிறேன்...

[ஓடுகிறான்]

[மேடையில் இருள் -மீண்டும் ஒளி)

—காட்சி மாற்றம்—

(கண்டன் இறந்து கிடக்கும் இடத்திற்கு வருகிறான்—வில்லி தம்பியின் உடலைப் பார்த்து கதறுகிறான்]

வில்லி : கண்டா...என்னை விட்டு போய்விட்டாயா...? ஆறிலும் சாவு நூறிலும் சாவு என்பார்கள்... நீ ஆறில் சாவாய் என்று நான் கனவிற் கூட கண்டதில்லையே... உன் வீரத்துக்கு விலை பேசிய பாபியாகி விட்டேனே... நான்! தம்பீ... என் தங்கமே! என் மாணிக்க மணியே! மனைவி தாலிக்கு பல் கொண்டு வா என்றேன்... உன்னை இந்த பொல்லாத புலி பலி கொண்டு விட்டதே...இனி...நான் என் செய்வேன்...நான் மட்டும் எதற்காக உயிர் வாழ வேண்டும்...?

ஸ்ரீ ராமருக்கு ஓர் பரதன்...என்று பூவுலகம் கொண்டாடுவது போல இந்த கண்டனுக்கு ஒரு வில்லி என்று வையகம் வாழ்த்துப் பாடட்டும்... இந்த பாறையில்

முட்டி மோதிக் கொண்டு... என் ஆவியைப் போக்கிக் கொள்கிறேன்...

(வில்லி பாறையில் மோதிக் கொண்டு மயக்கமுற்று கீழே விழுதல்— ஸ்ரீமந் நாராயணன் பிரசன்ன மாகிறார்-வில்லி மயக்கம் தெளிந்து எழுதல்-வலம் வந்து நமஸ்கரித்தல்)

நாரா : வில்லி! என் போல்... சகோதரன் மீது நீங்காத பக்தி பூண்ட உனக்கு நற்கதி அருளுவோம். ஒரு காலத்தில் யாம் இந்த ஆலமரத்து தண்ணிழலில்... அனந்தன் மீது அருதுயில் கொண்டிருந்தோம்... இந்த இடத்தில் எமக்கு ஒரு திருக்கோயில் நிர்மாணிக்கும் நற்பேற்றினை அடைவாயாக!

வில்லி : பெருமானே! நான் உடன்பிறந்தவனை எண்ணித் துடிக்கிறேன்... நீயோ குடியிருக்கக் கோவில் கட்டு என்கிறாய்...

நாரா : உன் உடன்பிறந்தானை உயிர் பெற்று எழச் செய் வோம்... கவலைப்படாதே...

வில்லி : அது போதும்... அவன் உயிர் பெற்றால் உமக்கு உயர் கோபுரம் அமைப்போம்... இந்த காட்டைத் திருத்தி நகரம் ஆக்குவோம்... அறம் தெரிந்த அந்தணர் களை வசிக்கச் செய்வோம். இது சத்தியம்!

நாரா : பக்தா! உன் எண்ணம் ஈடேறும்...உனக்கு போதிய செல்வத்தைத் தருவோம்... அதோ தெரிகின்ற குகை யில் உனக்காக பொன்னும் பொருளும் மலைபோல் குவித்துள்ளோம்... உனது ஆலயத் திருப்பணி அமோக மாக நடைபெறும்... உன்னால் நிர்மாணிக்கப்படும் இத்திருத்தலம் உனது பெயராலேயே வில்லிபுதூர் என்று அழைக்கப்படும்.

(ஸ்ரீமந் நாராயணனின் அனுக்கிரஹத்தினால், கண்டன் உயிர் பெற்று எழுகிறான்—ஸ்ரீமந்

நாராயணன் மறைகிறார் — அண்ணனும் தம்பியும் கட்டித் தழுவிக் கொள்கின்றனர்.)

ண்டன் : அண்ணா! நான் சாகவில்லையா?...

வில்லி : தம்பி! நடந்த எல்லா விருத்தாந்தங்களையும் நான் விவரமாகக் கூறுகிறேன்... முதலில் நாம் அந்த குகைக்குச் செல்வோம்...

(மேடையில் இருள்—மீண்டும் ஒளி—குருதேவர், விஷ்ணுசித்தர் காண்பித்தல்)

குருதேவர் : அண்ணனும் தம்பியும் குகைக்கு ஓடினார்களா... போகும் வழியில் வில்லி ஸ்ரீமந்நாராயணனின் பேரருளைப் பற்றி கண்டனிடம் பிரஸ்தாபித்தான். கண்டனும், வில்லியும், ''நாராயணா! நாராயணா!'' என்று அவன் நாமத்தைத் துதித்துத் துள்ளிக் குதித்தார்கள். குகையிலே கொட்டிக் கிடந்த பொன்னையும், பொருளையும் மூட்டையில் கட்டிக் கொண்டு ஊருக்குத் திரும்பினார்கள்.

பெற்றோர்களிடமும், மற்றோர்களிடமும்... நடந்த அத்தனை விருத்தாந்தங்களையும் ஒன்றுவிடாமல் விவரமாகக் கூறினார்கள்... வேடுவர்கள் காட்டை அழித்து அழகிய நகரத்தை நிர்மாணித்தனர். அழகிய வீடுகளைக் கட்டினர். ஸ்ரீமந்நாராயணனுக்கு அழகிய விண் விமானத்துடன் கூடிய ஆலயம் எழுப்பினர். வைணவ பெரியோர்களையும், அறம் அறிந்த அந்தணர்களையும் அந்நகரத்தில் வசிப்பதற்கு வழி செய்தனர்... ஸ்ரீமந்நாராயணனை அர்ச்சாவதார ரூபத்தில் எழுந்தருளச் செய்தனர்.

விஷ்ணு : அர்ச்சை நிலை என்றால் என்ன சுவாமி...?

ருகு : ஸ்ரீமந் நாராயணன் பக்தர்களைப் பரிபாலிப்பதற்காக பரம், வியூகம், வியவம், அந்தர்யாமி, அர்ச்சை எனும் ஐந்து சொரூபங்களால் திவ்ய தரிசனம் தருகி

கிறார்... இந்த ஐந்து நிலைகளிலும் பிராட்டியாரும் பெருமானுடன் சேர்ந்து இருந்து பக்தர்களை பரிபாலிக்கிறாள்...

அர்ச்சை நிலை என்பது எம்பெருமானைத் திருவுருவத்தின் மூலம் தரிசித்து, துதித்து, பக்தி செலுத்தி வழிபடுவது... இக்கலியுகத்தில் பக்தர்கள் சுலபமாக தமது திருவடியை அடைந்து, பேரின்பம் பெறவேண்டும் என்பதற்காக எம்பெருமான் அமைத்துக் கொண்ட நிலை!

எம்பெருமானின் அர்ச்சை நிலை நான்கு வகைப்படும்.

தானாக அவதரிப்பது—ஸ்வயம் வியக்தம்

தேவர்களால் பிரதிஷ்டிக்கப்பட்டது—தைவம்

சித்தர்களால் நிறுவப்பட்டது—சைத்தம்

மனிதர்களால் ஏற்படுத்தியது—மானுஷம்

அர்ச்ச நிலையிலேயே அனந்தனைச் சேவிப்பதற்கு அடியார்களுக்குப் பேரானந்தமாகத் தெரிகிறது.

விஷ்ணு : வில்லியும் கண்டனும் எம்பெருமானை அர்ச்சை நிலையில்... நம் ஊரில் கோவில் கொள்ளச் செய்தார்கள்... எப்பேர்ப்பட்ட பாக்கியசாலிகள்!

குரு : அவர்கள் கோவில் கட்டி சம்புரோஷணம் செய்தனர் ...வைஷ்ணவப் பெரியோர்கள் வில்லியையும், வேடுவர்களையும் வாழ்த்தினர்... வில்லியால் நிர்மாணிக்கப்பட்ட இந்த திருத்தலம் ஸ்ரீவில்லிபுதூர் என்ற திருநாமத்தைப் பெற்றது... எம்பெருமான் வடபத்ரசாயி என்ற திருநாமத்துடன் பக்தர்களை ரக்ஷித்துப் பேரருள் பாலித்து வருகிறார்...

விஷ்ணு : குருதேவா...! வேடுவர் குலத்தில் பிறந்தாலும் அவர்கள் எப்பேர்ப்பட்ட பதவியைப் பெற்றிருக்கிறார்கள்... பிறவி என்றெடுத்தால் அதனைப் பயனுள்ளதாக்க வேண்டும்...

குருதேவா! இந்த எளியவன், எம்பெருமானுக்கு ஒரு நந்தவனம் அமைக்க சித்தம் கொண்டு இரவு பகலாக பாடுபடுகிறேன். எனது பகவத்கைங்கரியம் வெற்றி அடைய குருதேவர் அருள்பாலிக்க வேண்டும்.

குரு : விஷ்ணுசித்தா! உன் திருப்பணி சிறக்கும்!

விஷ்ணு : குருவே சரணம்...!!

[விஷ்ணுசித்தர் குருவை நமஸ்கரித்தல்]

குரல் : குருர் ப்ருஹ்மா குருர் விஷ்ணு:
குருர் தேவோ மஹேச்வர:
குருஸ் ஸாக்ஷாத் பரம் ப்ரும்ம
தஸ்மை ஸ்ரீ குரவே நம!!

[என்ற சுலோகம் ஒலிக்கிறது]

—திரை—



## காட்சி : 5

இடம் : முகுந்தபட்டர் இல்லம்

கதாபாத்திரங்கள் : முகுந்தபட்டர் — விஷ்ணுசித்தன்— பதுமவல்லி

*[முகுந்தபட்டரும், விஷ்ணுசித்தரும் உரையாடிக் கொண்டிருத்தல்]*

— Half way Opening —

விஷ்ணு : தந்தையே! குருவிடம் சென்று வித்தையைக் கற்றுக்கொள்...கற்றுக் கொள் என்று என்னை அடிக்கடி வற்புறுத்தாதீர்கள்... அடர்ந்த காட்டை அந்தணர் வாழும் நாடாக்கினான் வில்லி! வேடுவர் குலத்தில் பிறந்தவன் விவேகியானான்; ஏடறிவு இல்லாதவன் இன்று எல்லோராலும் தொழுதற்குரியவன் ஆனான். ஏட்டுச் சுரக்காய் கறிக்கு உதவாது...ஏடும் எழுத்தாணியும் எனக்குத் தேவை இல்லை... குவளையும் மண் வெட்டியும் போதும்...வடபத்ரசாயி பெருமானுக்கு நந்தவனம் அமைக்கப் போகிறேன்.

முகு : விஷ்ணு...உன்னைப் பற்றி... நான் எண்ணியதெல்லாம் வெறும் கற்பனைக் கனவுகள் தானா...? உன்னைப் பைந்தமிழ்ப் பாமாலை பாடும் புலவனாகக் கருதினேன்... அந்தக் கருத்து வெறும் கானல்நீர் தானா...?

விஷ்ணு : பெருமானுக்குப் பாமாலை சாத்தினால் என்ன...? பூமாலை சாத்தினால் என்ன... இரண்டும் பகவத் சேவை தானே...

முகு : பூமாலை வாடிவிடும்... பாமாலை... என்றென்றும் நிலைத்திருக்கும்! பக்தர்கள் பாடிப்பாடி பரவசம்

கொள்வர்... பரமன் மீது பாடுகின்ற பாமாலையைத் துதிப்போர்க்குத் துன்பம் போகும்... பேரானந்தம் பொங்கிப் பெருகும்...

விஷ்ணு : இதற்கு மேல் என்னை வற்புறுத்தாதீர்கள்... நம் ஆலயத்தின் பக்கம் நந்தவனம் அமைத்து... அனந்த னுக்கு முப்போதும் பூமாலை தொடுத்துக் கொடுப் பேன்... இதுவே என் லக்ஷ்யம்... இதுவே என் பகவத் தொண்டு... இதுவே என் உள்ளம்...உணர்வு எல்லாம்... நந்தவனமே... குருகுலம்...

[விஷ்ணுசித்தன் போகிறான்]

முகு : பதுமவல்லி... பதுமவல்லி...

[பதுமவல்லி உள்ளிருந்து வருகிறாள்]

பதும : ஏன் சுவாமி! எதற்கு கோபத்துடன் காண்கிறீர்...?

முகு : நீ பெற்ற பிள்ளை நம் வம்சத்தைத் தழைக்கச் செய்பவன் அல்ல; வம்ச விருத்தியை வேரொடு அழிக்கச் செய்பவன்...

பதும : பொழுது விடிந்தால் போதும்... உங்களுக்கு நம் புதல்வனை வசைமாரி பொழிவதே வேலை ஆயிற்று... ஊரில் உள்ளவர்கள் நம் கண்மணியைப் பற்றி பெருமை யாகத் தான் பேசுகிறார்கள்...

முகு : நீ விட்டுக் கொடுக்க மாட்டாயே...

பதும : என்ன இருந்தாலும்... அவன் உங்கள் பிள்ளை... பதினெண் புராணங்களையும் கற்றுத் தெளிந்த பெரும் பண்டிதரான உங்களுக்குப் பிறந்தவன்... இன்றைக் கில்லாவிடினும்... என்றைக்காவது ஒருநாள் இந்த நாடும்... ஏடும் போற்றிப் புகழ, வாழத்தான் போகி றான்...

முகு : இப்படியும் ஒரு கனவு கண்டு கொண்டிருக் கின்றாயா... பதுமவல்லி...! இந்த விஷயத்தில்... நாம்

கொடுத்து வைக்கவில்லை... ஏடும் எழுத்தாணியும் எடுக்கச் சொன்னால் அவன் குவளையும்...மண்வெட்டியும் அல்லவா தூக்குகிறான்...? வேதம் படி என்றால்... வெண்ணை உண்ட கண்ணனுக்கு வெள்ளை மலர் தான் பிடிக்கும் என்கிறான்... குருகுலம் போய்வா என்றால் குவளை மலர் என் கண்ணனுக்கு கொள்ளை இன்பம் என்கிறான்... நந்தகுமாரனுக்குப் பிருந்தாவனம் அமைக்கிறானே தவிர... நம் குலகௌரவத்தை காக்கும் குருகுலம் போகமுடியாது என்கிறானே... உபநிஷத் என்றால் உழவாரப்பணி என்கிறான்... வேதம் என்றால்... போதும் என்று காதை அல்லவா பொத்திக் கொள்கிறான்...

பதும : இதில் தவறு ஒன்றும் இல்லையே சுவாமி...! வேடன் வில்லி என்ன வேதசிரோன்மணியா? சாஸ்திரம் தெரிந்தவனா...? இதிகாச புராணம் படித்தவனா...? வில்லும் அம்பும் எடுத்து வனவிலங்குகளை வேட்டையாடியவன் தானே...? அவன் இந்த பதியை நிர்மாணிக்க வில்லையா...? வடபத்ரசாயிக்கு கோயில் அமைக்கவில்லையா...? நம் குமாரனோ அந்த கோவர்த்தன கிரிதாரிக்கு மிக அற்புதமான பூஞ்சோலை அமைத்திருக்கிறான்... நம் செல்வன் குருகுலம் போகாவிட்டாலும் இந்த வயதில் போதுமான அளவு கேள்வி ஞானம் உடையவனாகத் தான் இருக்கிறான்...

முகு : இப்படித்தான் உன் பிள்ளையும் பேசுகிறான்... சும்மாவா சொல்கிறார்கள்... நூலைப் போல சேலை... தாயைப் போல பிள்ளை என்று... பதுமவல்லி... நான் மகனை வெறுத்துப் பேசுகிறேன் என்று எண்ணாதே! இப்படியே இவன் சதாகாலமும்... கோவில், நந்தவனம் என்று இருந்து விட்டால் பொறுப்பு இல்லாமல் போய் விடுவான்... குருகுலம் தான் போகவில்லை... குடும்பம் என்றால் என்ன... என்பதனையாவது தெரிந்து கொள்ள வேண்டாமா...?

பதும : குடும்ப பொறுப்பு வரவேண்டும் என்றால்... சீக்கிரமே அவனுக்கு ஒரு நல்ல பெண்ணாகப் பாருங்கள்...

முகு : அவனுக்குத் திருமணத்தை முடித்து விடலாம் என்கிறாயா...?

பதும : நீண்ட நாட்களாக எனது ஆசையும் அதுதான்...

முகு : நெடுநாளைய ஆசை என்றால்... பெண்ணையும் நிச்சயித்து விட்டாயா...?

பதும : அடுத்த ஊர்தான்... நமக்கு சற்று தூரத்து உறவும் கூட... பெண்ணின் பெயர் விரஜை... அவளை மருமகளாக அடைவதற்கு நாம் கொடுத்து வைத்திருக்க வேண்டும்... செதுக்கி எடுத்த சிலைமாதிரி இருப்பாள்... ஆடலும்... பாடலும் அவளுக்கு கை வந்த கலை... அழகுன்னா... அழகு... கொள்ளை அழகு...

முகு : அப்படி என்றால்... இரண்டு பேரும் நாளைக்கே புறப்படுவோம்...! அவள் வரும் முகூர்த்தமாவது இவனுக்கு நல்லகாலம் பிறக்கட்டும்!

—திரை—



## காட்சி : 6

*கதாபாத்திரங்கள் : முகுந்தபட்டர் — பதுமவல்லி — விஷ்ணுசித்தர்—விரஜை—அர்ச்சகர்*

*[கல்யாண மந்திரம் ஒலிக்கிறது]*

குரல் : மாங்கல்யம் தந்துனானேன மம ஜீவன ஹேதுநா கண்டே பத்னாமி ஸுபகே த்வம் ஜீவ சரதஸ்சதம் !!

*[கெட்டி மேளம் முழங்குகிறது]*

*[விஷ்ணு சித்தர், விரஜைக்குத் தாலி கட்டுவதனையும் கூடியிருந்தோர் அக்ஷதை தூவுவதனையும் நிழற்காட்சியில் காண்பிக்கின்றோம்]*

—மேடையில் ஒளி—

*[பதுமவல்லி குத்துவிளக்குத் துடைத்து அலங்காரம் செய்கிறாள்—முகுந்தபட்டர் ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருத்தல்]*

பதும : நம் மருமகளும் இந்த குத்து விளக்கு மாதரி அவள் நம் குடும்பத்திற்கு ஒளியேற்ற வந்த மகாலட்சுமி!

முகு : எல்லாம் வடபத்ரசாயியின்!! கருணை! அவனருளால் தான் நம் புதல்வனுக்கு இந்த...பெரிய இடத்தில் இத்தனை பெரும் சம்பந்தம் கிடைத்தது.

பதும : ஏங்க...நம்ம மருமகளுக்கு நம் கண்ணே பட்டு விடும் போலிருக்கிறது... என்ன அழகு... பேச்சிலேதான் என்ன இனிமை...கல்யாணத்துக்கு வந்த ஒவ்வொருவரும்... இவுங்க ஜோடி பொருத்தத்தைப் பார்த்திட்டு.

எப்படி எல்லாம் புகழ்ந்து பேசினாங்க தெரியுமா? கண்ணனும் ராதையும் இப்படித்தான் இருந்திருப் பாங்க...அப்படின்னு சொன்ன ஒரு மாமி...இவுங் களுக்கு நூறு பூசணிக்காய் வாங்கி திருஷ்டி சுத்த வேண்டும் அப்படின்னு சொன்னாங்க...

முகு : இனி மேலாவது அவனுக்கு நல்ல புத்தி வரட்டும்...

பதும : நீங்கள் சொல்வது நல்லாயிருக்கே...அவன் என்ன புத்தி கெட்டுப் போயா...இருக்கான் நம் மருமக வந்த அதிர்ஷ்டம்...நம் கண்மணி... ஓகோன்னு வரப் போறான்...இந்த நாடே அவனைக் கொண்டாடப் போகிறது...

முகு : பதுமவல்லி...அவுங்க புறப்படவில்லையா?

பதும : தயாராயிட்டாங்க...பூஜை அறையிலே எம்பெரு மானை சேவிச்சுண்டு இருக்கா...

முகு : நானும் கூடப் போயிட்டு வர்றேன்.

பதும : நல்லா இருக்கு...அதுங்க...சின்னஞ்சிறுசு தனியா போயிட்டு வரட்டும்.

முகு : அதுவும் சரிதான்...

[உள்ளிருந்து விஷ்ணு சித்தர், விரஜை வருதல்— பெற்றோர்களை நமஸ்கரித்தல்.]

முகு : சௌபாக்கியவதியே...! தீர்க்க சுமங்கலீபவ...! நீங்கள் இருவரும் இணைந்த இந்த இல்லறத்தில்... என்றும் பொங்கும் மங்களத்துடன் புத்ர, பௌத்தரர் களுடன் வாழவேண்டும் என்று மீண்டும் மீண்டும் வாழ்த்துகிறோம்!!

பதும : விரஜை! கணவன்மார்களுக்குப் பெண்கள் வெறும் பாரியாளாக மட்டும் இருந்து ஒரு பிரயோஜனமு மில்லை...அவர்கட்கு நல்லது கெட்டதுகளை எடுத்துச் சொல்லும் மதியூக மந்திரியாகவும் இருக்க வேண்டும்.

விரஜை : உண்மை தான் அம்மா... இருந்தாலும்... என்னைப் பொறுத்த மட்டில்— எனக்கு மாதா, பிதா, குரு, தெய்வம் எல்லாமே இவர்தான்.

முகு : போகப் போக... இவனைப் பற்றி நீயே நன்கு தெரிந்து கொள்வாய்...எது எப்படியோ... விஷ்ணு சித்தனுக்குக் குடும்பத்தில் பொறுப்பு வரவேண்டும் என்பதற்காகத் திருமணம் செய்து வைத்தேன்...நல்லது கெட்டது தெரிந்து அவன்தான் நடந்து கொள்ள வேண்டும்.

விஷ்ணு : தந்தையே! என்னைப் பற்றி தாங்கள் போகப் போகப் புரிந்து கொள்வீர்கள்...விரஜை சதியாக வந்த பாக்கியம்...எனக்கு அரச போகத்தையும்...ஆனந்த வாழ்க்கையையும் தரத்தான் போகிறது.

முகு : எங்கள் பொறுப்பு முடிந்தது...இனிமேல்...உன் பாடு...அவள் பாடு... நாங்கள் சிறிது காலம் தேசாந் திரம் போய் வரலாம் என்று எண்ணுகிறோம்...

விஷ்ணு : முதலில் நாங்கள் இருவரும் கோவிலுக்குப் போய் வருகின்றோம்... என் விரஜைக்கு... நான் அமைத்திருக்கும் நந்தவனத்தைக் காண்பிக்க வேண் டாமா...?

விரஜை : சுவாமி! தாங்கள் நந்தவனம் அமைத்திருக் கிறீர்களா...? நான் கொடுத்து வைத்தவள்...நந்தவனம் அமைத்து...வண்ண வண்ண மலர்களால்...விதவித மான மாலைகள் தொடுத்து பகவானுக்கு அநுதினமும் சாத்த வேண்டும் என்ற எனது தணியாத ஆசை நிறை வேறப் போகிறது...

முகு : பதுமவல்லி...! சதிக்கு ஏற்ற பதிதான்!

விஷ்ணு : அதனால்தான்...அந்த வடபத்ரசாயி எங்கள் இருவரையும் சதி...பதியாக்கி அருள்பாலித்திருக் கிறான்.

[கோவில் மணி அடிக்கிறது—கோவில் அர்ச்சகர் பிரசாதத்துடன் வருகிறார்]

அர்ச் : வடபத்ரசாயி பெருமானுக்கு... சஹஸ்ரகலசாபிஷேகம் நடந்தது. பிரசாதம்...

ஸ்ரீய காந்தாய கல்யாண நிதயே நிதயேர்த்தி நாம்
ஸ்ரீவேங்கட நிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம்
தனம் தான்யம்...பஸூம் பகுபுத்ரலாபம்
ஸதஸம் வத்ஸரம் தீர்க்க மாயு:
ஸ்ரீபிரசன்ன வேங்கடேச ஸ்வாமி நே நம:
ஸ்ரீவடபத்ர சாயினே நம:
ஸஹஸ்ர கலாசபிஷேக பிரஸாத பல
ஸித்திரஸ்து—பகவத் கைங்கரிய பவித்திரஸ்து
ஸமஸத ஸன் மங்களாணி ஸந்து...

[பிரசாதம் கொடுத்தல்—அர்ச்சகர் மலர்மாலையை இருவரிடமும் கொடுத்து...மாலை மாற்றிக் கொள்ளச் செய்தல்...இருவரும் அர்ச்சகரை நமஸ்கரித்தல்...அர்ச்சகர் ஆசீர்வதித்தல்]

அர்ச் : மங்களாநு பவந்து...பதினாறும் பெற்று பெரு வாழ்வு வாழணும்!

—திரை—



## காட்சி : 7

இடம் : நந்தவனம்

கதாபாத்திரங்கள் : விஷ்ணுசித்தர்—விரஜை

[விஷ்ணுசித்தர், விரஜை நந்தவனத்தைச் சுற்றிப் பார்த்தல்]

விரஜை : சுவாமி! எப்பேர்ப்பட்ட அதிஅற்புதமான நந்த வனம் அமைத்திருக்கிறீர்கள்... பார்க்க கண்கோடி வேண்டும்... ஜாதி, முல்லை, பவளம், செண்பகம், அரளி, பிச்சி, தும்பை, விருபாக்ஷி... என்ன மணம் தேவலோகத்து பாரிஜாத பூந்தோட்டம் போல் அல்லவா காட்சி தருகிறது... அடாடா... எம்பெருமா னுக்கு ப்ரீதியான துளஸீ, பச்சை, தவனம் போன்ற செடிகள் பச்சை பசேலென்று... பூமாதேவிக்கு பச்சை வெண்பட்டு போர்த்தினாற் போல் அல்லவா தெரி கிறது...

விஷ்ணு : அதோ பார்த்தாயா...புன்னை மரம்... பலா...மா அதுமட்டுமா... தாமரைத் தடாகத்தைப் பார்த் தாயா...?

விரஜை : செந்தாமரையும், வெண்தாமரையும் குவளை யும் அல்லியும் எவ்வளவு நெருக்கமாக வளர்ந்து இருக் கிறது... இது தாமரைத் தடாகமா...? இல்லை... தாமரை விரிப்பா...? ஒரே பிரமிப்பாக இருக்கிறது... தேவலோகத்து மயனால் கூட இப்படி நிர்மாணிக்க முடியாது... சுவாமி!

விஷ்ணு : நந்தவனம் அமைத்த உன் நாயகனை... நீ வார்த்தைகளால் கனகாபிஷேகமே செய்துவிட்டாய்... ஆனால்... என் தந்தையார்... இதற்கு என்ன எதிர்ப்பு

தெரியுமா...? வேதம் படிக்க சொன்னால் விருபாக்ஷி எங்கே கிடைக்கும் என்றா அலைகிறாய்...? புராணம் படிக்க சொன்னால்... நந்தவனத்துக்கு பளிங்கு போல் மதிற்சுவர் கட்ட வேண்டாமா என்றா கேட்கிறாய்... என்றெல்லாம் எனக்குத் தினமும் அர்ச்சனை விழும்!

விரஜை : நல்ல காரியத்துக்கு எதிர்ப்பு வரத்தான் செய்யும். அதை எதிர்த்து நீச்சலடித்து முன்னேறுவது தான் புருஷ லக்ஷணம்...

விஷ்ணு : நன்றாகப் பேசுகிறாயே...?

[இருவரும் குவளையில் பூக்களைப் பறித்து போட்டுக் கொள்ளுதல்]

விரஜை : இந்த ஸ்ரீவில்லிபுதூருக்கு... வடபத்ரசாயி கோவில் அழகு... அந்த திருக்கோவிலுக்கு இந்த நந்தவனம் அழகு...

விஷ்ணு : இந்த நந்தவனத்துக்கு... இந்த விரஜை அழகு...

விரஜை : மலர் சேர்ந்தால் தான் நாருக்கு மணம் என்பார்கள்... அதுபோல...தேவரீர் பக்கம் இருப்பதால் தான்... எனக்குப் பெருமை!

விஷ்ணு : விரசை என்றால் அர்த்தம் என்ன தெரியுமா...? பரமபதத்தில் ஓடுகின்ற ஒரு நதிக்கு விரசை என்று பெயர்... பரமபதத்தில் பெருமானுக்காக ஓடிக் கொண்டிருந்த... அந்த நதி... இந்த பரமபக்தனுக்காக... அவனது வாழ்க்கையில் இணைந்து ஓடுகிறது...

விரஜை : அடே அப்பா... வேதமும்... சாஸ்திரமும் படிக்காமலேயே... இத்தனை தெரிந்து வைத்திருக்கிறீர்களே... இனிமேல்... வேதம் தெரிந்தால்... இந்த வில்லிபுதூரையே... விலைக்கு வாங்கி விடுவீர்கள்... இல்லையா...?

விஷ்ணு : வானம் கறுத்தால் வண்ணமயில் தோகை விரித்தாடும்... கதிரவன் உதித்தால் கமலங்கள் இதழ் விரிக்

கும்... அதுபோல் என் விரஜை பக்கத்தில் இருந்தால் என் நாவில் கவி பிறக்கும்... சொல்லில் தேன் இனிக்கும்... செயலில் பேரின்பம் பரதம் பயிலும்...

விரஜை : இப்படியே நாம் பேசிக்கொண்டே... பூ பறித்தோமேயானால்... மாலையில் தான் மால்வரையனுக்கு மாலை போய்ச் சேரும்.

விஷ்ணு : விரஜை... அந்த புன்னை மரத்தடியில் அமர்ந்து மாலை தொடுப்போம்...

விரஜை : இந்த எளியவள் எடுத்த பிறவி வீண் போகவில்லை... உங்களால் எனக்கும் புண்ணியம் சேருகிறது.

(இருவரும் மாலை தொடுத்தல்)

விஷ்ணு : விரஜை...! இந்த உலகில் பகவத்கைங்கரியம் ஒன்றுதான் நிலையானது, நலம் தருவது, புண்ணியம் சேர்ப்பது... ஸ்ரீமந் நாராயணனின் புராணத்தை நம் செவிகுளிர கேட்கவேண்டும்... அவனது அற்புதத் திருவிளையாடல்களை நம் வாயால் விடிய விடிய சொல்லிகொண்டே இருக்க வேண்டும்... நம் மனத்தில் எந்நேரமும் அவனை நினைத்துகொண்டே இருக்க வேண்டும்... நம் சுகம், துக்கம் எல்லாவற்றையும் அவனது திருவடி கமலங்களுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும்.

விரஜை : சுவாமி! இந்த எளியவளின் பெற்றோர்கள் செய்த தவம் வீண் போகவில்லை... சீதைக்கு ராமர் கிடைத்தாற்போல்... தேவரீர் எனக்கு மணாளனாக வாய்த்துள்ளீர்! உங்களுக்கு மாலையிட்ட பாக்கியம்... அந்த பகவானுக்கு மாலை தொடுக்கும் பெரும்பாக்கியம் கிட்டியது...

விஷ்ணு : நான் உனக்கு மாலையிட்ட பாக்கியம்... என் திருத்துழாய் கைங்கரியத்துக்கும் உன் சேவை கிடைத்தது...!

[இருவரும் சிரித்தல்]

— திரை —

## காட்சி : 8

இடம் : திருக்கோவில் சந்நிதி

கதாபாத்திரங்கள் : விஷ்ணுசித்தர்—விரஜை—அர்ச்சகர்—நாராயணன்—ஸ்ரீதேவி

[விஷ்ணுசித்தர் மாலையை கொடுக்க—அர்ச்சகர் இறைவனுக்கு மாலை சாத்துதல் — ஆராதனை —விஷ்ணுசித்தர் பாடுகிறார்]

அர்ச்சகர் : அதி சீக்கிரம் புத்ர பிராப்தி ரஸ்து...!

[அர்ச்சகர் ஒரு மாம்பழத்தை விரஜையிடம் கொடுத்தல்— கண்களில் ஒற்றி கொண்டு விஷ்ணு சித்தரிடம் கொடுத்தல்—இருவரும் போகின்றனர்]

(ஸ்ரீமந்நாராயணன்,—ஸ்ரீதேவி தோன்றுதல்)

ஸ்ரீதேவி : பிரபோ...! பூமாலை தொடுத்து நம்மை சேவிக்கும் இத்தொண்டனுக்கு நாம் என்ன செய்யப் போகிறோம்?

நாரா : பாமாலை தொடுக்கும் ஆற்றலை அளிக்கப் போகிறோம்...

ஸ்ரீதேவி : அப்படியா...?

நாரா : தேவி! நம் பக்தன் நமக்குச் செய்கின்ற திருத்துழாய் கைங்கரியம் எத்துணை மகத்தானது...!

தேவி : கோபியர் கொஞ்சும் இந்த கோபாலனுக்கு... எவ்வளவு பூ தேவைப்படும் என்பது பக்தனுக்குத்தானே நன்றாக புரியும்.

நாரா : இது தேவியின் அர்ச்சனையோ ... என் பக்தன் மல்லிகையாலும், துளசியாலும் அர்ச்சிக்கிறான்... ஆனால் தேவியோ சொல்லால் அர்ச்சிக்கிறாள்.

தேவி : என் சுவாமிக்கு கோபம் வருகிறதே...!

நாரா : என் ருக்மணியிடம் எனக்குக் கோபம் வருமா...? ருக்மணி! நமது இந்த பரமபக்தனின் புகழை உலகறியச் செய்ய வேண்டும்... அப்பொழுதுதான்... அவன் பூலோகம் வந்த காரியம் பூர்த்தியாகும்... என்னைப் பூவால் போற்றியதற்கு புண்ணியம் அவனுக்குச் சேர வேண்டாமா...?

தேவி : பரந்தாமனின் திருவுள்ளம் என்னவோ...?

நாரா : என் அன்பன் விஷ்ணுசித்தனை .. பெரியாழ்வார் என்று இந்த புவனமே... கொண்டாடும்படிச் செய்ய வேண்டும்... அவனுக்கு வேதத்தை போதிக்கப் போகிறேன்.

தேவி : அன்று குருக்ஷேத்திரத்தில் பார்த்தனுக்கு போதனை... இன்று இந்த வில்லிபுதூரில் பக்தனுக்கு போதனை...

நாரா : அதற்கு கருவியாக இருக்கப் போகிறவர்கள்... மதுரை மாநகரத்தை ஆளும் வல்லபதேவனும் அவனது அமைச்சன்... நமது அன்பன் செல்வநம்பியும்...

தேவி : நீங்கள் நடத்தப்போகும் இந்த திருவிளையாட லுக்குஇந்த எளியவள் என்ன செய்ய வேண்டும்...?

நாரா : ஒன்றும் செய்ய வேண்டாம்... இந்த அரங்கனின்... ஆனந்தக்கூத்தினை... எமது பிராட்டியார் பார்த்து ரசித்துக் கொண்டே இருந்தால் போதுமானது...

தேவி : ஓம் நமோ நாராயணா...!

நாரா : நாரதர் பணியை உனது பார்த்தா எடுத்துக்கொண் டாரோ என்று திகைப்படைகிறாயா...? தேவி! விஷ்ணு சித்தன் நமது பெரிய திருவடி அல்லவா... அவனுக்கு புத்ரியாக பிறக்கப் போகிறவள் நமது பூதேவி அல்லவா...?

—திரை—

## காட்சி : 9

இடம் : வல்லபதேவன் அரண்மனை

கதாபாத்திரங்கள் : வல்லபதேவன்—செல்வநம்பி— மந்திரி பிரதானிகள்—காவலர்—அரசமாதேவி.

[நடனம் நடைபெறுகிறது—நடனம் முடிந்ததும்— மக்கள் கரகோஷம்]

செல்வ : அங்கையற்கண்ணி மீனாக்ஷியும்... ஆலவாய்க் கடவுள் - திரிபுரம் எரித்த விரிசடை அண்ணல்... சோம சுந்தரப் பெருமானும் எழுந்தருளியிருக்கும் இந்த நான்மாடக் கூடல்—மதுரை மூதுரைத் தலைநகராகக் கொண்டு அரசுபுரியும்... நம் மன்னவன் வல்லபதேவன் பல்லாண்டு காலம் பெரும் புகழுடன் வாழவேண்டும் என்று... உங்கள் சார்பாக... அவர் பிறந்த இப்பொன் னான நந்நாளன்று வாழ்த்துகிறேன்... வாழ்க! வல்லப தேவன்!

குரல் : வாழ்க! வாழ்க!

செல்வ : பாண்டியர்குலம் தழைக்க மீன்கொடி தாங்கி பார்புகழ் வெற்றி கொண்ட வீரத்திருமகன் வல்லப தேவன்...

குரல் : வாழ்க! வாழ்க!

செல்வ : அரசமாதேவீ!

குரல் : வாழ்க! வாழ்க!

வல்லப : என் அன்பிற்கும், பண்பிற்கும், பாசத்திற்கும் மதிப்பிற்கும் உரிய பாண்டிய நாட்டு பெருங்குடி மக்களே! களம் பல கண்டு வெற்றிக்கொடி நாட்டி... மீன் கொடி பறக்கப்பட்ட எனது அமைச்சர் செல்வ

நம்பி அவர்களே! முத்தமிழ்ச்சங்க புலவர்களே! மற்றும் அரசாங்க பிரதானிகளே! வீரர்களே! விவேகமிக்க அறிவுக் கண்களே! உங்கள் அனைவருக்கும் எனது பிறந்தநாள் வாழ்த்துக்கள்!

நம் பாண்டியநாடு சங்கப் புலவர்களின் பாப்பாடும் நயத்தாலும்...வீரர்களின் வாள் ஏந்தும் திறத்தாலும்... பாண்டிய நாட்டு பைந்தமிழ்க் கொடியிடைப் பாவையர் களின் கற்பின் உயர்வாலும் இந்த வல்லபதேவனின் ஆட்சி புகழ் மணக்கும் பூஞ்சோலையாகத் திகழ்கிறது.

உங்கள் எல்லோருடைய செயலின் திறத்தால் வன்னிலத்தை நன்னிலமாக்கினோம்... யானைகட்டி போரடித்து நஞ்சையும் புஞ்சையும் கொழிக்கச் செய் தோம்... காவேரியும் கங்கையும் எங்கள் நதியே என பண்பாடுகிறோம்... மன்னும் இமயமலை எங்கள் மலை என முழங்குகிறோம்... எங்கும் பாண்டிய நாட்டின் புகழ்! இமயத்தின் எல்லையிலே... விந்தியத்தின் விளிம் பிலே... குமரியின் முனையிலே... நம் கொடி பறக்கிறது நம் புகழ் ஒலிக்கிறது... வாழ்க! பாண்டியநாடு...

[மக்கள் கரகோஷம்]

மக்கள் குரல் : வாழ்க! வாழ்க!

வல்ல : எனது பிறந்தநாளை முன்னிட்டு... நமது மீனாக்ஷி சமேத சுந்தரேசப்பெருமான் திருக்கோவிலில் நடக்க இருக்கும் அபிஷேக ஆராதனை வைபவங்களுக்கு... நீங்கள் அனைவரும் வருகைதந்து சிறப்பிக்க வேண்டும், ஆலவாய் அண்ணலின் பேருளைப் பெறவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

செல்வ : நம் அரசர் அவை அடக்கத்துடன் ஆற்றிய சிறப் புரை அவரது புகழை மேன்மேலும் உயரச் செய்கிறது... நம் அரசர் பாண்டியநாட்டு பெருமைகளைப் பற்றிச் சொன்னது அனைத்தும் கல்மேல் எழுத்துக்கள்—

செப்பேடு எழுதி பாதுகாக்க வேண்டிய செந்தமிழ் முத்துக்கள். மன்னர் சொன்னதுபோல்... பாண்டியநாடு புகழ் மணக்கும் பூஞ்சோலை தான்... பாவலர் திறம் உரைக்கும் பளிங்கு மண்டபம்... இங்கு வீசுவது சுந்தரத் தென்றல் அல்ல; கொடை வள்ளல் மன்னரின் குணம் காட்டும் குளிர்தென்றல்... மன்னவரின் வீரவாளின் வரலாறு சொல்லும் வளர் திங்கள்...நம் மன்னவன் பக்தி வளம் கொண்ட ஞானத்தின் உயர் கோபுரம்!

[மக்கள் கரகோஷம்]

இப்பொழுது... நமது மன்னவன்... தமது திருக்கரத்தால்... போட்டிகளில் வெற்றி பெற்றோர்களுக்கும்... கலைத்துறையில் புகழ் பெற்றவர்களுக்கும்... சங்கத் தமிழ் தாலாட்டும் தெய்வப் புலவர்களுக்கும்... போர்க் களத்தில் நிலையான வடுக்களைப் பெற்ற பாண்டியர் குல வீரர்களுக்கும்... அரண்மனை ஆடல் அழகியர் களுக்கும்... பரிசுகளையும், விருதுகளையும் வழங்கி கௌரவிப்பார்... முதலில் அரண்மனை ஆஸ்தான நர்த்தகி எழிலரசிக்கு...

[எழிலரசி வருகிறாள் — அரசர் அவளுக்கு தங்க கேடயம் அளித்து, பொன்னாடை போர்த்தி கௌரவித்தல்—தொடர்ந்து மன்னன், புலவர் களுக்கும், மல்யுத்தத்திலும், மற்ற பல போட்டி களிலும் வெற்றி பெற்ற வீரர்களுக்கும் பரிசு வழங்குதல் — முடிவில் அவை கலைகிறது]

—திரை—



## காட்சி : 10

இடம் : வசந்த மண்டபம்

கதா : வல்லபதேவன்—அரசமாதேவி—பணிப் பெண்கள்.

[வல்லபதேவன், அரசியாருடன் வசந்த மண்டபம் வருகிறார்—பணிப்பெண்கள் அரசருக்கு முன்னால் ரத்ன கம்பளம் விரித்து—பூக்களைக் கொட்டி—பாடல்களைப் பாடி வரவேற்கின்றனர். தங்கமணி பீடத்தில் அரசனும் அரசியும் அமருகின்றனர். பணிப்பெண்கள் வெண் சாமரம் வீசுகின்றனர்]

வல்ல : பட்டத்தரசி! நீண்ட நாட்களாக எனது இதயத்தின் அடித்தளத்திலே...கொந்தளித்துக் கொண்டிருந்த ஒரு கேள்விக்கு இன்று பதில் கிடைத்து விட்டது...

அரசி : வேந்தே! என்ன சொல்கிறீர்...

வல்ல : உன்னைப் பற்றித்தான்...

அரசி : என்னைப் பற்றியா...?

வல்ல : ஆம் தேவீ! நமது முன்னோர்கள் பாண்டிய நாட்டுக் கொடியிலே மீன் சின்னம் எதற்காக பொறித்தார்கள்? என்னுள் ஒரு விடை காணமுடியாத வினா... அதற்குத்தான் விடை.

அரசி : தங்களுக்குத் தெரியாததா...மீனாக்ஷி ஆட்சி புரிகின்ற நாடு...அதனால்தான்...மீன் கொடி...

வல்ல : இருக்கலாம்...என்றாலும்... என்னைப் பொறுத்த மட்டில்...நம் முன்னோர்கள்... ஒரு தீர்க்கதரிசிகள்! இந்த வல்லபதேவனின் பட்ட மகிஷியின் கண்கள் கயலைப் பழிக்கப் போகிறது...என்பதனை அன்றே

தெரிந்து கொண்டுதான்... கொடியிலே மீனைப் பொறித்தார்கள்.

அரசி : சங்கப் பலகை அமரவேண்டிய புலவர் தாங்கள்...

வல்ல : இந்த தங்கபதுமையின் மடியில் தலைவைத்து உறங்கப் போகிறானோ...

அரசி : ஏதேது...பிறந்தநாள்... உங்கள் கற்பனையின் பிறந்த நாளோ...சுவாமி! வாருங்கள்... வெள்ளி நிலா முற்றதுக்குச் செல்வோம்...இன்று தங்களுக்கு தேவீ... ஊட்டப் போகிறாள்... ஊஞ்சலை தாலாட்டப் போகிறாள்...யாழ் இசைத்து தாலாட்டுப்பாட்டுப்பாடி தூங்க வைக்கப் போகிறாள்...

வல்ல : தூங்க வைப்பதா...தூக்கம் என்று சொல்லி...ஒரு முக்கியமான விஷயத்தை நினைவு படுத்தினாய்...?

அரசி : என்ன சுவாமி!

வல்ல : இன்று நகர் சோதனைக்குப் போக வேண்டிய நாள்...

அரசி : பிறந்த நாளன்று...இரவு முழுவதும் தங்களுடனேயே இருக்க வேண்டும் என்பது எனது தணியாத ஆசை.

வல்ல : அந்த ஆசை எனக்கு மட்டும் இல்லையா...? தேவீ! உன் கொவ்வைச் செவ்வாயில் பழரசம் பருக துடிக்கிறேன்...உன் அழகு மேனியில் தென்றலை வீசக் காண்கிறேன்...வண்ண நிலா பொழியும் பாலில் குளித்து... உன் அழகில் முத்தெடுக்கப் போகிறேன்...என்றெல்லாம் எண்ணிய என் இதயத்தின் ஆசைகள் கார்மேகம் சூழ்ந்த நிலவானது! தேவீ கொற்றவனுக்கு கடமை முக்கியம்...தேவி! உனக்காக எப்படியும் நடு ஜாமத்திற்குள் வந்து விடுகிறேன்...

அரசி : அரசே! இன்று பௌர்ணமி...

வல்ல : அது தெரிந்துதானே...இன்று நகர்வலம் போகிறேன்...

அரசி : நகர சோதனை... அமாவசையில் வைத்துக் கொண்டால்தான் நல்லது. அரசனை யாரும் அடையாளம் கண்டு கொள்ள மாட்டார்கள்.

வல்ல : அரசர் மற்றவர்களை அடையாளம் காண வேண்டாமா...அதிலும் அமாவாசை இருள்...நம்மை போன்ற உள்ளம் கவர் கள்வர்களுக்கு மட்டும்தான் ஏற்ற நாள்! இன்பநாள்! இனிமையான நாள்!

—திரை—



## காட்சி : 11

இடம் : பாழடைந்த மண்டபம்.

கதாபாத்திரங்கள் : வல்லபதேவன்-செல்வநம்பி-அந்தணர்

[ஓர் அந்தணன் பக்கத்தில் ஏடுகளுடன் மண்டபத்தில் படுத்திருத்தல் – வல்லபதேவனும், செல்வநம்பியும் மாறு வேடத்தில் வருதல்]

வல்ல : பார்த்தால்...புலவர் போல் தெரிகிறது...பாவம் என்ன களைப்போ...எழுப்பி...யார்...என்ன...? என்று விசாரிப்போம்...

[செல்வநம்பி அந்தணரை எழுப்புதல்—அந்தணர் விழித்து எழுதல்]

வல்ல : தாங்கள் யார்?

அந்த : யாதும் ஊரே! யாவரும் கேளிர் என்று க்ஷேத்ராடனம் செய்து வரும் இந்த ஏழைக்கு பேர் ஏது...? ஊர் ஏது...? கங்கை நீராடி வந்த நான் ராமேசுவரம் போய் கொண்டிருக்கிறேன்.

செல் : உமது பேச்சைக் கேட்டால் பெரும் பண்டிதர் போல் தெரிகிறது.

அந்த : அப்படியும் வைத்துக் கொள்ளலாம்...

வல்ல : அப்படியானால் உமது புலமையைக் காட்டுவதற்கு சுலோகம் ஒன்றைச் சொல்வீர்.

அந்த : சங்கம் வளர்த்த இந்த மதுரையில்...முத்தமிழ் வளர்த்த இக்கூடல் மாநகரில் கொலுவிருக்கும் அரசனுக்கும் அழகன் முருகனுக்கும்... நாடி வந்த புலவர்களுக்குப் பொன்னும், பொருளும் வாரி வழங்கிய வள்ளல்கள் வழி வந்த மாமன்னன் வல்லப

தேவனுக்கும்...என் முதற்கண் வணக்கங்களைச் சொல்லி, பாசுரம் ஒன்றைச் செப்புவேன்... யாம் பெற்ற புலமை வடமொழியிலே! எனவே வடமொழியிலேயே பாட்டிசைப்போம்.

விருத்தம் (பாடல்)

''வர்ஷார்த்த மஷ்டௌ ப்ரயதேந
மாஸ்ந் நிசாந்த பர்த்தம்
தி வஸம் பதேந வார்த்தக்ய
ஹேதோர் வயஸா தவே ந
பரத் ர ஹேதோஷ ஜந்மநாச!!''

அரசே! மழைக்காலத்துக்கு வேண்டியதை மற்ற எட்டு மாதங்களிலும். இரவுக்கு வேண்டியவை பகலிலும், முதுமைக்கு வேண்டியவை இளமையிலும், மறுமைக்கு வேண்டியதை இம்மையிலும் தேடுக என்பது தான் அடியேன் மொழிந்தது...இருப்பினும்... இது அடியேன் வாக்கல்ல... அந்த அனந்தனின் அருள் வாசகம்!

வல்லப : வித்தகரே! இதோ இந்த முத்துமாலையை பரிசாக ஏற்றுக் கொள்ளும்!

[அரசன் மாலையைக் கழற்றும் தருணத்தில் அந்த அந்தணர் ஓடி விடுகிறார்]

வல்லப : அமைச்சரே...; பெரும் வியப்பாகஇருக்கிறதே...?

செல்வ : ஆம் அரசே...! அந்தணராக வந்தவர் அனந்தனின் அடியவரோ... அன்றி திருவிளையாடல் புரிந்த திருச்சடைப் பெருமானின் திருத்தொண்டரோ...?

வல்லப : மறுமைக்கு வேண்டிய மெய்ஞ்ஞான பொருள்களை... இம்மையில் தேடி சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும் என்னும் பொருள்படச் சொன்ன இப்பாட்டில்... மறைந்துக் கிடக்கும் உண்மைப் பொருள்

இன்னது என்பதனை மட்டும் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லையே. மறுமைக்கு என்ன வேண்டும்? எது வேண்டும்? எங்கே தேட வேண்டும்...? வேடிக்கையாக இருக்கிறதே...?

செல்வ : அதுதான் எனக்கும் ஏற்பட்டுள்ள குழப்பம்...!

வல்லப : மறை நூல்களையும்...அறநூல்களையும் கற்றுத் தெளிந்த வித்தகராயிற்றே நீர்...! உமக்கே இதன் உண்மை பொருளை உணர முடியவில்லை என்றால்... வேல்விழி மாதர்களின் மாயத் தோற்றத்தில் மதி மயங்கிக் கிடக்கும் எனக்கு என்ன புரியப் போகிறது...? செல்வநம்பி... இந்த பாசுரம் என் மனதை மாற்றி விட்டது...நான் சிற்றின்பத்தை வெறுக்கிறேன்... பேரின்பத்தைக் காணத் துடிக்கிறேன்.

செல்வ : அரசே...! இப்பொழுதே நாடு நகரமெங்கும் பறை சாற்றுவோம்...வேத விற்பன்னர்களிடம் விளக்கம் கேட்போம்... மன்னரின் ஐயப்பாட்டைத் தீர்ப்போர்க்கு பொற்கிழியை பரிசளிப்போம்.

வல்லப : அருமையான யோசனை அமைச்சரே...ஆவன செய்யவும்!

—திரை—



## காட்சி : 12

இடம் : அரண்மனை வாயில்

கதாபாத்திரங்கள் : செல்வநம்பி—காவலன்-1- காவலன்-2 புலவன்.

காவ 1 : நம்ம ராஜாவுக்கு இப்படி ஒரு சந்தேகம் வர வேண்டாம்...

காவ 2 : தீர்த்துவைக்க ஒரு புலவனும் வரமாட்டேங்கறான்.

காவ 1 : வரும்போது வீரநடை போட்டுக்கிட்டுத்தான் வர்றாங்க... கம்பத்திலே கட்டி வெச்சிருக்கற பொற்கிழியைப் பார்த்ததும் நிமிர்ந்து நிக்கறான். நம்ம அமைச்சர், கேள்வியைப் படிச்சதும்... அவுங்க ஓடற ஓட்டம்...சீ...சீ... இந்த பழம் புளிக்கும்னு போன நரிகதைதான் எனக்கு ஞாபகத்துக்கு வருது...

காவ 2 : நான் மட்டும் புலவனா இருந்தேன்...இந்த கேள்விக்கு பதிலை, ஒரே விநாடியிலே வெட்டு ஒண்ணு துண்டு ரெண்டுன்னு சொல்லியிருப்பேன்...

காவ 1 : நீ புலவனா இருந்தா...இங்கே...எதுக்காக நிக்கப் போறே...

காவ 2 : அதுவும் சரிதான்,

காவ 1 : என்ன அதுவும் சரிதான்...எதுக்கும் ஒரு தகுதி வேணும்...நீ எல்லாம் ஈட்டி பிடிக்கத்தான் லாயக்கு... எழுத்தாணி பிடிக்கறதுக்கு... அந்த கடவுள் அநுக்கிரகம் வேணும்.

காவ 2 : அதோ...ஒரு புலவர்வர்றாரு... ஏட்டுச் சுவடி நிறைய கையிலே கொண்டாறாரு...ஒரு வேளை வாணி பத்துக்கு வருகிறாரா...

[காவலன் 2 சிரிக்கிறான்]

காவ 1 : ஏன் அண்ணே சிரிக்கிறீங்க...?

காவ 2 : அந்த ஆள் நெத்தியிலேபாரு...பாதி நாமம்... பாதி விபூதி... வரட்டும்...வரட்டும்...

[புலவர் வருகிறார்]

புல : அரசனைப் பார்க்க வேண்டும்...?

காவ 1 : எதற்கு...?

புல : எதற்கா...நான் யார் தெரியுமா...! பல்லவ நாட்டு பெரும்புலவன்...கோடையிடி சண்டமாருதம் விஷ்ணு சங்கர் கவிராயருன்னா...ஊமையும் பேசுவான், முடவனும் எழுந்து ஓடுவான்...நான் திக்கெட்டும் புகழ் பரப்பிய பைந்தமிழ்ப் புலவன். சரஸ்வதி என் நாவில் குடியிருக்கிறாள்.

காவ 2 : தேவர்களே வீடு கிடைப்பதற்கு அத்தனை கஷ்டம் அனுபவிக்கிறார்களோ லக்ஷ்மி...பார்வதி... இவங்களெல்லாம் எங்கே குடியிருக்காங்க.

புல : கேலி பேசாதே... எனக்குக் கோபம் வரும்...

காவல 1 : ஆமாம்... விஷ்ணு சங்கர் புலவர்னு பேரு இருந்தா... நெத்தியிலே... விபூதியும் திருமண்ணும் போட்டுக்கணுமா...?

புலவன் : வீண் பேச்சு பேச எமக்கு நேரமில்லை... அவைக்கு அழைத்துச் செல்லுங்கள்...பொற்கிழி எடுத்து கொண்டு சோழ நாடு செல்லவேண்டும்... அந்த நாட்டிலும் ஏதாவது போட்டி இருந்தால், அதிலும் வெற்றி பெற்று பல்லவநாடு திரும்பி...பல்லவ

நாட்டு மன்னனிடம், எனது வீரபிரதாபங்களைப் பற்றிச் சொல்லி சொல்லிப் பெருமைப்படவேண்டும்.

காவ 2 : ஐயா புலவரே! இந்த போட்டி ஆரம்பித்து... இன்றோடு பத்து நாள் ஆகப் போகிறது... நூற்றுக் கணக்கான புலவர்கள்...வந்தார்கள்... மார்தட்டிச் சென்றார்கள்...மன்னனின் ஐயப்பாட்டை கேட்டார் கள்...பொற்கிழி கம்பத்தை பார்த்தார்கள். பெரு மூச்சுவிட்டார்கள். தலைதெறிக்க ஓடினார்கள்...

புல : நான் உலா பாடியவன்... அந்தாதி பாடியவன்... இலக்கணம் இயம்பியவன்... பதினெட்டு புராணங்களும் எனக்கு தண்ணி பட்டபாடு... தர்க்க சாஸ்திரம் அர்த்த சாஸ்திரம்... மனுசாஸ்திரம்...மனையடி சாஸ்திரம்...

காவ 1: நிறுத்தும் புலவரே! உங்களைப் போன்ற புலவர் களை உள்ளே அனுப்ப வேண்டாம் என்பது... எங்கள் அமைச்சரின் ஆணை...

புல : அப்படி என்றால் என்ன அர்த்தம்...?

காவ 2 : மன்னன்...தமக்கு எழுந்துள்ள ஐயப்பாட்டை இந்த ஏட்டில் எழுதியுள்ளார். படித்துப் பாருங்கள்... விடை தெரிந்தால் உள்ளே போங்கள்... இல்லையேல் பல்லவநாட்டுக்குச் சென்று பல்லவி பாடுங்கள்...

புல : கொடு...ஏட்டை....

[காவலனிடமிருந்து ஏட்டை பிடுங்கி புலவன் படித்துப் பார்த்தல்— அவர் முகம் மாறுகிறது]

புல : இதெல்லாம்... ஒரு கேள்வி... உங்கள் மன்னருக்கு இப்படியொரு சந்தேகமா...?

காவ. 1 : அப்படி என்றால்... உங்களுக்குப் பொருள் புரிந்துவிட்டதா? உள்ளே போகலாமா... புலவரே... பொற்கிழி கிடைத்தால்... எங்களுக்கு... ஏதாவது... கொடுத்துவிட்டு போங்கள்...

புல : இப்படிப்பட்ட அல்பமான கேள்விகளுக்கெல்லாம்... நான் பதில் சொல்வதில்லை... இதற்கு என் நூறு சிஷ்யர்களில் ஒரு சிஷ்யனை அனுப்பி வைக்கிறேன், அவன்... சர்வசாதரணமாக... பதில் சொல்லிவிட்டு... பொற்கிழியை அறுத்துக்கிட்டு வருவான்.

காவ. 2 : புலவரே! கீழே விழுந்தாலும் தாடியிலேயும், மீசையிலேயும் மண் ஒட்டலே...

[காவலர் இருவரும் சிரித்தல்—புலவன் ஓடுகிறான்]

காவ. 1 : அண்ணே! பல்லவ நாட்டு பேரைக் கெடுக்க... இப்படியொரு பைத்தியமா...? இவனுக்கு எல்லாம் புலவன்னு எவன் பட்டம் கொடுத்தான்.

[செல்வநம்பி வருதல்]

செல் : இன்றைக்கு புலவர்கள் எவராவது வந்தார்களா...?

காவ. 2 : இப்பொழுதுதான்... வந்துவிட்டுப் போகிறது... பல்லவ நாட்டிலிருந்து... ஒரு பைத்தியம்... தன்னை புலவரென்று சொல்லிக்கிட்டு வந்தது... கேள்வியைப் படிச்சதும் ஒரே ஓட்டம்... திரும்பிப் பார்க்கலே...

காவ. 1 : நம் அரசர் பிறந்த நாளன்று ஓட்டப் பந்தயம் வைத்திருந்தால்... இந்தப் பல்லவ நாட்டுப் புலவன்... கண்டிப்பாக முதல் பரிசை தட்டிக் கொண்டு போயிருப் பான்...

செல் : வேடிக்கையாக இருக்கிறதே...ஆலவாய் அண்ணலே நீதான்... ஒரு விடிவு காலத்தை உண்டாக்க வேண்டும் ...பொற்கிழி பெறும் பாக்கியம் எந்த புலவனுக்கு கொடுத்து வெச்சிருக்கோ... பொறுத்திருந்து பார்ப் போம்!

— திரை —

## காட்சி : 13

இடம் : முகுந்தபட்டார் இல்லம்

கதாபாத்திரங்கள் : விஷ்ணுசித்தர் — விரசை — முரசறை வோன்—கண்ணன்

விஷ்ணு : ஸ்ரீராம கிருஷ்ண அவதாரங்களுக்கு ஆதி காரணமே திருப்பாற்கடல் வைபவம் தான்...ஸ்ரீமந் நாராயணன் ஒவ்வொரு மாதத்திற்கும் ஒவ்வொரு மூர்த்தியாக இருந்து அருள் பாலிக்கிறார்.

விரசை : அப்படியென்றால்...?

விஷ்ணு : மார்கழியில்—கேசவன்... தை—நாராயணன்... மாசியில்—மாதவன்... பங்குனி—கோவிந்தன்...சித்திரை விஷ்ணு... வைகாசி—மதுசூதனன்...ஆனி—திரிவிக்ரமன் ஆடி—வாமனன்... ஆவணி—ஸ்ரீதரன்... புரட்டாசி—ரிஷிகேஷன்... ஐப்பசி—பத்மநாபன்... கார்த்திகை—தாமோதரன்!

விரசை : எம்பெருமானின் வைபவத்தைக் கேட்க கேட்க செவிகளுக்கு இன்பம்...சொல்லச் சொல்ல நாவிற்கு சுகம்...

விஷ்ணு : இதெல்லாம் குருவிடம் முறையாகக் கற்றதல்ல ...கோவிலுக்குச் செல்லும் போது பௌராணிகர் சொல்லக் கேட்டு தெரிந்து கொண்டது தான்...

[வெளிப்பக்கமிருந்து டும்...டும் என்று முரசறையும் சத்தம் கேட்கிறது]

விரசை : சுவாமி! அரண்மனைச் செய்தியாக இருக்குமோ...?

விஷ்ணு : முரசு கொட்டும் சத்தம் கேட்பதால் அப்படித் தான் தோன்றுகிறது.

முரசறைவோன் : பாண்டியநாட்டு பெருங்குடி மக்களே... பண்டிதர்களே... பாமரர்களே ...வேத விற்பன்னர்களே! அனைவர்க்கும்... இதனால் நம் மாமன்னன் தெரிவிப்பது என்னவென்றால்... அரசர்க்கு ஏற்பட்டுள்ள ஐயப்பாட்டைத் தெளிவுபடுத்துவோர்க்கு பொற்கிழி பரிசளிக்கப்படும்...அத்தோடு விருதுகளும் வழங்கப் படும்...

[முரசு அறையும் சத்தம் — முரசறைவோன் போகின்றான்]

விரசை : அரசர்க்கு என்ன சந்தேகம்...? எதைப்பற்றி சந்தேகம்! வாலும் தலையும் இல்லாமல் ஏதோ சொல்லி விட்டு போகிறான்!

விஷ்ணு : யாருக்கு இந்த யாக்கியம் கொடுத்து வைத்திருக்கிறதோ...?

விரசை : ஏன்... அந்த பாக்கியம் தங்களுக்கு கிட்டாதா... என்ன...?

விஷ்ணு : குருடனை...ராஜவிழி...விழிக்கச் சொல்கிறாய்... வேதத்திற்கு அர்த்தம் தெரியாதவனை...ஞானத்தைப் பற்றி பிரவசனம் செய்யச் சொன்ன கதைதான்... நன்று உன்...பேச்சு!

விரசை : பிரபோ...! நீங்கள் அரண்மனைக்குச் சென்று மன்னனின் ஐயப்பாட்டைத் தெளிவு படுத்தி பொற்கிழி பெற்று வாருங்கள்...

விஷ்ணு : விரசை! உன் பேச்சைக் கேட்டு அழுவதா... சிரிப்பதா என்று புரியவில்லை... மெத்த படித்த பண்டிதர்களே...பொருள் புரியாமல் சித்தம் தடுமாறி போவர்...நான் எம்மாத்திரம்...? ஆடிக் காற்றிலே அம்மி பறக்கும் போது... இந்த இலவம் பஞ்சு எந்த மூலைக்கு...?

விரசை : பிரணாபதி! என் மனத்தில்...ஏதோ ஒரு சக்தி... தங்களுக்குத்தான் பொற்கிழி கிட்டப் போகிறது என்று சுட்டிக் காட்டுகிறது...

விஷ்ணு : இப்பொழுது எனக்கு தூக்கம் வருகிறது...

[விஷ்ணுசித்தர் ஊஞ்சலில் உறங்கிக் கொண்டிருத்தல்—தரையில் விரசை படுத்து உறங்குதல்—அந்த அறையில் பேரொளி பிரகாசம் பொங்குகிறது. புல்லாங்குழல் இசையுடன் பரந்தாமன் கண்ணனாக பிரசன்னமாகிறார்]

[விஷ்ணுசித்தர் புல்லாங்குழல் இசை கேட்டு எழுந்திருத்தல் நிலம் கிடந்து சேவித்தல்]

விஷ்ணு : கண்ணா... கருமைநிற வண்ணா... குன்றைக் குடைப்பிடித்த கோபாலா! பிருந்தாவனத்து நந்த குமாரா!! எத்தனை பிறவியில் என்ன தவம் செய்தேனோ... இப்பிறவியில்... உன் மாணிக்க மரகத கிண்கிணி சதங்கை ஒலிக்கும் திருப்பாதங்களைத் தரிசிப்பதற்கு...

கண்ணன் : அன்பா! பொழுது புலர்ந்ததும்...பாண்டியனின் அவைக்குச் சென்று... மன்னனுக்கு ஏற்பட்டுள்ள ஐயத்தைத் தீர்த்து வருவாய்.

விஷ்ணு : மணிவண்ணா...! மாதவா! வேதம் புரியாத இந்த ஞான சூன்யத்துடன் இப்படியா விளையாடுவது? பண்டிதர்களும், சமண, புத்த, வைஷ்ணவ சமய மாமேதைகளும், ஆசாரியர்களும் கொலுவிருக்கும் அத்தாணி மண்டபத்திலே...வெறும் பொம்மையாக நிற்பதற்குக் கூட சக்தியற்றவன் நான்... இதை நீ அறியாததல்லவே... திருவரங்கத்திலே... இனிதாக கண் வளரும் திருவாளா...கண்ணா...காரணா... நீ நவின்றது ...இந்த எளியவனுக்கு எவ்விதம் சாத்தியமாகும்?

கண்ணன் : பக்தா! நீ கருவியாகச் செல்வாய்... யாம் உன்னை இயக்கும் சூத்ரதாரியாக துணை நிற்போம்... அவையிலே...உனக்கு ஞானத்தை அருளுவோம்... நானிலமே உன்னைக் கொண்டாடும். நீ எடுத்த பிறவி யில் அடுத்தடுத்து முடிக்க வேண்டிய அற்புதங்கள் எவ்வளவோ இருக்கிறது...

[கண்ணன் மறைந்து அருளுகிறார்]

[விஷ்ணுசித்தர் ''விரசை! விரசை'' என்று மனைவி யைத் தட்டி எழுப்புதல்—விரசை திடுக்கிட்டு விழித்தல்]

விரசை : சுவாமி...! என்ன பதட்டம்...? ஏதாவது கனவு கண்டீர்களா...

விஷ்ணு : கனவல்ல கண்ணே...! நினைவு... கார் முகிலுக்கு ஆடிடும் மயில் போல் காளிங்கன் தலை மீது... களி நடனம் புரிந்த நம் பேரழகுப் பரந்தாமனை... மத்த மாமலையைத் தாங்கிய தேவகி மைந்தனை... பண் வாயில் பாரெல்லாம் காட்டிய பாலகனை... ஆலிலை துயின்று அகிலம் காத்த அச்சுதனை...அரவணைப் பள்ளி கொண்டானை... கண்டேன்... கொவ்வை செவ்வா யுடன்... குமிண் சிரிப்புடன்...கண்டேன்... கோபியர் களைப் படாத பாடுபடுத்திய கோகுலத்து குலக் கொழுந்தினை கண்டேன்...!

விரசை : பரந்தாமன் திருவாய் மலர்ந்து என்ன சொன் னார்... சுவாமி?

விஷ்ணு : உன் வாக்கு பலித்து விட்டது.. விரசை! வாமனன் நப்பீ வந்து எனை ஆட்கொண்டு அருளியதை தான் என்னென்பேன். எளியவனை... வேதம் அறியா தவனை... ஞானம் காணாதவனை—ஒருபொருட்டாக எண்ணி எழுந்தருளிய எம்பெருமானே! கார்முகில் வண்ணா! அரசவைக்குச் செல்வாய் என்று அநுக்கிர

ஹித்து ஆட்கொண்டருளிய அனந்தசயனா! அநேக கோடி தண்டன் உன் திருவடி கமலங்களுக்கு! விரசை நீ நினைவில் நவின்றதனை...கண்ணன் என் முன்னே சேவை சாதித்து செப்பினான்... பொழுது விடிந்ததும் எம்மை அரண்மனைக்கு சென்று மன்னனுக்கு ஏற்பட்டுள்ள ஐயத்தைத் தீர்த்து வைக்குமாறு அன்புக் கட்டளை இட்டுள்ளான்... கவிதை பாடி பொற்கிழி தனை பெற்றிடுவாய் என்று அருளினான்; நம் அஞ்சனை வண்ணன்... ஆருயிர் நாயகன்!

விரசை : என் பிரார்த்தனை! வீண் போகவில்லை பிரபோ பொழுது புலர்ந்ததும் மதுரைக்கு புறப்படுவதற்கான ஏற்பாட்டைக் கவனிப்போம்.

விஷ்ணு : அதற்கும் அந்த பரந்தாமனே வழி காட்டுவான். மதுராபுரியாண்ட அந்த மதுசூதனன்...இந்த எளியவன் மதுரைக்குச் செல்வதற்கான வழியை காட்டாமலா போய்விடுவான்.

விரசை : சுவாமி! உறங்குங்கள்...

விஷ்ணு : விரசை... நல்ல சொப்பனங்கள் கண்டால் பிறகு உறங்கக் கூடாது...உறங்கிவிட்டால் கனவு பலிக்காது...

விரசை : அப்படி என்றால் விடிய விடிய பகவத் விஷயத்தை பேசிக் கொண்டே இருக்கலாம்...

—திரை—



# காட்சி : 14

இடம் : செல்வநம்பி அறை

கதாபாத்திரங்கள் : செல்வநம்பி—கண்ணன்

[செல்வநம்பி பகவானை வேண்டுதல்]

செல் : ஸ்ரீமந்நாராயணா பத்து அவதாரம் எடுத்து, துஷ்டர்களை சம்ஹாரம் செய்து, இஷ்டர்களைக் காத்த கருணாசாகரா! அன்பர் இதயங்களில் உறைபவனே! பிரபஞ்சங்களை எல்லாம் உனது திருவடிக்கமலங்களால் ரக்ஷிப்பவரே! அனைத்து மன்வந்தரங்களுக்கும் மங்களமான சொரூபனே! மன்னவன் வல்லபதேவனுக்கு ஏற்பட்டுள்ள ஐயத்தை அகற்றும் ஆற்றல் மிக்க அறிஞனை—ஞான தவச் செம்மலை அனுப்பி வைக்கக் கூடாதா? நாரயணா, பூவுலகத்தின் அவதாரப் புருஷனே! கிருபா சமுத்திரமே! எல்லாக் காப்புக்களுக்கும் காரணமாகவும், எல்லா பாடல்களுக்கும் நிவர்த்தி கர்த்தாவாகவும் விளங்கும் ஸ்ரீவிஷ்ணு தேவா! இந்த செல்வநம்பியின் பிரார்த்தனைக்குத் திருவுள்ளம் இரங்கி அருள்பாலிக்க வேண்டும்.

[அமைச்சர் சுலோகம் சொல்கிறார்]

கிருஷ்ணாய வாசுதேவாய
தேவகீ நந்தநாயச
நந்த கோப குமாராய
ஸ்ரீ கோவிந்தாய நமோ நம :

[செல்வநம்பி மலர்கட்டிலில் படுத்தல் — கண்ணன் புல்லாங்குழல் இசைத்தல் — செல்வநம்பி கண் விழித்தல்]

செல் : கண்ணா! கார்முகில் வண்ணா! தாமரைக் கண்ணா! இந்த எளியவனின் பிரார்த்தனை உனது திருச்செவிகளுக்கு எட்டியதா? கோவர்தன கிரிதாரி! எனக்காக உனது சேவடி நோவ எழுந்தருளினாயோ? பாண்டவர்க்காக தூது சென்ற தாமோதரா! எங்கள் மன்னரின் சஞ்சலத்தை தீர்க்க என்முன் சேவை சாதித்தாயா? கோடானு கோடி பக்தர்கள் தஞ்சம் கிடக்கும் உனது நறுந்தேன் சிந்தும் பூமலர் பாதங் களுக்கு அநேக கோடி நமஸ்காரங்கள்...

[பகவான் புல்லாங்குழல் இசை — செல்வநம்பி — நிலம் கிடந்து சேவித்தல்]

கண்ணன் : செல்வநம்பி...! ஸ்ரீ வில்லிபுத்தூரில் எனது அன்பன் விஷ்ணுசித்தன் எமக்கு நந்தவனம் அமைத்து, திருத்துழாய் கைங்கரியம் செய்து வரும் பரமபக்தன்! உன் மன்னனின் மனத்திலே ஏற்பட்டுள்ள ஐயத்தை அகற்றி உண்மைப் பொருளை உணர்த்தப் போகிற வனும் அவனே...! நீ அவனை ராஜமரியாதைகளுடன் அவைக்கு அழைத்துச் செல்வாயாக...!

செல்வ : பிரபோ...ஓம் நமோ நாராயணா! மாதவா... மதுசூதனா...வாமனா...வரம் தர வந்த வேணு கோபாலா...கண்ணா...கண்ணா!

[கண்ணன் மறைகிறான் — புல்லாங்குழல் ஓசை மட்டும் கேட்கிறது]

செல்வ : நான் கண்டது... கனவா...நினைவா விஷ்ணு சித்தன்...ஸ்ரீ வில்லிபுதூர்...கண்டேன் கண்டேன்... இந்த சந்தோஷமான செய்தியை... இப்பொழுதே மன்னரிடம் சொல்ல வேண்டும்...மன்னா...மன்னா!

[செல்வ நம்பி ஓடுதல்]

— திரை —

## காட்சி : 15

இடம் : அரசன் அறை

கதாபாத்திரங்கள் : வல்லபதேவன்—அரசி—செல்வநம்பி—தோழி

[வல்லபதேவன் அங்குமிங்கும் உலாவுதல்]

அரசி : சுவாமி! நள்ளிரவு நெருங்கியும் துயில் கொள்ளாது சிந்தித்துக் கொண்டே இருந்தால் எப்படி...? உடலையும், உள்ளத்தையும் வருத்துவதால் ஒரு பலனும் இல்லை...

வல்லப : தேவி! பகைவர்களின் படைகள்...மடை திறந்த வெள்ளம் போல் பெருகி வந்தாலும் ..அஞ்சாத இந்த வல்லபதேவன் ஓர் அந்தணரின் அரிய வாசகத்துக்கு அடி பணிந்து விட்டேனே...கடும் புயலுக்கும்... காட்டாற்று வெள்ளத்துக்கும், சற்றும் நிலை குலையாத இந்த பாண்டியன் ஓர் பண்டிதரின் பாட்டுக்கு பித்தனாகி விட்டானே...! சேவடி சிவக்க வந்து... மாவிலியிடம் மூவடி கேட்ட முகுந்தனைப் போல்... இந்த புரவலனிடம், அந்தப் புலவன் கேட்ட கேள்வி என்னை கேலி செய்து சிரிக்கிறது... என் கண்ணே!

அரசி : அரசே! கணை தொடுத்தவன் கடவுளாக இருக்கும் போது... கலக்கம் எதற்கு சுவாமி...? வினா எழுப்பியவனே... தங்களுக்கு விடையும் தருவான்... அது நிச்சயம்!

வல்ல : பட்டமகரிஷி...நீ சொல்வதும் சரிதான்! உனது வார்த்தைகள் பட்டு போன என் மனதை துளிரச் செய்து விட்டது.

அரசி : வாருங்கள்...துயில் கொள்ளச் செல்வோம்.

வல்லப : எனக்கு மலர் மஞ்சம் தேவையில்லை...மனதுக் நிம்மதி பிறந்தால் போதும்!

அரசி : கணவனுக்கு நிம்மதியைக் கொடுக்கத்தாே இறைவன் எங்களைப் படைத்திருக்கிறான்.

வல்லப : என் அலங்கார மாளிகையின் அழகு விளக்கே. நீ உண்மையிலேயே என் மன இருளை அகற்று பேரின்ப ஜோதி தான்...வா!

[வெளிப்பக்கமிருந்து கதவு தட்டும் சத்தம்]

வல்லப : யாரங்கே...

[ராணி கதவுத் திறக்க—அரசியின் தோழி வருதல்

தோழி : தேவி! அமைச்சர் செல்வநம்பி மன்ன அவசியம் பார்க்க வேண்டுமாம்...

அரசி : வரச்சொல்...சுவாமி! அமைச்சர் இந்த நள்ளிர வேளையில் எதற்காக தங்களைப் பார்க்க துடி கிறார்...?

[செல்வநம்பி வருதல்]

செல்வ : அரசனுக்கும், அரசிக்கும் அமைச்சர் செல்வநம் யின் வணக்கங்கள்...!

வல்லப : என்ன அமைச்சரே...! இந்த அகால வேளையி இத்தனை பதட்டம்...? பகைவர் படையெடுத் வருகின்றனரா...? அன்றி வனவிலங்குகள் நம் அரம மனைக்குள் புகுந்து விட்டதா...?

செல்வ : அரசே! என் கனவிலே ஸ்ரீ மந் நாராயண காட்சி தந்தான்...தங்கள் ஐயப்பாட்டைத் தீர்க்க பொருள் சொல்லப் போகும் பண்டிதனை அடையாள காட்டிச் சென்றான்...

வல்லப : அப்படியா...! மெத்த மகிழ்ச்சி!

அரசி : அமைச்சரே; பரந்தாமனைக் கனவில் தரிசித் நேரில் உரையாடும் பேறு பெற்ற தாங்கள் தொழுத குரியவர்... என்னை வாழ்த்துங்கள்...

செல்வ : அபச்சாரம்... மகாராணி அவர்கள் என் அன்னைக்குச் சமமானவர்கள்!

வல்லப : நீர் பெற்ற பேறு எவர் பெறுவர்...? நாளை அப்பண்டிதரை ராஜமரியாதையுடன் அழைத்து வாரும்...

செல்வ : இந்த அகால வேளையில் அந்தப்புரம் வந்ததற்கு மன்னிக்க வேண்டும்.

வல்லப : கொண்டு வந்த செய்தி சுவையான செய்தி அல்லவா... அடிக்கரும்பினை ருசிப்பது போன்ற தேனான செய்தி அல்லவா...? சந்தோஷ செய்தி அல்லவா...? சித்தம் கலங்குகின்றவனுக்கு கிடைத்த சஞ்சீவி அல்லவா...? அமைச்சரே! நீர் என்றும் எப்பொழுதும் வரலாம்...நீர் எமக்கு அமைச்சர்மட்டுமல்ல! அறிவு கூறும் ஆசான்...ஆருயிர்த் தோழன்!

செல்வ : மிக்க மகிழ்ச்சி...நான் வருகிறேன் அரசே!

அரசி : என் நாயகனுக்கு இனிமேல் நிம்மதியான உறக்கம் கிட்டும்!

[செல்வநம்பி போகிறான்]

— திரை —



## காட்சி : 16

இடம் : முகுந்தபட்டர் இல்லம்

கதாபாத்திரங்கள் : விஷ்ணுசித்தர்—விரசை—அரண்மனை அதிகாரி

விரசை : சுவாமி! பொன்னும் பொருளும் பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள்... இரவு வந்தால்... ஏதாவது கிராமத்தில் தங்கி, மறுநாள் பொழுது புலர்ந்ததும் புறப்படுங்கள்...பாண்டிய நாட்டு காடுகளில் கள்வர் பயம் உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன்...

விஷ்ணு : கள்ளழகர் ஆட்சி புரியும் மதுரைக்குப் போகிறேன். கள்வர்களைப் பற்றி நான் ஏன் பயப்பட வேண்டும்.

[விஷ்ணுசித்தர் புறப்படுவதற்கு தயாரானதும் விரசை ஆர்த்தி எடுத்தல்]

விஷ்ணு : இதெல்லாம் எதற்கு...?

விரசை : அம்மா இருந்தா...இப்படித்தான் செய்வாங்க... என்னங்க இது...இந்த அங்கியை போட்டுக்கிட்டு போறீங்க...

விஷ்ணு : இதற்கென்ன...?

விரசை : மன்னனைப் பார்க்கப் போறீங்க...சற்று ஆடம்பரம் வேண்டாம்...?

[உள்ளே சென்று ஜரிகை அங்க வஸ்திரம் கொண்டு வருதல்]

இந்த சிகப்பு அங்கவஸ்திரம் எவ்வளவு அழகா இருக்கு பார்த்தீங்களா... என் கண்ணே பட்டிடும் போலிருக்கு...

விஷ்ணு : நான் வரட்டுமா...?

விரசை : வெற்றியோடு திரும்பி வாங்க... அவைக்கள புலவர்களைப் பார்த்து பயந்து போகாதீங்க...பகவான் இருக்கிறார்...

விஷ்ணு : விரசை! எனக்கென்னமோ... பயமாகத்தான் இருக்கு...ஆயிரம் பேர் கூடியிருக்கிற அவையிலே... திரௌபதி துகில் உரியும் போது...இதயகமல வாசா என்று அபயக்குரல் கொடுத்தது போல்...நானும் அவையிலே மன்னன் கேள்விக்கு பதில் சொல்ல முடியாமல் மானம் போகும் போது... இதயகமலவாசா என்று கத்தத்தான் போகிறேன்.

விரசை : உங்களை அந்த அளவுக்கு பகவான் விட்டுவிட மாட்டார்... தைரியமாக... புருஷனா... லக்ஷணமா... இல்லே...இல்லே... பெரும் புலவரா...லக்ஷணமா... போயிட்டு வாங்க.

[அரண்மனை அதிகாரி உள்ளே வருதல்]

அதிகாரி : சுவாமி! பாண்டியநாட்டு அரண்மனை அதிகாரி தங்களை நமஸ்கரிக்கின்றேன்...தங்களை இப்பொழுதே பல்லக்கில் ஏற்றிக் கொண்டு அவைக்கு வருமாறு கூடல் மாநகரத்தில் கொலுவிருக்கும் ஸ்ரீராஜராஜ ஸ்ரீ மன்னாதி மாமன்னன் வல்லபதேவ பூபதியின் அன்புக் கட்டளை! அடியவர் ஆணையை ஏற்றுக் கொண்டு நாங்கள் கொண்டு வந்திருக்கும் முத்துப் பல்லக்கில் எழுந்தருளுமாறு நாங்கள் பிரார்த்திக்கின்றோம். இதோ மன்னர் கொடுத்த மடல்.

[விஷ்ணுசித்தர் மடலைப் படித்தல்]

விஷ்ணு : ஸ்ரீவில்லிபுதூர் பெற்றெடுத்த, நாளிலம் போற்றும்... நற்கவிராயரே! (தனக்குள்) நான் கவிராயரா... (படித்தல்) இம்மடலை பாண்டிய பூபதி வல்லபதேவன் சொல்ல அமைச்சர் செல்வநம்பி எழுது

வது...தாங்கள்... முத்துப்பல்லக்கில் எழுந்தருளி மதுரை மாநகரம் வரவேண்டும் என்பது மன்னரின் ஆணை! மன்னவர்க்கு இந்த ஆணையிட்டது அந்த ஆண்டவன்! உங்கள் வரவை எதிர்பார்க்கும்-வல்லபதேவன்—

[காவலன் புறத்தே செல்கின்றான்]

விஷ்ணு : விரஜை! இதென்ன வேடிக்கை... எதற்காக என்னை அழைத்து வரச் சொல்லி...மன்னன் பல்லக்கு அனுப்புகிறான்...

விரசை : ஒன்றுமே புரியவில்லையே சுவாமி!

விஷ்ணு : விரஜை! இதெல்லாம்...அந்த ஓங்கி உளகளந்த உத்தமனின் விளைாட்டுத்தான்...நீறுபூத்த நெருப்பாக இருந்த விஷ்ணுசித்தனை... சாம்பல் ஊதி நெருப்பை ஜொலிக்க வைக்க அந்த கோகுலத்து பாலகன் திருவிளையாடல் புரிகின்றானா...மதுரைக்கு புறப்படு என்று என் கனவிலே வந்து அன்பு கட்டளை இட்ட அந்த அஞ்சன வண்ணன் முத்துப்பல்லக்கு அனுப்பி அருள் செய்கின்றானே...பஞ்சவர் தூதுவனாய் சென்றவனே! அஞ்ச பணத்தின் மேல் பாய்ந்திட்டு அருள் செய்த மாலே! மணிவண்ணா...இன்று எனக்கு முத்துப் பல்லக்கு அனுப்பி அருள் செய்தாயோ...

விரசை : சுவாமி! இறைவன் அருளால் வெற்றி பெருமிதத்துடன் தாங்கள் வரும் காக்ஷியை...இந்த எளியவள் கண்டு தரிசிக்கப் போகிறேன்...

விஷ்ணு : ஓம் நமோ நாராயணா!

[விஷ்ணு சித்தரும், விரசையும் வாயில் பக்கமாக வருதல்]

— திரை —

## காட்சி : 17

இடம் : வடபத்ரசாயி சன்னதி

கதாபாத்திரங்கள் : விஷ்ணுசித்தர் -- அர்ச்சகர்—காவலர் இருவர்.

[விஷ்ணுசித்தர் கரம் கூப்பி சந்நதி முன் நிற்கிறார். காவலர் காவலுக்கு நிற்கின்றனர்,— தீபாராதனை நடக்கிறது — அர்ச்சகர் பகவான் திருமேனியில் அலங்கரித்திருந்த பூமாலையைக் கொண்டு வந்து விஷ்ணுசித்தருக்கு அணிவித்தல்.]

அர்ச் : விஷ்ணு சித்தரே! மதுரைக்குச் சென்று வெற்றி வாகை சூடிவரப் போகும் உங்களுக்கு... எம்பெருமானின் திருமாலை வெற்றிப் புகழ் மாலையாக அந்த திருமாலே அருள் செய்து அளிக்கின்றான்.

விஷ்ணு : சுவாமி! அவன் எத்தனையோ அற்புதங்களை நடத்துகிறான்... ஒன்றா... இரண்டா... பக்தனுக்காக அவன் பாதம் சிவக்க நடக்கின்றான்...திருமேனி நோவ பணி செய்கின்றான். போர்க் களத்தில் வெற்றிச் சங்கம் முழங்குகிறான்... வெற்றியைத் தேடி தருவதற்கு விஜயனுக்கு கீதையைப் போதிக்கிறான்... இந்த எளியவனுக்காக நம் மதுரை மன்னனை ஏவல் கொண்டு... முத்துப் பல்லக்கு அனுப்பி வைத்திருக்கிறான்...

அர்ச் : காரணம் இல்லையேல் காரியம் இல்லை...காரியம் இல்லையேல் காரணமில்லை... நான்முகனைப் படைத்தவன் தான் இந்த நானிலத்திற்கு நடந்து வந்து...நம்மிடம் இப்படியெல்லாம் நாடகம் ஆடுகிறான்... தாங்கள் சந்தோஷமுடன் சென்று

வாருங்கள்...வீட்டைப் பற்றிக் கவலை வேண்டா நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்...

விஷ்ணு : அந்தக் கவலை எனக்கு என்றுமே கிடைய என் கவலை எல்லாம் அந்த திருமகன் கேள்வ பற்றித்தான்...இந்த எளியவனையும் ஒருபொருட் கொண்டு இப்படிப் பட்ட பேரருள் புரிகின்றாே என்றுதான் கவலைப் படுகிறேன்.

அர்ச் : பரமன் மீதுள்ள பக்தியால் நீங்கள் இப்படி சஞ்ச கொள்கிறீர்கள். நீங்கள் அவனுக்குச் செய்கின்ற தி துழாய்க் கைங்கரியதுக்கு...நீங்கள் பிரதி உபகாரத் எதிர்பார்க்கா விட்டாலும்... அவன் செய்யக் கட பட்டவன்... செய்கின்றான்... கல்லும் மண்ணும் கல அவலுக்காக குலேசனுக்கு அஷ்ட ஐசுவரியங்களை கொடுக்க வில்லையா? கம்ச வதத்தின் போது க சந்தனம் அளித்த பக்தையின் கூனை நிமிரச் செ வில்லையா? பக்தர்களுக்கு பிரதி உபகாரம் செ தென்றால் எம்பெருமானுக்குக் கொள்ளை இன்பம்.

விஷ்ணு : நான் வருகிறேன்...வடபத்ரசாயிக்கு நான் வ வரை... என் மனையாள்... அடியேனின் திருத்துழா கைங்கர்யத்தைக் கவனித்துக் கொள்வாள்.

[கோயில் மணி அடிக்கும் சத்தம்—எம்பெருமா திரு முன் ஒரு ஜோதி—விஷ்ணு சித்தர் கண்களுக மட்டும் தெரிதல்]

விஷ்ணு : ஓம் நமோ நாராயண!

— திரை —



## காட்சி : 18

இடம் : அவை

கதாபாத்திரங்கள் : வல்லபதேவன் — புத்த, சைவ வைஷ்ணவ, சமண மத பண்டிதர்கள்—விஷ்ணுசித்தர்—செல்வநம்பி—காவலர்—ஸ்ரீமந்நாராயணன்

[வல்லபதேவனின் அவையிலே சைவ, வைஷ்ணவ, புத்த சமண மத பண்டிதர்கள் ஆணவத்துடன் அமர்ந்திருத்தல்— ஒரு கம்பத்தில் பொற்கிழி கட்டி வைக்கப்பட்டிருக்கிறது]

புத்த : பாண்டிய நாட்டில் இப்படியொரு வேடிக்கையா... மன்னனுக்கு எழுந்த ஐயப்பாட்டை எவராலும் தீர்க்க முடியவில்லையே...? அந்த புத்த பகவானே நேரில் வந்து தான் தீர்த்து வைக்க வேண்டும் போலிருக்கிறது... புத்தம் சரணம் கச்சாமி...!

சைவ : நமச்சிவாய! சைவ ஆகமங்களில் சொல்லப்படாத விஷயங்கள் இந்த உலகில் வேறு எந்த இதிகாச புராண சாஸ்திரங்களிலும் கிடையாதே!

வைஷ் : ஆளாளுக்கு இப்படி மார்த்தட்டிக் கொள்வதால் ஒரு பயனும் இல்லை... நம் எவராலும் பாண்டியனின் ஐயத்தை அகற்ற முடியவில்லை! வருகின்ற புலவர்களோ...பொற்கிழியைப் பார்த்து ஒருவர் பின் ஒருவராக பெருமூச்சு விட்டு செல்கிறார்களே தவிர...வல்லபதேவனின் ஐயத்துக்கும் பதில் சொல்வதாகத் தெரியவில்லை...

சமண : இன்று எத்தனை புலவர்களோ...! அதோ... ஒரு அப்பாவியை நமது அமைச்சர் செல்வநம்பி ராஜ உபசாரத்துடன் அழைத்து வருகிறாரே...?

[ராஜமரியாதையுடன் விஷ்ணு சித்தரை அழைத்து வந்து ஆசனத்தில் அமரச் செய்து அருகே செல்வ நம்பி கைகட்டி நிற்கிறார்—அவையிலே சிரிப்பொலி கேட்கிறது. விஷ்ணுசித்தர் திகைக்கிறார்—அமைச் சரைப் பார்க்கிறார். இருவரும் ஜாடைமாடை யாகப் பேசுதல்]

புத்த : இவரைப் பார்த்தால் பண்டிதராகத் தெரிய வில்லையே...மன்னனிடம் ஏதோ யாசகம் கேட்க வந்த வர் போல் தெரிகிறது.

சைவ : யாசிக்க வருபயவனுக்கு ஏன் வீணான அரசாங்க மரியாதை...? அரியாசனம்... ஆலவட்டம்... அம்பாரி! அரண்மனை வாயிலிலேயே இவனைக் கவனித்தேன்...

வைஷ் : ஊமை பேசினாலும் பேசிடுவான்... இந்த மண் தோண்டி செடி வளர்ப்பவன்...வாயே திறக்கப் போவ தில்லை...

சமண : நம் அமைச்சரும் யார் யாரையோ அழைத்துக் கொண்டு தான் வருகிறார்.

[அரசன் வருதல்]

காவலர் : மூவுலகு போற்றும் பாண்டிய மாமன்னன்! இமயத்தில் மீன்கொடி பொறித்த பெருவேந்தன்! ஆரியப்படை கடந்த அஞ்சா நெஞ்சன்! போர்க் களம் பல கண்ட கன்னித் தமிழ்க் காவலன் முத்தமிழ் வித்தகர்...கூடல் மாநகரத்து வைரமணி சிம்மாசனத்தில் கொலுவிருக்கும் ராஜஸ்ரீ ஸ்ரீவல்லபதேவ மாமன்னர் வருகிறார்... பராக்... பராக்!

[அவையிலே எல்லோரும் எழுந்திருத்தல்—அரசன் எழுந்து நிற்கும் விஷ்ணு சித்தர் அருகில் வந்து வணங்கி அவரை அரியாசனத்தில் உட்கார வைத்து மன்னன் சிம்மாசனத்தில் அமருதல்—புலவர்கள் ஒருவரையொருவர் பார்த்து கொள்ளுதல்]

வல்லப : பரந்தாமனின் பேரருளைப் பரிபூரணமாக பெற்ற ஞானத்தவச் செம்மலே! மலர்வனம் அமைத்து மால் வண்ணனுக்கு திருத்துழாய் கைங்கரியம் செய்து வரும் திருத்தொண்டரே! பாண்டியன் வல்லபதேவனின் பணிவான வணக்கங்கள்! எமது அழைப்பினை ஏற்று இந்த எளியவனின் அவைக்கு எழுந்தருளியமைக்கு நன்றி! பாண்டிய பூபதியும்...அமைச்சர் செல்வநம்பியும் பெருமிதம் கொள்கின்றோம்.

செல்வ : வெற்றிகள் பலகண்ட நமது மன்னர்க்கு ஒரு சந்தேகம்...! நீவிர் அதனைத் தீர்த்து வைப்பீர் என்ற நம்பிக்கை எமக்கு திடமாக ஏற்பட்டுள்ளது.

சமண : அரசே! அவைப் புலவர்களுக்கு ஒரு விண்ணப்பம்...!

வல்லப : என்ன...?

புத்த : அரசே! வேதத்திற்கு விளக்கம் சொல்ல வந்திருக்கும் இம்மகா பண்டிதர் முதலில் எங்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டும். அவைப் புலவர்கள் அங்கீகாரத்தை முதலில் பெறட்டும்.

அரசர் : அப்படியே ஆகட்டும்...!

புத்தர் : இந்த உலகத்தை படைத்தது யார்...?

விஷ்ணு : ஸ்ரீமந் நாராயணன்!

சமண : கடினமான கேள்வியைத் தொடக்கத்திலேயே கேட்டால் துவண்டுவிடப் போகிறாய் என்று தான் இப்படியொரு சுலபமான கேள்வி...!

புத்த : அவன் படைத்ததினால் தானே மனிதர்க்கு வறுமை ...மூப்பு...பிணி...போன்ற துன்பங்கள்! இப்படியிருக்க எதற்காக அவன் மனிதனைப் படைத்தான்...?

விஷ்ணு : படைத்தவனை மறவாமல் இருக்கத்தான்...அவனுடைய பாதக் கமலங்களைச் சரணாகதி என்று பற்று

வோர்க்கு இன்பமும்...துன்பமும் ஒன்றுதான்... கங்கை யில் நீராடினால் நாம் புனிதம் அடைகின்றோம்... புண் ணியம் பெறுகின்றோம்...கங்கையில் நீராடாவிட்டால் நமக்குத்தான் கஷ்டமும் நஷ்டமும்...கங்கைக்கு ஒன்றும் இல்லையே...!

சைவ : அவன் திருவடியை அடைவதற்கு வழி...?

விஷ்ணு : நமது கர்மாவை சத்தியம் தவறாமல் செய்ய வேண்டும்... அப்பொழுதுதான் அவன் நம்மை நாடி வருவான... நாம் அவனைத் தேடிப் போக வேண்டிய தில்லை.

வைஷ் : ஆண்டவனை வழிபடுவதனை விட அடியார்களை வழிபடுவது தான் சிறந்தது என்று சாஸ்திரம் கூறு கிறதே! அது ஏன்...?

விஷ்ணு : ஆண்டவனுக்குச் செய்வது அடியார்களைப் போய்ச் சேராது...ஆனால்...அடியார்களுக்குச் செய்வது ஆண்டவனைச் சென்று அடையும்.

வைஷ் : அப்படி என்றால்...?

விஷ்ணு : ஆண்டவனுக்கு செய்வது ஆராதனை— அடி யார்க்குச் செய்வது சமாராதனை...!

சைவ : எத்தகைய தவம் சிறந்தது...?

விஷ்ணு : பொய்ம்மை என்னும் புன்மை—அதாவது அற்பம்...ஈனம்...சிறுமை... அகந்தை இல்லாதிருத்தல்... சாதாரண மனிதர்க்கு மட்டுமல்ல; பண்டிதர் என்று பறைசாற்றிக் கொள்ளும் ஞானியர்க்கும் பொருந்தும்.

புத்த : அதாவது...

விஷ்ணு : தெளிவான மனம்! சத்தியம் தவறாத செயல் ஞானியர்க்கு அழகு!

புத்த : நீர் சொல்லும் சத்தியம் தானே அரிச்சந்திரனை... மனைவி மக்களை விற்கச் செய்தது...சுடலைக் காக்கச் செய்தது?

விஷ்ணு : முடிவில் ஜெயித்தது சத்தியம்! சத்தியத்துக்கு ஓர் அரிச்சந்திரன்...! தர்மத்துக்கு ஓர் தர்மர்...! நீதிக்கு ஒரு சகாதேவன்...! வில்லுக்கு ஒரு விஜயன்...! பிரம்ம ரிஷிக்கு ஒரு வசிஷ்டர் என்று சொல்கிறோமே தவிர அகந்தைக்கு இவன்... ஆணவத்துக்கு அவன்... கொலைக்கு இவன்...என்று சரித்திரம் பேசுவதில் லையே...!

புத்த : கடலினும் பெரிது எது...?

விஷ்ணு : பொறுமை...

புத்த : அப்படி என்றால்...

விஷ்ணு : பொறுமை புகழை வளர்க்கும்...புண்ணியத்தைப் பெருக்கும்.

சைவ : மனிதன் மூப்பைக் கண்டு எதற்காக பயப்படு கிறான்...?

விஷ்ணு : தேவர்கள் மூப்பிற்கு அஞ்சித்தானே பாற்கடலில் அமிர்தம் கடைந்தார்கள்... அப்படியிருக்க கேவலம் மனிதர்கள் அஞ்சுவது ஒன்றும் ஆச்சரியமில்லையே...

புத்த : இருளை நீக்குவது...?

விஷ்ணு : குரு! குருதேவர் அறிவைத் தருகிறார்...மன இருளை அகற்றுகிறார்.

புத்த : உமக்கு குரு யார்...?

விஷ்ணு : தூணிலும் இருக்கும்...துரும்பிலும் இருக்கும் அந்த மதுசூதனன்! துவாரகா புரிநாதன்! இதய கமல வாசன்... ஸ்ரீமந் நாராயணன்]

புத்த : வார்த்தைக்கு வார்த்தை நாராயணன் என்கிறீர் களே... அரியா...? அரனா...? யார் உயர்ந்தவர்...?

விஷ்ணு : ஊனக் கண்களுக்குத் தான் இப்பேர்ப்பட்ட ஐயப்பாடு எழும்...ஞானக் கண்களுக்கு ஏது...? பேயாழ்வார் திருவேங்கடமலையில் உறையும் பெருமானை ஒரு புறம் சடை முடியோடும்...மறுபுறம் மணிமுடியோடும் காண்கிறார். ஒரு கரத்தில் மழு...மற்றொரு கரத்தில் சக்கரம்...ஒரு புறம் நாகாபரணம்...மற்றொருபுறம் பொன்னாபரணம்.. ! இன்னும் விளக்கம் வேண்டுமோ!

புத்த : விதி என்பது என்ன...!

விஷ்ணு : பரம்பொருளின் ஒரு சக்தி வடிவம்!

சைவ : நமக்கு உற்ற நண்பர்கள் யார்...?

விஷ்ணு : புராணங்கள் ஒன்றே தான் பரம்பொருளின் தத்துவத்தை நமக்கு உணர்த்தி நல்வழிகாட்டும் நண்பர்கள்! உபநிஷத்துக்கள் ஒன்றே உற்ற துணைவர்கள். வேதம் தான் நம் பேதத்தைப் போக்கி புண்ணியப் பாதை காட்டும் நண்பர்கள்...!

சமண : அந்தர்யாமியை எப்படி உணர்வது...?

விஷ்ணு : முன்வினை பயன் நம்மை துன்பச் சூழலில் தள்ளுகிறது...நாம் செய்வதறியாது திகைக்கின்றோம்...மாயா சக்தியால் மனம் பேதலிக்கின்றோம்...அப்பொழுது நாம் மனத்தால் இறைவனை தியானிக்க வேண்டும்... அலைபாயும் நம் மனம் அவனருளால் தூய நெறியை உணர்கிறது...அந்த மனோநிலையில் இறைவனின் உண்மைப் பொருளை எவனொருவன் உணர்கிறானோ அவனே இந்த அந்தர்யாமி நிலையை அடைந்தவன் ஆகிறான்.

[கம்பம் ஆடுகிறது — அனைவரும் திகைத்தல்-அவையில் ஆரவாரம்]

வல்லப : புலவர்களே! போதும் உங்கள் பரீக்ஷை! செல்வ நம்பி...! எமக்கு ஏற்பட்டுள்ள ஐயப்பாட்டை எடுத்து இயம்புவீர்.

செல்வ : குருதேவா...! இரவுக்கு வேண்டியதை பகலிலும்... முதுமைக்கு வேண்டியதை இளமையிலும்... மறுமைக்கு வேண்டியதை இம்மையிலும் தேடுக...! எதை இம்மையில் தேடச் சொல்கிறார்...? விளக்கம் தேவை நம் வேந்தனுக்கு...

*[விஷ்ணு சித்தர் எழுந்து நின்றார்—ஸ்ரீமந் நாராயணன் பேரொளிப் பொங்க விஷ்ணு சித்தர் இதயத்தில் கலத்தல்]*

விஷ்ணு : பாடல் :

*ஹவிதம் பாஷித்ஞசைவ*
*கதிர்யா யச்ச சேஷ்டிதம்*
*தத்ஸர்வம் தர்ம வீர்யேண*
*யதாவத் ஸம்ப்ரபஸ்யதி!!*

*[விளக்கம் அளித்தல்]*

*ஸ்ரீ வால்மீகி மகரிஷி பிரம்மதேவனின் பேரருளால் சகலார்த்தங்களையும் அறிந்து கொண்டாற்போல் ராஜ குமாரனான துருவன் ஸ்ரீ பஞ்ச சந்நியத்தின் ஸபரிசத்தினால் சர்வ வல்லவனாக விளங்கினாற் போல் இவ் வாழ்வாரும்...நிர்ஹேதுக பகவத் பிரசாதத்தாலே சகல வேத சாஸ்திரங்களையும்... இதிகாச புராணங்களையும் ஸக்ஷாத்கரிக்கின்றேன்... உலகில் ஆதியாகவும்... அந்தமாகவும்...அங்கிங்கெனாதபடி... எங்கும்...நிறைந்திருக்கும் பரம்பொருள் ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே!*

*[மஹா விஷ்ணுவை விசுவ ரூபமாக காண்பித்தல்]*

*சுலோகம்: பரித்ராணாய சாதூனாம்*
*வினாசய சதுஷ்க்ருதாம் தர்ம*
*ஸமஸ் தாபனார்தாய சம்பவாமி*
*யுகே ...யுகே!!*

விஷ்ணு : அவனே வசிஷ்டா அத்வைதத்தின் ஒப்பற்ற தத்துவப் பொருள்...!

[ஓம் நமோ நாராயணா! ஓம் நமோ நாராயணா!]

ஸ்ரீமந் நாராயணனின் திருவடியை இம்மையில் சரணம் என்று பற்றிக் கொள்ள வேண்டும்...அவன் ஒப்பற்ற பரம் பொருள்... சதுர்முகத்தேவனுக்கும்... சங்கரனுக்கும் முதல்வனாக விளங்குபவன் வேத முதல்வனான... ஸ்ரீமந் நாராயணன்! அவனே வேத சொரூபி...அவன் இல்லையேல் அணுவும் அசையாது... இளமையில் அவன் புகழ்ப்பாட வேண்டும்...முதுமையில் அவனைத் தரிசிக்கத் துணிவு பெறுவோம்...இம்மையில் அவனை சரணடைந்தால்... மறுமையில் அவன் நம் மோடு இருப்பான்... இதுவே அதன் விளக்கம் இதற்கு மேல் இந்த அவையிலே கூடி இருக்கும் பண்டிதர்களுக்கு புரியவைக்கும் அளவு எமக்கு ஆற்றல் இல்லை...

வல்லப : என்ன அற்புதமான விளக்கம்...இருளடைந்த இதயத்தில் ஓர் ஜோதி! என் மனம் தெளிந்தது...ஐயம் தீர்ந்தது...பரமன் அருளைப் பரிபூரணமாகப் பெற்ற மகா பண்டிதரே! உம்மிடம் நான் ஞான மார்க்கத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள பிரார்த்திக்கின்றேன்...

விஷ்ணு : அரசே! உமக்கு மட்டும் வேதாந்த ரகசியங்களையும்...வேதங்களின் சாரத்தையும்...விரிவான விளக்கங்களையும் தனிமையில் உபதேசிப்போம்! இதுவே இந்த அடியவனின் விண்ணப்பம்...! இதுவே அந்த அனந்தனின் ஆணை...!

[பொற்கிழி கட்டியிருந்த கம்பம் வளைந்து விஷ்ணு சித்தர் அருகில் வருதல்—அரசன் விரைந்து வந்து அவரது பாதங்களைப் பணிந்து பொற்கிழியை அவிழ்த்துக் கொடுத்தல்]

வல்லப : வேத விற்பன்னர் விஷ்ணுசித்தர் அவர்கட்கு ''பட்டர்பிரான்'' என்று விருதை வழங்குகின்றேன்...

குரல் : ''பட்டர்பிரான்'' வாழ்க...வாழ்க!

குரல் : வாழ்க...வாழ்க...

செல்வ : பொற்கிழி அறுத்த செல்வர்!

குரல் : வாழ்க...வாழ்க!

வல்லப : செல்வநம்பி! விஷ்ணுசித்தரை யானை மீது எழுந்தருளச் செய்து ராஜமரியாதையுடன் அவரது இல்லத்திற்கு அனுப்பி வைக்கவும்!

செல்வ : ஆணை மன்னவா! சுவாமி எழுந்தருளுங்கள்...!

வல்லப : சுவாமி ! ஓரிரு தினங்கள்... எனது மாளிகையில் தங்கியிருந்து, எனது உபச்சாரங்களை... ஏற்று என்னை ஆசீர்வதித்துச் செல்லவேண்டும். மறுத்துவிடாதீர்கள்...

விஷ்ணு : ஆகட்டும் மன்னவா...

[விஷ்ணுசித்தர் பகவான் மீது பல்லாண்டு பாடுதல்- ஸ்ரீமந் நாராயணன் பிரத்யக்ஷம் ஆகிறார்- விஷ்ணு சித்தர், மகாவிஷ்ணு-தனி Spot]

ஸ்ரீமந்நாராயணன் : பல்லாண்டு பாடி எம்மை பரவசப் படுத்திய என் அன்பிற்கினிய பக்தனே! இன்று முதல் நீ ''பெரியாழ்வார்'' என்று அனைவராலும் போற்றப் படுவாய்...பூவுகில் பலகாலம் வாழ்ந்து எம்மை பைந் தமிழ் சுவைச் சிந்தும் பாமாலையாலும்... நறுந்தேன் சிந்தும் பூமாலையாலும் போற்றிப் புகழ்ந்து பேரானந்தம் பெறுவாய்!

[மஹாவிஷ்ணு மறைந்து அருளுகின்றார்]

— திரை —

## காட்சி : 19

இடம் : திருக்கோயில்

கதாபாத்திரங்கள் : முகுந்தபட்டர்— விஷ்ணுசித்தர் — விரஜை அர்ச்சகர்—பெரியோர்கள்—காவலர்

குரல் : பெரியாழ்வார் வாழ்க! விஷ்ணுசித்தர் வாழ்க!

[பெரியாழ்வார் யானையில் நின்றும் இறங்குதல்— வைஷ்ணவ அடியார்கள் வரவேற்றல்— விரஜை மற்றும் பெண்கள் அவரது பாதங்களை நமஸ்கரித்தல் - பெரியாழ்வார் பெற்றோர்களை நமஸ்கரித்தல்]

முகு : விஷ்ணு! நீ பாருக்கெல்லாம் தலைவன்! பண்டிதற்கெல்லாம் தலைவன்! வைஷ்ணவ சித்தாந்தத்திற்கு, பைந்தமிழ்ப் பாக்களால் திருமஞ்சனம் சூட்டிய அருட்கவி! உன்னைப் பிள்ளையாகப் பெறுவதற்கு நாங்கள் எந்தப் பிறவியில் எத்தனை தவம் செய்தோமோ...?

விஷ்ணு : தந்தையே! நான் அடியவன்! எளியவன்! தாஸர்களுக்கெல்லாம தாஸன்! நான் தலைவன் அல்ல; தொண்டன்...எம்பெருமானுக்குத் திருத்துழாய் கைங்கரியம செய்கின்ற ஒரு சாதாரண பக்தன்...! நம் எல்லோருக்கும் தலைவன்...அவன் ஒருத்தன் தான்... வடபத்ரசாயி!

[பெரியாழ்வார் பாடுதல்— அர்ச்சகர் பரிவட்டம் கட்டி, மாலை அணிவித்து—கௌரவம் செய்தல்]

பாடல் : பல்லாண்டு என்று பவித்திரனை பர
மேட்டியை சாரங்க மென்னும்
வில்லாண்டான் தன்னை வில்லிபுத்தூர் விட்டு
சித்தன் விரும்பிய சொல்

நல்லாண்டென்று நவின்றுரைப் பார்நாமோ
நாராயணாயவென்று
பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருத்தேத்
தவர் பல்லாண்டே
வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன்
மனத்தே
கோவில் கொண்ட கோவலனைக் கொழுங்குளி
முகில் வண்ணனை
ஆயரேற்றை அமரர்கோவை அந்தணர்தம்
அமுதத்தினை
சாயைப் போல பாடவல்லவர் தாமு
மணுக்கர்களே!!

குரல் : விஷ்ணுசித்தர் வாழ்க! பெரியாழ்வார் வாழ்க!!

விஷ்ணு : பண்டிதர்கள் கூடியிருந்த அவைநடுவே...இந்த ஞானசூனியத்துக்கு வேதசாரத்தை போதித்த கோகுலத்து பாலகா! உன் பொற்கமல பாதங்களைப் பற்றிக் கிடந்த இந்த பக்தனுக்கு பொற்கிழி எதற்கு...? எவருக்கும் கிடைத்தற்கரிய பெரும் பாக்கியத்தைத் தந்தருளிய தாமோதரா! உன் அருளைத் தவிர... எனக்கு வேறு ஏதும் சுகம் தருவதாக இல்லையே...! நாராயணா! உன் நாமம் இருக்கும் போது உருண் டோடும் இந்த பணம்...காசு... எனக்கு எதற்கு...? உனக்கே அர்ப்பணிக்கிறேன்... கல்லும்...மணலும் கலந்த அவலைக் கொடுத்த குசேலனுக்கு அஷ்ட ஐசுவரியங்களையும் வர்ஷித்தாய்! அது தகும்... அவன் பக்தன்...உன் பால்ய சிநேகிதன்... நான் உனக்கு ஒன்றும் தரவில்லையே...! மாலைத் தொடுத்தேனே தவிர உனக்கு மலைப்போல் காணிக்கைச் செலுத்தி தரவில்லையே...! அதனால் எளியேனது காணிக்கை யாக இதனை ஏற்றுக் கொண்டு என்னை தனியனாக்கு வாய்...! உன் திருக்கோயில் கோபுரத்திருப்பணிக்கு இப் பொன் பயன்படட்டும்...

[கோவில் மணி ஒலிக்கிறது — சங்குநாதம்
வேத கோஷம் — கர்ப்பகிரஹத்தில் ஒளி]

[விஷ்ணுசித்தர் தனி Spot]

அசரீரீ : அன்ப! பெரியாழ்வானே! அந்த பொன்னை நீ
வைத்துக் கொள்! நீ எனக்கு மாலை தொடுத்து அ
வித்தாய்...யாம் உமக்கு பாமாலைத் தொடுக்கு
ஆற்றலை அருளினோம்... இந்த பொன்னுக்கு ஈட
உன் பெண்ணை எனக்கு...சீதனமாக்கு...அது போது

விஷ்ணு : கண்ணா...! உனக்கு இன்னுமா என்னுட
விளையாட்டு! விரஜை தனக்கு வாரிசு இல்லை
என்று விசனப்படுகிறாள்...நீயோ பெண் கே
வருகிறேன்...என்று கேலி செய்கிறாய்...தொட்டிலு
வழி இல்லாத எனது கிரஹத்தில் கெட்டி மே
கொட்டும் என்று ஆருடம் சொல்கிறாய்! அன
சயனா...! எதற்கப்பா என்னிடம் இப்படி விளைய
கிறாய்?

அசரீரீ : உங்கள் குறை தீரும்...உங்களுக்கு சீக்கிரம் புத்
பாக்கியம் உண்டாகும்...!

— திரை —



## காட்சி : 20

இடம் : முகுந்தப் பட்டர் இல்லம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்—விரஜை— தொட்டில் கொண்டு வருபவனாக பெருமான்—

*[பெரியாழ்வார் வீட்டில் பூஜை—விரஜை அடுத்திருந்து உதவுதல்—பெரியாழ்வார், ஏட்டில் எழுத்தாணி கொண்டு எழுதல்--கண்ணன் பருவங்களைப் பாடுதல்]*

*[கண்ணன் அவதாரப் பாடல்]*

*— நிழற்காட்சி —*

*[இடிமழை மின்னல்—வசுதேவராக பெரியாழ்வார் —தேவகியாக விரஜை—கண்ணன் பிறத்தல்—குழந்தையை சுமந்து யமுனாநதி கடந்து வருதல்—யசோதைக்கு குழந்தையைக் காண்பித்தல்]*

*[கண்ணன் அழகினைப் பாடுகிறார் பெரியாழ்வார்]*

### பாடல்

முத்தும் மணியும் வைரமும் நன்பொன்னும்
தத்திப் பதித்து தலைபெய்தாற்போல் எங்கும்
பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள்
ஒத்திட்டு இருந்தவா காணீரே!!

*[கண்ணனை, யசோதை (விரஜை), நந்தகோபன் (பெரியாழ்வார்) அணைத்து மகிழ்தல் — பெரியாழ்வார், கண்ணன் யானை விளையாட்டு விளையாடுதல்]*

பாடல்

வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலை உண்ட
அஞ்சன வண்ணனை ஆய்ச்சி தாலாட்டிய
செஞ்சொல் மறையவர் சேர் புதுவைப் பட்டன் சொல்
எஞ்சாமை வல்லவர்க்கு இல்லை இடர்மா!!

[கண்ணன் விளையாடுதல்—பூதனையை அழகான பெண்ணாக வர்ணித்தல் — பால் கொடுத்தல்— மயங்கி விழுதல் — பெரியாழ்வார், விரஜை திகைத்தல்— கண்ணனை அணைத்தல்— திருஷ்டி சுத்துதல்]

பாடல்

காயமலர் நிறவா! கருமுகில் போல் உருவா
கானகமா மடுவிற் காளியின் உச்சியிலே
தூயநடம் பயிலும் சுந்தரா! என் சிறுவா
துங்க மதக்கரியான் காப்பு பறித்தவனே!!

[கண்ணன் காளிங்கன் மீது நடனம் புரிதல்— யசோதா ஓடி வருதல்—கண்ணா! கண்ணா! என்று நீரில் இறங்குதல்— கண்ணனை உட்கார வைத்து, பூவால் அர்ச்சித்தல்]

பாடல்

செண்பக மல்லிகையோடு
செங்கழுநீர் இருவாட்சி
எண் பகர் பூவும் கொணர்ந்தேன்
இன்று இவை சூட்டவா என்று
மண்டகர் கொண்டானை ஆய்ச்சி
மகிழ்ந்து உரைசெய்த இம்மாலை
பண்பகர் வில்லிபுத்தூர்க்கோன்
பட்டர்பிரான் சொன்னடத்தே

[கண்ணனை, அக்ரூரர் அழைத்து போதல் — கம்சன் அரண்மனை—மதயானை வருதல்]

பெரியாழ்வார் : கண்ணா! மதயானை... போகாதே! உன்னைக் கொல்ல கம்சன் செய்த நாசவேலை... கண்ணா! கண்ணா!

[உள்ளிருந்து விரஜை ஓடி வருகிறாள்]

விரஜை : சுவாமி! கண்ணா...கண்ணா என்று கத்தினீர்களே! கண்ணனைக் கண்டீர்களா...?

பெரியா : விரஜை! கண்ணனின் திருமேனி அழகைக் கண்டேன்...அவன் அவதார வைபவம் கண்டேன்... தாலாட்டுப் பருவம், அம்புலிப் பருவம்... சப்பாணி பருவம் என்று அவனது அழகு தவழும் சின்னஞ் சிறு பருவம் கண்டேன்...அது மட்டுமா...? கோகுலத்தில் உன்னை யசோதையாகக் கண்டேன்...நான் நந்த கோபனாக இருந்தேன்...கண்ணனின் கோகுலத்து சிங்கார விளையாட்டுகளை—வீர சாகஸங்களை கண்டேன்—மகிழ்ந்தேன்... அவனைக் கம்சன் கொல்ல யானையை அனுப்புவதைப் பார்த்தேன்...நான்பயந்தே போனேன்!

விரஜை : சுவாமி பயம் என்பது தங்களுக்கு வரலாமா...?

பெரியா : இப்பொழுதுதானே கிருஹஸ்தாசிரமத்தின் முதற் படியில் இருக்கிறேன்...இனிமேல் தான் குழந்தை குட்டி என்று சம்சார சாகரத்தில் மூழ்கப் போகிறேன்... அப்புறம் பயப்படுவதற்கு நேரம் ஏது...?

விரஜை : குழந்தை... குட்டி... அப்படியொரு பாக்கியம் இந்த விரஜைக்கு உண்டா...? சுவாமி!

பெரியா : விரஜை! ஏன் வருத்தப்படுகிறாய்...? வடபத்ர சாயி நமக்கு அருள் செய்யவில்லையா...? கண்டிப்பாக குழந்தை பாக்கியம் நமக்குக் கிட்டும்.

விரஜை : சற்று முன்... கண்ணனைப் பார்த்தீர்களே கண்ணனைக் கேட்பது தானே...!

பெரியாழ் : ஆனாலும்...உனக்கு அவசரம்!

[வெளிப்பக்கமாக பெருமான் தொட்டிலுடன் வருதல்]

பெருமான் : ஐயா! இதுதானே பெரியாழ்வார் இல்லம்!

பெரியாழ் : ஆமாம்! அடியேன் தான் பெரியாழ்வார்...!

பெருமான் : இந்த தொட்டிலை உம்மிடம் சேர்ப்பிக்குமாறு எங்களது பெருமானின் கட்டளை!

பெரியா : எனச்கு தொட்டிலா...ஒரு வேளை நீர் வீடு மாறி வந்துட்டீரா...? ஏனென்றால் இங்கு தொட்டி லுக்கு வேலை இல்லை.

விரஜை : இது குழந்தை இல்லாத வீடு...

பெருமான் : ஏன் இப்படி சலித்துக் கொள்கிறீர்கள்...? நீங்கள் உங்க அப்பா அம்மாவுக்கு குழந்தைகள்...உங்க ளோட அப்பா அம்மா அவுங்க...அப்பா...அம்மாவுக்கு குழந்தைகள்...நாம் எல்லோரும் ஆண்டவனின் குழந்தைகள் தான்!

பெரியாழ் : அடே அப்பா! உன் பேச்சில் தான் என்னே தத்துவம்...சரி! இந்த தொட்டிலை கொடுத்த புண்ணியவான் யாரென்று சொன்னாய்...?

பெருமான் : அவன் வெண்ணை வியாபாரி... புடவை வியாபாரி... இப்பொழுது தொட்டிலும் விற்கிறான்... உங்கள் புலமையைப் பாராட்டி இந்த தொட்டிலை அனுப்பி வைத்திருக்கிறார் என்று எண்ணுகிறேன்... பெற்றுக் கொள்ளுங்கள்... நான் வருகிறேன்...

[விரஜை தொட்டிலைப் பார்த்தல்— தொட்டில் மீது Super impose-விரஜை தொட்டிலில் குழந்தை ஆட்டுவது போல் பாவனை]

—திரை—

## காட்சி : 21

இடம் : அரசியின் அந்தப்புரம்

கதாபாத்திரங்கள் : வல்லபதேவன்—அரசி

[வல்லபதேவன் அமர்ந்திருத்தல்— ராணி அருகே இருத்தல்— நட்னம் நடக்கிறது—ராணி மணி அடித்தல்—நடனம் ஆடிய பெண் போதல்]

அரசி : சுவாமி...!ஏன் இப்படி சதா காலமும் விசனமாகக் காணப்படுகிறீர்கள்...?

வல்லப : அரசமாதேவி...! இந்த வல்லபதேவன் இத்தனை நாளும் வல்வினையால் துன்பத்துள் மூழ்கிக் கிடந்தான் ...இப்பொழுது இவன் அகக்கண்கள் திறந்து விட்டன... பேரின்பத்திற்கு வழி காண்கிறேன்...ஆடலும்... பாடலும் என்னை ஆட்கொள்ளாது...அந்த காளிங்க நடனம் ஆடியவன் பாதம்தான் என்னை பரவசப் படுத்தும்...! அணி, தேர், புரவி, ஆட்பெரும் படை வேண்டாம்... அந்த அனந்தனின் ஆயிரம் கோடி நாமம் போதும்...! பொன்னும்...பொருளும்... நாடும்... நகரமும் வேண்டாம்...அந்த நாராயணன் திருப்பாத கமலங்கள் மட்டும் போதும்...

அரண்மனை... ஆடம்பரம் ... அழகிகள்... போர்... மலர் மஞ்சம்...இவை எல்லாம் என் கண்களை விட்டு வெகுதூரம் எங்கேயோ போய்விட்டது...என் கண்களுக்குத் தெரிவதெல்லாம் சுதர்சனம்...பாஞ்சசந்நியம் கதை—கட்கம்—சாரங்கம்—தாமரை—கருநீலம் இவைகள் தான்...தேவீ! பாண்டிய நாட்டு மன்னன் என்று போற்றுவதை விட...பெரியாழ்வார் சீடன்...என்று உலகம் கொண்டாட வேண்டும் என்று வேண்டுகிறேன்

...எண்ணற்ற சிற்றரசர்கள் எனக்கு தலை வணங்குகிறார்கள்... ஆனால்... நானோ... விஷ்ணுசித்தனுக்குத் தலைவணங்குவதையே பெரிதாக எண்ணுகிறேன்... சிற்றரசர்கள் எனக்குக் கப்பம் கட்ட வேண்டாம்... சித்தர்கள் என்னை அநுக்கிரஹித்தால் போதும்.

அரசி : அரசே! உங்கள் எண்ணத்தில் தவறில்லை...எடுத்த முடிவில் தான் தவறு என்கிறேன்.

வல்லப : என்ன சொல்கிறாய்...? எப்படி சொல்கிறாய்... தேவீ!

அரசி : மக்கள் சேவையே...மகேசன் சேவை! விஷ்ணு சித்தருக்கு சீடராக இருங்கள்...அதே சமயம் இந்த நாட்டு மக்களுக்கும்... மன்னராகவும் இருங்கள்... கர்மாவை செய்யுங்கள்...பலனைச் அவனிடம் விட்டு விடுங்கள்...ஆயிரம் கோடி அக்ரோணி சேனைகள் மத்தியில் பார்த்தனுக்கு புருஷோத்தமன் செய்த போதனை ...நமக்கும் சேர்த்துத்தான்!

வல்லப : தேவீ...!

அரசி : அரசர்க்கு அரசாங்க விஷயங்களில் அடுத்திருந்து... ஆலோசனை கூறுவது அமைச்சன்! அந்தரங்க வாழ்க்கையில் அவ்வப்போது ஆலோசனை கூறுபவன்... அந்தப்புரத்து மகாராணி! பாண்டியநாட்டு மன்னவா! நல்ல இல்லறமே ஒரு துறவறம்...!

வல்லப : தேவி! பெரியாழ்வார் என் அகக்கண்களைத் திறந்தார். நீயோ திறந்த அந்த கண்களுக்கு ஒளி கூட்டினாய்!

— திரை —

## காட்சி : 22

இடம் : திருப்பாற்கடல்

கதாபாத்திரங்கள் : இந்திரன்—நாரதர்—தேவர்கள்

[அமரேந்திரன், தேவர்கள் புடைசூழ திருப்பாற் கடலுக்கு வருகின்றான் — கடலில் பாலுக்குப் பதிலாக—புஷ்பங்களால் பட்டு விரித்தாற் போல் காணப்படுகிறது— இந்திரன் திகைப்படைகிறான்]

இந்திரன் : தேவர்களே! இதென்ன அதிசயம்? திருப்பாற் கடலில் பாலைக் காணோம்... புஷ்பங்கள் அல்லவா நிறைந்திருக்கிறது...எதனால் இப்படி...?

(நாரதர் வருகிறார்)

நாரதர் : நாராயணா! நாராயணா!

இந்திரன் : பிரம்மபுத்திரரே! அமரேந்திரன் அநேக கோடி வந்தனங்களைச் சமர்ப்பிக்கின்றேன்...

நாரதர் : திருப்பாற்கடலைப் பார்த்து மலைத்து நிற்கிறீர்களே!

இந்திரன் : நாரதரிஷியே! புஷ்பங்கள் பட்டுப்பாய் விரித் தாற் போல் காணப்படுகிறதே... எதனால்...?

நாரதர் : இது தெரியாதா உங்களுக்கு... பூலோகத்தில்... பரந்தாமனின் பக்தன் ஒருவன்... நம் பகவானைப் பூஜிக்கின்றான்.

இந்திரன் : தேவலோகத்தில்... கற்பகமலர்களால் நான்... நாராயணனையும் ஸ்ரீ தேவியையும் பூஜிக்கின்றேனே... என்னை விட ஒரு உயர்ந்த பக்தன்...பூலோகத்திலா...?

(நாரதர் புன்னகை புரிகிறார்)

நாரதர் : நாராயணா... நாராயணா...

இந்திரன் : பிரம்ம புத்திரரே! புன்னகை புரிகிறீர்... நாராயணனை அழைக்கிறீர்... நான் பரந்தாமனை பூஜிக்கிறேன் என்று சொன்னது உங்களுக்கு அலக்ஷிய மாகத் தெரிகிறதா...?

நாரதர் : அமரேந்திரன் பேச்சில் அலக்ஷியமா...? நீ பரந் தாமனை பூஜிக்கிறேன் என்று சொன்னதை கேட்ட பொழுது...எனக்கு ஒரு சம்பவம் நினைவிற்கு வந்தது... ஒரு முறை, அர்ஜுனன் என்னுடன் கைலாய மலைக்கு வந்தான்...அங்கே ஒரு பிரம்மாண்டமான பூ மாலை யைக் கண்டான்... மலையைக் கண்ட விஜயன்... மலைத்துப் போனான்... இதென்ன சுவாமி, ''பூமலை தெரிகிறது'' என்று கேட்டான்...அதற்கு நான் பூலோகத்தில் ஒரு பக்தன் பரமேசுவரனைப் புஷ்பங் களால் பூஜிக்கின்றான் என்றேன்... அதற்கு பார்த்தன் ...உன்னைப் போலவே, ''சிவ பூஜையில் என்னை விட உயர்ந்தவன் பூலோகத்தில் இருக்கிறானா?'' என்று சற்று மமதையோடு கேட்டான்.

அதற்கு நான், ''பார்த்தா! அவன் கோடி கோடி புஷ்பங்களால் கைலைமலை வாசனை...மானசீகமாக பூஜிக்கின்றான்... அவன் உன்னைப் போல்... நான் பூஜிக்கிறேன், நான் பூஜிக்கின்றேன் என்று மார்தட்டிக் கொள்வதில்லை...அவன் மானசீகமாக மகேசனை அர்ச் சிக்கின்ற பூக்கள்தான்... இந்த கயிலைமலையில் ஒரு பூமலையாகப் புதுப்பொலிவுடன் காண்கிறது என்றேன் ...யார் அந்த பக்தன்? என்று அர்ஜுனன் மீண்டும் அலக்ஷியமாக கேட்டான்...உன் சகோதரன் பீமன் தான் என்றேன்... அந்த சம்பவம் நினைவிற்கு வந்தது... புன்முறுவல் பூத்தேன்... என்ன இருந்தாலும் அர்ஜுனன் உன் பிள்ளைதானே...

இந்தி : சுற்றி வளைத்து...என்னை குற்றம் சாட்டுகிறீர்... அர்ஜுனன் என் குமாரன் என்ற ஏளனம் வேறே...அது போகட்டும் இந்த பாற்கடல் பக்தன் யாரேர...?

நாரதர் : உன் குமாரனின் கதையை சொன்னதற்கே...என் மீது உனக்கு சற்று வெறுப்பு...இனிமேல்...உன்னைப் பற்றி...ஏதாவது சொல்லி... நான் வேறு வம்பில் மாட்டிக் கொள்ள வேண்டுமா...? தேவேந்திரா! உனது ஐயத்தை அந்த நாராயணனிடமே தீர்த்துக் கொள்... என்னை விடு...நாராயணா...நாராயணா...

இந்தி : அமரர்களே வாருங்கள்...நாம் அனந்த பத்ம நாபனை தரிசித்து வருவோம்...ஓம் நமோ நாராயணா!

(''ஓம் நமோ நாராயணா!'' என்ற கோஷம் முழங்குகிறது)

— திரை —



## காட்சி : 23

இடம் : பரமபதம்

கதாபாத்திரங்கள் : இந்திரன் — லக்ஷ்மி — மகாவிஷ்ணு — தேவேந்திரன் — தேவர்கள்

[ஸ்ரீமந்நாராயணன் நாமத்தை ஜபித்துக்கொண்டே தேவர்கள் வருதல்]

[ஸ்ரீதேவி சமேதராய் நாராயணன் அனந்தன் திருப்பள்ளிகொண்டிருத்தல்]

லஷ்மி : பரந்தாமா! தேவர்கள் அசுரர்களுக்கு அஞ்சி வருகிறார்களா...? இல்லை... ஆனந்தத்தால் வருகிறார் களா...?

விஷ்ணு : இரண்டும் இல்லை... எல்லாம் நம் பக்தன் பெரியாழ்வாரின் விளையாட்டு...

லக்ஷ்மி : இத்தனை நாளும் பரந்தாமன் விளையாடினார்... இப்பொழுது பக்தன் விளையாட ஆரம்பித்து விட்டானா...?

இந்தி : நாராயணா! மதுசூதனா! மாதவா! கேசவா! அமரேந்திரனின் அனந்தகோடி பிரணாமங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

விஷ்ணு : என்ன தேவேந்திரா...?

தேவே : அறியாதது போல் கேட்கிறீர்களே! அனந்த சயனா! சில நாட்களாக திருப்பாற்கடல்... நந்தவனம் போல் மலர்காடாக இருக்கிறதே...

விஷ்ணு : தேவேந்திரா...! அதற்குக் காரணம் எமது பக்தன்! ஸ்ரீவில்லிபுத்தூர் வாழும் விஷ்ணுசித்தன்...

யாம் அவனைப் பெரியாழ்வார் என்போம்... அவன் நம்மைத் தினமும் ஒரு நந்தவனத்தாலேயே அர்ச்சிக்கின்றான்... அவனது திருத்துழாய் கைங்கரியத்தின் பிரதி பலிப்புதான் பாற்கடலை புஷ்பகடலாக மாற்றியது.

தேவே : பக்திக்கு ஒரு பெரியாழ்வார்... என்று புவனம் அத் திருத்தொண்டனை புகழ்ந்து போற்றட்டும்!

விஷ்ணு : தேவேந்திரா! நீ தேவர்களுக்குத் தலைவன்! அவன் தொண்டர்களுக்குத் தலைவன்!

— திரை —



## காட்சி : 24

இடம் : நந்தவனம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார் — விரஜை — பணிப்பெண் — ருக்குமணி — நாரதர் — கிருஷ்ணர் பாமா

[விஷ்ணுசித்தர் — விரசை — நந்தவனத்தில் பூ பறித்தல்]

விரஜை : சுவாமி! இந்த செடியைப் பாருங்கள்! ஒரு வாரத்துக்குள் பூத்து... மலர்ந்து... காயாகி... கனிந்து விட்டது...

பெரியா : அதுதான் கண்ணனின் கருணை...

விரஜை : அவன் நம் மீது கருணை காட்டவில்லையே...!

பெரியா : அவன் கருணை இருப்பதால் தான் நாம் இருவரும் ஒன்று சேர்ந்திருக்கிறோம்... அன்று கண்ணன் கம்சனுக்கு பூத்தொடுக்கும் பெண்ணிடமிருந்து மாலை பெற்று மகிழ்ந்தவன் அல்லவா...? மாலைப் பெற்ற மகிழ்ச்சியால் அந்த கூன் போட்ட பூக்காரியின் கூனை நிமிர்த்தியவன் அல்லவா... நம் கண்ணன்!

விரஜை : எனக்கு மலடி என்ற பெயர் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

பெரியா : விரஜை! தாழிவெண்ணெய் தடங்கை ஆர... விழுங்கிய பேழை வயிற்று எம்பிரான் என் குறை தீர்ப்பான்.

[துளசி பறித்துக் கொண்டே விஷ்ணுசித்தர் பாடுதல்]

பாடல்

பிருந்தா ப்ருந்தாநீ விஸ்வ பூஜிதா விஸ்வ பாவநீ
புஷ்பஸாரா நந்தநீச துளஸீ கிருஷ்ண ஜீவிதா!!

[துளசியைப் பறித்துக் கண்களில் ஒற்றிக் கொள்கிறார். இரண்டினை குடுமியில் சூட்டிக்கொண்டு இரண்டினை வாயில் போட்டுக் கொள்கிறார்)

பாடல்

துளஸீ அம்ருத ஸம்பூதே ஸதாச்ச கேசவ பிரியா
கேசவார்த்தம்லு நாமி த்வாம் வரதா பலசோபனே!!

[துளஸியைப் பறித்து குடலையில் நிரப்புகிறார்]

பெரியா : ஆகா... இந்த துளசியின் மகிமையைத்தான் என்னென்பேன்...? பதினான்கு லோகங்களும் உன்னை பூஜிக்கிறது... இந்த லோகத்தை பாவனம் ஆக்குபவள் அல்லவா நீ...! புஷ்பங்களுள் ஸாரமானவள் நீ...! ஆனந்தமானவள்...நீ! ஐசுவரியமானவள் நீ... ஸ்ரீ கிருஷ்ணனை உனதாக்கிக் கொண்ட சௌந்தரிய தேவதை அல்லவா நீ...பிருந்தாவனமும்...நந்தகுமாரனும் பிரிக்க முடியாத பிரேமிகள் அல்லவா...! ஸ்ரீ கிருஷ்ணா! இந்த துளசியோடு மகிமையை நீயே லோகத்துக்கு... சொல்லியிருக்கிறாயே! பாமாவிற்கு ஞானத்தைப் புகட்டியது இந்த துளசிதானே .. பரிமளிக்கும் சுக கொழுந்தே... வனமாலை எனும் மருவே! திருவே! மங்கல நாயகியே!

[புகை மண்டலம் போல் தெரிகிறது — பெரியாழ்வார்—விரசை மட்டும் தனி spot—மற்றொரு பகுதியில் ருக்குமணி துளசிமாடத்தைச் சுற்றி வந்து நமஸ்கரித்தல்—பணிப்பெண் ஒருத்தி ஓடி வருதல்]

பணிப்பெண் : ருக்மணி தேவீ! தங்களை சத்தியபாமா தேவியார் கையோடு அழைத்து வருமாறு கட்டளை இட்டுள் ளார்கள்...

ருக்குமணி : என்னையா...! பாமாவா! எதற்கு...?

பணிப்பெண் : அது ஒரு பெரிய கதை...

ருக்குமணி : கதையா... சொல்லேன்... கேட்போம்!

பணிப்பெண் : கதை சொல்கிற நேரமா இது...! பாமா தேவியார் தணலிடை விழுந்தாற்போல் தவிக் கிறார்கள்.

ருக்குமணி : தவிக்கட்டுமே... நீ விளக்கமாகச் சொல்ல வேண்டாம்... சுருக்கமாகச் சொன்னால் போதும்.

பணிப்பெண் : தேவீ! நாரதர் பாமாதேவியாரை... எதற் காகவோ... ஏதோ ஒரு யாகம் செய்யுமாறு கூறியிருக் கின்றார்... இவர்களும் யாகத்தை செய்து முடித் தார்கள்... யாகத்தை நடத்தி வைத்த முனிவர்க்கு சம்பாவனை கொடுக்க வேண்டும் அல்லவா? அங்குதான் குழப்பம் ஏற்பட்டது... அந்த முனிவர் பரமாத்மாவின் எடைக்கு பொன் வேண்டும் என்று கேட்டார்... தேவி யாரும் சரி! என்றார்கள்... பரந்தாமனும் தராசு தட்டில் எழுந்தருளினார்... தேவியார்... நகைகளை மலைப்போல் தட்டில் குவித்தும் தராசு சமமாக வில்லை... பரந்தாமன் எழுந்தருளியிருந்த தட்டும் தாழ்ந்தே இருந்தது... பாமாவினால் மேற்கொண்டு தராசில் வைப்பதற்கு நிதி இல்லை... அதற்கு அந்த முனிவர்... ஒன்று... பரந்தாமனுக்கு ஈடாக பொன்னைக் கொடு... இல்லையேல்... நான் பரந்தா மனை அடிமைப்படுத்தி கொண்டு போய் விடுகிறேன் என்கிறார்...

ருக்குமணி : அதற்கு பரந்தாமன் என்ன சொல்கிறார்...?

பணிப்பெண் : அவர் என்ன சொல்லுவார்... நாரதரும்... ஐயனும் பரிதாபமாக நிற்கும் பாமாவை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

ருக்குமணி : பாவம்...பாமா! நீ போ... நான் இப்பொழுதே வருகிறேன்.

[மேடையில் இருள்—மீண்டும் ஒளி]

● ஒரு தனி spot ●

[விஷ்ணுசித்தர்—விரசை உரையாடல்]

விரசை : சுவாமி! நாரத மகரிஷி எதற்காக பாமாவை இப்படி சோதித்தார்.

பெரியா : என்ன நடக்கிறது என்று பாரேன்...

[மேடையில் ஒருபுறம் ஒளி]

[பாமாவின் அரண்மனை — ஒரு தட்டில் ஸ்ரீ கிருஷ்ணன் அமர்ந்திருக்க — மற்றொரு தட்டில் பொன்னும்—மணியும் ஆபரணமும் குவிந்திருக் கின்றன—நாரதர் நின்று வேடிக்கைப் பார்க்க— கிருஷ்ணர் ஒரு தட்டில் அமர்ந்திருக்க — பாமா கவலையோடு காணப்படுகிறாள் — ருக்குமணி வேகமாக வருகிறாள்]

ருக்குமணி : நாரதரே! நீர் செய்வது உமக்கே நன்றாக இருக்கிறதா...? சுவாமி! பாவம் பாமா...! அநவிரத மும் உங்களை ஆராதிக்கும் பக்தை பாமாவை இப்படியா சோதிப்பது...? பாமா! தட்டில் இருக்கும் இந்த நகைகளை எல்லாம் எடுத்துவிடு!

[பாமா நகைகளை எடுத்தல் — ருக்குமணி பாடுகிறாள்]

நமஸ்துளசி கல்யாணி நமோ விஷ்ணுப் பிரியேசுபே
நமோ மோக்ஷ ப்ரதே நமஸ் ஸம்பத் பிரதாயினே
துளசிபாதுமாம் நித்யம் ஸர்வாபத் பத்ப்யே பிஸர்யதா
தீர்த்தி தாபி ஸம்ருதா வாபி பவித்ரயதி மானவம்

*நமாமி சிரஸா தேவீம் துளஸீம் விலதைத்ன*
*யாம் த்ருஷ்ட்வா பாபிதோ மர்த்தியா முச்யன்னதே*
*ஸர்வபிஷாத்!!*

*[ருக்குமணி மடியில் இருந்து ஒரு துளசியை எடுத்து தட்டில் வைக்கிறாள் — தட்டு சமமாகிறது]*

நாரதமகரிஷி! தாங்கள் இந்த துளசியை எடுத்துக் கொள்ளும்... இதுதான் உமக்கு ஆசாரிய சம்பாவனை!

**நாரதர் :** பாமா! என்னை மன்னித்துவிடு... உன்னை வருத்தப்பட வைக்கவேண்டும் என்றோ... அவமான படுத்த வேண்டுமென்றோ... இந்த பரீக்ஷையை நடத்த வில்லை... துளசியின் மகிமையை உலகம் புரிந்து கொள்ளவேண்டும் என்பதற்காகத் தான்... உன்னை கருவியாக வைத்து இந்த நாடகத்தை நடத்தினேன்... இதற்கெல்லாம் சூத்ரதாரி... இந்த சக்ரதாரிதான்! நான் உன்னைப்போல்... வெறும் கருவிதான்... நாராயணா... நாராயணா...

☐ புகை மண்டலம் குறைகிறது — பெரியாழ்வார் சிந்தனை — மேடையில் ஒளி ☐

*[பெரியாழ்வார் — விரசை உரையாடல்]*

**விரசை :** சுவாமி! துளசிக்கு இத்தனை மகிமை எதனால் ஏற்பட்டது?

**பெரியா :** துளசி, நாராயணனை நாயகனாக அடைய வேண்டும் என்றும் ஆயிரம், ஆயிரம் தேவ ஆண்டுகள் தவம் இருந்தவள். ஒற்றைக்காலில் மழையில் நனைந்தும், வெய்யிலில் காய்ந்தும், பஞ்சாக்னி மத்தியில் தவமிருந்த நாயகியவள்! துளசி தொழுதற்குரிய தெய்வ மகள்! துளசி... ஆனந்த மயமானவள். ஸ்ரீகிருஷ்ணனையே தனக்கு ஜீவனமாகக் கொண்டவள். மகாவிஷ்ணுவின் அருளால் துளசி விருக்ஷமாகி, செடி யாகி அவருக்கு சுகத்தை அளிக்கிறாள்.

துளசி செடியின் அடியில் ஸ்ரீமந்நாராயணனும் தேவர்களும் வாசம் செய்கின்றனர். துளசி செடிக்கு வார்க்கின்ற நீர், அபிஷேக நீராக புண்ணியம் பெறுகிறது. துளசி தீர்த்தத்தால் எம்பெருமானுக்குத் திருமஞ்சனம் செய்வதால் ஆயிரமாயிரம் பாற்குடங்களால் அபிஷேகம் செய்த பலனை பெறுகின்றோம். துளசி நீரை பருகுபவர்க்கு நோய் நீங்கும். பரமனின் திருவடி சேவை சித்திக்கும். துளசி மணிமாலை அணிவோர்க்கும், துளசி தீர்த்தம் பருகுவோர்க்கும் லட்சம் அசுவமேத யாகம் செய்த புண்ணியம் கிட்டுகிறது. துளசியில் கரும் துளசி திருமாலுக்கும் திருமகளுக்கும் உகந்தது. இதனை ஸ்ரீராமர் துளசி, கிருஷ்ண துளசி என்றும் கூறுவர்.

விரசை : பிராணநாதா... துளசியின் மகிமையைப்பற்றி பேசிக்கொண்டே இருந்ததால் பொழுது போனதே தெரிவியவில்லை! நன்றாக இருட்டிவிட்டது பாருங்கள்.

பெரியா : அப்படி என்றால் என் வடபத்ரசாயிக்கு— காலையிலும் மாலை இல்லை... மாலையிலும் மாலை இல்லை... என் ஐயனுக்கு எப்பேர்ப்பட்ட அபசாரத்தைச் செய்துவிட்டேன் என் திருத்துழாய்க் கைங்கரியத்துக்கு பங்கம் வந்துவிட்டதே... கண்ணா...!

[விஷ்ணுசித்தர் ஓடுகிறார், விரசை பின்தொடர்கிறாள்]

— திரை —



## காட்சி : 25

இடம் : திருக்கோயில் சந்நதி

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்—விரசை—அர்ச்சகர்

[பெரியாழ்வார், கையில் மாலை குடலையுடன் வேகமாக ஆலயம் செல்கிறார்—சுவாமி மீது நிறைய மாலைகள் இருப்பது கண்டு அதிசயித்தல்]

அர்ச்சகர் : ஏன் சுவாமி...! இன்றைக்கு ராத்திரி திருப்பள்ளி சேவைக்காக புஷ்பம்கொண்டு வந்திருக்கேளா...?

பெரியாழ் : அப்படீன்னா... இருட்டற வரைக்கும்... என்னை மறந்து நந்தவனத்தில் இருந்தேன்... அபச்சாரம்... காலையிலும்... மாலையிலும் பூமாலை கொண்டுவராத பாவியாகிவிட்டேன்...

அர்ச்சகர் : ஏன் சுவாமி... நீர்தானே காலை... மத்தியானம்... மாலை... மூன்று வேளையும் மாலை கொண்டு வந்து கொடுத்துவிட்டு போனீர்... அதற்குள்ளே மறந்துட்டேளா...

பெரியாழ்வார் : நான் மாலையோடு வந்தேனா... இது என்ன வேடிக்கை... நாராயணா!!

விரசை : சுவாமி! நானும் இவரும் பொழுது போனது கூட தெரியாமல் நந்தவனத்தில் இருந்துவிட்டோம்... என் சுவாமி... துளசியின் மகிமையைப்பற்றிச் சொல்லிக் கொண்டிருந்ததனால்... அதில் நேரம் போனது தெரியவில்லை!

[பெரியாழ்வார் நமஸ்கரித்தல்]

பெரியாழ்வார் : கோவிந்தா...! கார்மலி மேனி நிறத்து கண்ணபிரானே! செஞ்சேவடியால் மூவடி அளந்த

முகுந்தா... இன்று உனது திருவடி இந்த பக்தனுக்காக திருக்கோவிலை வலம் வந்ததா...! கோபாலா! உன் அடிமையிடம் எதற்காக இந்த களியாட்டம்... அன்று தந்தை சொல்லை காக்க கல்லும்... முள்ளும் நடந்த ஸ்ரீராமா... இன்று உன் பக்தனுக்காக கால் கடுக்க வந்தாயோ...?

அர்ச்சகர் : அப்படி என்றால் அடியேன் அந்த பரந்தாமனுக்கு தீர்த்தமும், துளசியும் கொடுத்தேனா... அடியேன் கொடுத்து வைத்தவன்... உம்மால் இந்த ஏழைக்கு அவன் தரிசனம் கிடைத்தது... தினமும் எத்தனையோ பக்தர்கள் எங்கிட்டே வந்து... துளசியும் தீர்த்தமும் வாங்கிட்டு போறா... இன்னிக்கு அந்த பரந்தமானே... நேரில் வந்து எங்கிட்டே பிரசாதம் வாங்கிண்டு போயிருக்கிறாரே...! வடபத்ர சாயி உன் கருணையே கருணை!

பெரியாழ்வார் : சுவாமி! நீர் எப்பேர்ப்பட்ட பாக்கிய சாலி! நீரல்லவா போற்றி தொழுதற்குரியவர். தேவரீர் அநுக்கிரஹம் செய்தால்... அந்த ஆண்டவனே அருள் செய்தாற்போல்!

[பெரியாழ்வார், விரசை, அர்ச்சகரை நமஸ்கரித்தல்]

அர்ச்சகர் : அபச்சாரம் அபச்சாரம்...! சுவாமி!

— திரை —



## காட்சி : 26

இடம் : நந்தவனம்

கதாபாத்திரங்கள் : மகாவிஷ்ணு, பூமிதேவி — பெரியாழ்வார்

[தனி Spot—பெரியாழ்வார் பூ தொடுத்துக் கொண்டிருத்தல்—மறுபுறம் அடுத்த Spot மகாவிஷ்ணு, பூமிதேவி உரையாடல்]

மகாவிஷ்ணு : பூமிதேவி! இன்று ஆடிப்பூர நந்நாள் வளர்பிறை சதுர்த்தி செவ்வாய்க்கிழமை... பூர நக்ஷத்திரம். ஆண்டாள் அவதரித்தாள்...இந்த மண்ணுக்கு பெருமை! அந்த பெண்ணுக்கு பெருமை! மாதவனுக்கு பெருமை! மாந்தற் கெல்லாம் பெருமை! என் பக்தர் பெரியாழ்வார் எனக்குப் பூமாலை தொடுக்கிறான்...நீ அவனுக்கு மகளாகப் பிறந்து...எனக்குப் பாமாலை தொடுப்பாய்! வைகுண்டத்திலுள்ள சுகபோகங்களை எல்லாம் தள்ளிவிட்டு பூவுலகில் பெண்ணாகப் பிறப்பாய்! உன்னுடைய மங்களகுணங்களால் எல்லோரையும் கடாக்ஷிப்பதால் ஆண்டாள் என்று அழைக்கப் படுவாய். நீ மலர்ந்தருளும் பாமாலைகள் மண்ணுலகத்தாருக்கு எல்லா மேன்மைகளும் உண்டாக்கும். மங்களாநுபவந்து!

[பெருமான் மறைகிறார்]

— பாடல்—

கர்க்கடே பூர்வபல்குந்யாம் துளஸீ காநநோத்பவாம்
பாண்ட்யே விஸ்வம்பராம் கோதாம் வந்தே
ஸ்ரீரங்கநாயகீம்!!

குரல் : பாண்டிநாட்டிலே... ஸ்ரீவில்லிபுதூரிலே, துளஸி தோட்டத்திலே...பூமி பிராட்டியாரின் அவதாரமாய்— திரு ஆடிப்பூர நக்ஷத்திரத்தில் அவதரித்த, ஸ்ரீரங்க நாதனின் தேவியான கோதைக்குகோடி வணக்கங்கள்...

[குழந்தையின் அழுகுரல்]

● துளசி செடி அருகே பேரொளி ●

குரல் : பரமபதத்திற்கு அதிபதியான பெருமாளின் பிராட்டியார் அவதரித்த நந்நாள். திவ்ய க்ஷேத்ரங்களுக்கெல்லாம் நடுநாயகமாக ஸ்ரீவில்லிபுதூர் மகிமை பெற்று விளங்கச் செய்வதற்கு ஆண்டாள் அவதரித்தாள். ஸ்ரீமந்நாராயணனின் நாமத்தை, நாளெல்லாம் புகழ் பாட, நானிலத்தில் நப்பினை அவதரித்தாள். பிரம்ம தேஜோ சொரூபமான பூமி பிராட்டியார், புவனமெல்லாம் பொங்கி பூரிக்க, பெரியாழ்வாரின் பூமலர்ச் சோலையில் அவதரித்தாள். அறிவாற்றலும் ஞானமும், அழகும், தீரமும், இளமையும் பூண்டு, எல்லோராலும் பூஜிக்கத் தக்க திருமகளாய், திருக்கோதை திரு அவதாரம் செய்தாள். யக்ஞவராஹ ரூபியான புருஷோத்தமனின் புண்ணியத்துக்குப் புகலிடமான பூமி பிராட்டியார் பூவுலகில் அவதரித்தாள்.

முப்பத்து முக்கோடி தேவர்களும் முனிவர்களும் கந்தர்வர்களும், அப்சர மகளிரும் பூதகணத்தினர்களும் உனக்கு மங்கள ஆர்த்தி எடுத்து மகிழ்கின்றனர்; கற்பகத் தருக்களால் அர்ச்சிக்கின்றனர். கங்கை, யமுனை, சரஸ்வதி போன்ற புண்ணிய நதிகளின் புனித தீர்த்தத்தால் உனக்குத் திருமஞ்சனம் செய்து சந்தோஷிக்கின்றனர். சௌந்தர்யவதியே! உனது அவதாரத்தால் பூலோகம் சொர்க்கலோகமானது. இந்த நந்நவனம் கண்ணனின் பிருந்தாவனமானது!

ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ப்ரியமானவளே! ராதைக்கு நிகரானாவளே! மனோரம்மிய சொரூபிணியே!

மனோன்மணியே! என்றைக்கும் இளமை குன்றாத கட்டழகு பாவாய்! மானைப் பழிக்கும் விழியால் மானுடர்கள் உய்வதற்கு அருள் செய்யும் எங்கள் கோதையே! கோமேதக சிலையே! கோவிந்தன் கொண் டாடும் கோடிரதிகளின் அழகை ஒன்றாகக் கொண்ட பேரழகின் பெரு மாளிகையே! உனது திருவடிக் கமலங் களுக்கு எங்கள் கோடானு கோடி வந்தனங்கள்.

[பெரியாழ்வாரின் குலமகள்—நல்ல குணமகள் — குன்றை குடை பிடித்த கோகுலத்து பாலகனின் கனிமொழியாள்—திருவரங்கனை மணக்கப்போகும் அணி விளக்கு—கோவிந்தா! கோவிந்தா என்று எந்நேரமும் கூவும் சோலைக்கிளி! பெரியாழ்வார் நந்தவனத்து பைங்கிளியே! ஆடிப்பூரத் திரு நாளான இந்நாளில் ஆடிவரும் பொன் விளக்காய்— அறிவொளி பரப்பும் ஞான விளக்காய் அவதரித்த கோதையே! உன்னால் உலகெங்கும் பிரகாசம் பொங்குகிறது. எங்கும் பேரொளி]

● பெரியாழ்வார் தனி Spot ●

பெரி : இது என்ன... கண்ணைப் பறிக்கும் வண்ணப் பேரொளி... துளசி செடி பக்கமிருந்து... அற்புதமான ஜோதி தெரிகிறதே...

[பெரியாழ்வார் துளசிசெடி அருகே போகிறார். குழந்தை அழுகுரல் — பெரியாழ்வார் குழந்தை யைப் பார்த்தல்—குழந்தை சிரிக்கிறது]

பெரி : இது யாருடைய குழந்தை...! இந்த நந்தவனத்தில் எப்படி வந்தது? அருள் பொங்கும் வதனம் கண்டால்... தெய்வீகக் குழந்தை போல் தோன்றுகிறதே...பூப் போன்ற முகப் பொலிவை காணும் போது... பூமகள் பெற்ற பொன் மகள்போல் தெரிகிறது.

[பெரியாழ்வார், குழந்தையை எடுத்து முத்தம் கொடுத்தல்]

அசரீரீ : பக்தா! குழந்தை இல்லையே என்ற உனது குறையைத் தீர்க்கவே... இக்குழந்தையை உனக்குத் தந்து அருள் செய்துள்ளோம்.

● பெரியாழ்வார் குழந்தை, Spot ●

—பாடல்—

தேவஸ்ய மாஷீம் திவ்யாம் ஆதௌ கோதரம் உபாஸ்மஹே
யந்மௌலி மாளகா॰ ப்ரீத்யா ஸ்வீகரோதி ஸ்வயம்ப்ரபு:

குரல் : எவள் சூடிக் கொடுத்த மாலையை சர்வேசுவரன் உவப்புடன் ஏற்றுக் கொண்டானோ... அந்த ஸ்ரீமந் நாராயணனின் திவ்யபட்ட மகிஷியான கோதையை முதலில் கொண்டாடி உபாஸிக்கின்றோம்.

—பாடல்—

சித்தா நாம ரரதாம் கலாவபகமே வர்ஷே நளாக்யேரவெள
யாதே கர்க்கடகம் விதாவுபசிதே ஷஷ்டே பிஹரி ஸ்ரீமதி
நக்ஷத்ரே பீர்யமனதவதே க்ஷிதிபுவோ வாரே சதுர்த்யாம் திதௌ
கோதா ப்ராதுரபூத் அசிந்த்ய மஹிமா ஸ்ரீவிஷ்ணு சித்தாத் மஜா!

குரல் : கலியுகத்திலே சித்த என்னும் எழுத்துக்களால் கிடைத்த தொண்ணூற்றேழு வருஷங்கள் முடிந்த அள விலே, நள வருஷம்—சூரியன் கடக ராசியை அடைந் திருக்கும் ஆடி மாதத்தில்—சுக்லபக்ஷத்தில் ஆறாவது தேதியில் அர்யமாவைத் தேவதையாக கொண்ட பூர நந்நாளில், செவ்வாய்க்கிழமை, சதுர்திதியில்—எண்ண முடியாத அளவிற்கு பெருமைகளை உடைய ஸ்ரீவிஷ்ணு சித்தரின் பெண்ணான கோதா தேவி அவதரித்து அருளி னாள்.

பெரி : விரஜை! நம் குறை நீங்க... நமக்கு செல்வத்தை அளித்து விட்டான் அந்த பரந்தாமன்!

— திரை —

## காட்சி : 27

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள்: பெரியாழ்வார்—விரசை.

[விரசை துளசி மாடத்தைச் சுற்றி வந்து நமஸ் கரித்தல், தோத்திரம் சொல்லுதல்]

☐ பாசுரம் ☐

நமஸ்தே துளசி கல்யாணி நமோ விஷ்ணு பிரியேசுபே
நமோ மோக்ஷ ப்ரதே நமஸ் ஸம்பத் பிர தாயிகே
துளஸி பாதுமாம் நித்யம் ஸர்வாபத்ப யோ பி ஸர்யதா
தீர்த்தி தாபி ஸ்ம்ருதாவாபி பவித்ரயதி மானவம்
நமாமி சிரஸா தேவீம் துளஸீம் விலதைத்னாம்
யாம் திருஷ்ட்வா பாபிதே மர்த்தியா முச்யன்னதே
ஸர்வபிஷாத்

விரசை : துளஸி தாயே! திருவின் ஒளியே! ஒளியின் மணியே! கல்யாணியே! வெள்ளியும் செவ்வாயும் கேட்டவர்க்கு நல்லவரம்தந்தருளும் தயாபரி! ஐசுவரியதேவீ! உன்னை நமஸ்கரிக்கின்றேன். பிள்ளை வரம் தந்து என்னை அநுக்கிரஹிப்பாய்! பரிமளிக்கும் சுகந்த கொழுந்தே! உன்னைப் பன்முறை போற்றிப் பணிந்து நமஸ்கரிக்கின் றேன். எங்கள் குலம் விளங்க புத்திர பாக்கியம் தந் தருளலாகாதா? வனமாலை எனும் மருவே! திருவே மங்கல நாயகியே! இந்த அபலையின் குறை கேட்பாய்! எங்கள் மனையில் குழந்தையின் அழுகுரலைக் கேட்க செய்வாய்.

[நமஸ்கரிக்கின்றாள் — குழந்தையின் அழுகைச் சத்தம்—திகைத்தல்—கையில் குழந்தையுடன் வரு கிறார் விஷ்ணு சித்தர்]

பெரி : உன் பிரார்த்தனை வீண் போகவில்லை... நம் குலம் விளங்க ஒரு குழந்தை இந்தா...

[விரசை, குழந்தையைக் கையில் வாங்கி முத்தமாரி பொழிகிறாள்.]

பிரியே! நந்தவனத்தில், துளசி செடிகளின் நடுவே பேரொளி பிரகாசம் தெரிந்தது. திடீரென்று குழந்தையின் அழுகுரலும் கேட்டது... இந்த பெண் குழந்தை ஜோதி மயமாக சயனித்திருந்தது... அப்பொழுது விண் வழியே ஓர் அசரீரீ... நமக்கு குழந்தை இல்லை என்ற குறையைத் தீர்க்கவே பெருமான்... இப்பெண் குழந்தையை அளித்துள்ளார் என்று அருள் வாக்கு கேட்டது...

விரசை : அப்படியா...! ஆஹா! முகத்தில் என்ன தேஜஸ்... என்ன அழகு! தாமரைக் கண்கள்... தீர்க்கமான மூக்கு... சந்திரவதனம்... சுந்தரரூபம்...

பெரி : விரசை! அந்த பிராட்டியாரே நமக்கு குழந்தையாக அவதரித்துள்ளாள்...

விரசை : சுவாமி! தேவரீர் மகாபுருஷர்! எம் பெருமானின் பேரருளைப் பரிபூரணமாகப் பெற்றவர். கோடி யக்ஞம் செய்பவற்குக்கூட... இப்பேர்ப்பட்ட பாக்கியம் கிட்டாது... பொன்னைக் கொடுத்து... உங்கள் புகழை உலகிற்கு பறை சாற்றிய அந்த பரந்தாமன் பெண்ணைக் கொடுத்து... நம்குலம் விளங்கச் செய்த திருவருளைத் தான் என்னென்பது... சுவாமி! எளியவளுக்கு ஒரு சந்தேகம்.

பெரி : எனக்கு சந்தேகமே இல்லை... அன்றைக்கு தொட்டில் கொண்டு வந்து கொடுத்தது ஸ்ரீமந் நாராயணனேதான்.

விரசை : இதைத் தான் நானும் சந்தேகம் என்று சொல்ல வந்தேன்...

பெரி : விரசை...என் ஐயன் தொட்டிலை கொடுத்து அனுப்பியது... வெண்ணை வியாபாரி என்று சொன்னது... எல்லாமே அவன் திருவிளையாடல்தான். இதயகமல வாசா என்று பாஞ்சாலி... அபயக் குரல் கொடுத்த போது...புடவையோடு வந்தவன் அல்லவா...? அதனால் தானே தன்னை புடவை வியாபாரி என்று சொல்லிக் கொண்டான். ஸ்ரீ கிருஷ்ணா... பக்தர்களுக்காக... நீ எவ்வளவெல்லாம் கஷ்டப் படுகிறாய்... இதற்கு வட்டியும் முதலுமாக... நான் என்ன தரப் போகிறேன்... அதற்கும் நீயே ஒரு வழியை அன்று சொன்னாயே... என்னிடம் பெண் கேட்க வரப் போகிறேன் என்று!

விரசை : சுவாமி! நம் குழந்தைக்கு என்ன பெயர் வைக்கலாம்...

பெரி : இவள் ஒளியிலே பிறந்த அலங்கார பதுமை... கோ என்றால் ஒளி...தை என்றால் அலங்காரம்...அதனால் குழந்தைக்கு கோதை என்று பெயர் சூட்டலாம்...

விரசை : கோதை... ஆஹா... எவ்வளவு அழகான பெயர்... பிருந்தாவனத்து கண்ணனுக்கு ஒரு ராதை. வில்லிபுதூரில் கண்ணனுக்கு ஒரு கோதை!

பெரி : விரஜை! நம் குழந்தைக்கு, இந்த துளஸி செடி கீழ் அமர்ந்து ஸ்ரீ கிருஷ்ண மந்திரத்தைச் சொல்லப் போகிறேன்.

[விரசை குழந்தையை மடியில் கிடத்திக் கொண்டு உட்காருதல்—பெரியாழ்வார் குழந்தையின் செவிகளில் மந்திரம் ஓதுதல்]

பெரி : ஸ்ரீ கிருஷ்ணாய! வாசு தேவாய... தேவகீ நந்த நாயச நந்தகோப குமாராய ஸ்ரீ கோவிந்தாய நமோ... நம:

[புல்லாங்குழல் ஓசை]

— திரை —

## காட்சி : 28

இடம் : பெரியாழ்வார் அறை

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார் — விரசை — வல்லப தேவன் — செல்வநம்பி — ஆண்டாள்—பணியாளர்கள்

*[விரசை, கோதையைத் தொட்டிலில் ஆட்டிய வாறு பாடுதல்—பெரியாழ்வார் ஏட்டில் எழுதிக் கொண்டிருத்தல்]*

*—பாசுரம்—*

*மாணிக்கக் கிண்கிணி ஆர்ப்ப, மருங்கின் மேல்*
*ஆணிப் பொன்னாற் செய்த ஆய்பொன் உடைமணி*
*பேணி, பவளவாய் முத்து இலங்க, பண்டு*
*காணி கொண்ட கைகளால் சப்பாணி,*
*கருங்குழற் குட்டனே! சப்பாணி!*

*பொன் அரை நாணொடு மாணிக்கக் கிண்கிணி*
*தன்அரை ஆட, தனிச் சுட்டி தாழ்ந்து ஆட,*
*என்அரை மேல்நின்று இழிந்து உங்கள் ஆயர்தம்*
*மன்அரைமேல் கொட்டாய் சப்பாணி,*
*மாயவனே! கொட்டாய் சப்பாணி!*

*பல் மணி முத்து இன்பவளம் பதித்தன்ன*
*என் மணிவண்ணன் இலங்கு பொற்தோட்டின் மேல்*
*நின் மணிவாய் முத்து இலங்க, நின் அம்மைதன்*
*அம்மணி மேல் கொட்டாய் சப்பாணி,*
*ஆழியங் கையனே! சப்பாணி!*

பெரியாழ் : விரசை! எம்பெருமான்மீது இந்த தொண்டன் எழுதிய பாட்டிற்கு பெருமை சேர்க்கிறது... உனது தேனினும் இனிய குரல்... குழல் இனிது... யாழ்

இனிது என்பர்... என் மனைவி விரசையின் குரல் கேளாதார்...

விரசை : அளவிற்கு மீறி புகழ்கிறீர்கள்...

பெரியாழ் : என் மனம் நிறைந்த பாராட்டுக்கள் உனக்கு...!

விரசை : சுவாமி...! சப்பாணி பருவத்தை வருணித்து எத்தனை அழகாக... எழுதியிருக்கிறீர்கள்... உங்கள் புத்திரிக்கும் அந்த ஞானம் நிறைய இருக்கிறது.

பெரியாழ் : எல்லாம் அவன் அருள்... நல்ல இடத்தில் மணாளனைத் தேட வேண்டும்.

விரசை : பெண்ணுக்கு ஒரு வயசானவுடனேயே வரன் தேடப் புறப்பட்டு விட்டீர்களே...!

பெரியாழ் : நினைத்துப் பார்ப்பதற்குள் நாளும்... கிழமை யும் காற்று வேகத்தில் ஓடிவிடும்.

[கதவு தட்டும் சத்தம்—விரசை சென்று கதவைத் திறக்க— மாறுவேடத்தில் மன்னனும், மந்திரியும் வருதல்]

வல்லப : பெரியாழ்வார் சுவாமி... என்பது தாங்கள் தானே!

பெரியாழ் : வாருங்கள்... அமருங்கள்... அடியேன்தான் பெரியாழ்வார்...

[அரசரையும்—அமைச்சரையும் வணங்குதல்]

வல்லப : அபச்சாரம்... நீங்கள்தான் தொழுதற்குரிய வர்கள்.

[வல்லபதேவன் பெரியாழ்வாரை நமஸ்கரித்தல்]

பெரியாழ் : அமருங்கள்.

[மன்னன் அமருகிறான்]

வல்லப : தங்களுக்கு குழந்தை பிறந்த சேதி ஓராண்டு காலம் கழித்துத் தான் தெரிய வந்தது... என்னுடைய

அன்பு பரிசை குழந்தைக்கு கொடுத்து போகலாம் என்று வந்தேன்... குழந்தை எங்கே?...

[பெரியாழ்வார் இருவரையும் பார்த்தல்— அவர்கள் இருவரும் அரசன், அமைச்சன் என்பது பெரியாழ்வாருக்குத் தெரிய வந்தது]

பெரியாழ் : ஆண்டவன்தான் என்னிடம் விளையாடுகிறான் என்றால்... அரசனுமா விளையாட வேண்டும்... அரசே...! சொல்லி அனுப்பியிருந்தால் நானே நேரில் வந்திருப்பேன்...!

[அரசர், செல்வநம்பி வேஷத்தைக் கலைத்தல்—பெரியாழ்வாரை மீண்டும் வணங்குதல்]

பெரியாழ் : அபச்சாரம்... முடி வணங்கா மன்னன் அடி பணிவதா...?

வல்லப : இதில் தவறொன்றும் இல்லை... சுவாமி! நான் பகைவர்க்கு முடிவணங்கேன்... ஆனால்... பக்தர்க்கு அடிபணிவேன்... எனக்கு ஒரு ஐயப்பாடு... எப்படி எங்களை அடையாளம் கண்டு கொண்டீர்கள்...?

பெரியாழ் : ஒருவராக வந்திருந்தால் அறிந்திருக்க மாட்டேன்... இருவராக வந்ததால் தான் அடையாளம் கண்டு கொண்டேன்... அதுவும் உங்கள் அமைச்சரின் வணக்கமே அவரைக் காட்டி கொடுத்துவிட்டது... செல்வநம்பி அடக்கத்தின் அணிகலன்... ஆண்டவனின் பேரருளைப் பெற்றவர்... அவரைத் தெரிந்து கொள்ளாமல் இருக்க முடியுமா...? அரசே...! இப்பேர்ப்பட்ட ஓர் உத்தமமான நல்ல மனிதனைத் தாங்கள் அமைச்சராக அடைய கொடுத்து வைத்திருக்க வேண்டும்...!

வல்லப : எல்லாம் தங்களைப் போன்ற ஞானியர்களின் ஆசியும்... ஆண்டவனின் அருளும் தான்!

[தொட்டிலில் உறங்கும் குழந்தையைப் பார்க்கிறான் மன்னன்]

பெரியாழ் : இவள் பெயர் கோதை...!

வல்லப : அற்புதமான பெயர்...பாண்டிய நாட்டு பெருமையை பறைசாற்ற வந்த பைந்தமிழ் பாவை! பொதிகை மலை தென்றலிலே பிறந்த பூம்பாவை... வேலைப் பழிக்கும் கண்கள் என் கோதையின் கண்கள்... தாமரை வதனம் என் தாமோதரனின் சுந்தரவதனம்... அதனைக் கோதையிடம் காண்கின்றேன்.

[முத்துமாலையைக் கழற்றி கழுத்தில் போடுதல்]

செல்வ : நம் அரசன் வல்லபதேவன் வாழ்த்துகிறார் என்றால்... அகில லோகங்களும் வாழ்த்துவது போல் அல்லவா...! கோதை நூறாண்டு காலம் வாழவேண்டும்... நானிலம் தழைக்க தமிழ்க் காதை படிக்கவேண்டும்... தந்தை புகழ் நாடெங்கும் நாட்ட...வேத ஞான மேதையாக...கோதை விளங்க... தமிழ் அன்னையை வணங்குகிறேன்.

[அரசன் வெளிப்பக்கம் பார்த்து, கை அசைக்க பெண்கள், ஆண்கள் பரிசுகள் தட்டில் கொண்டு வந்து வைதைல்]

வல்லப : வடபத்ரசாயியின் பேரருளைப் பரிபூரணமாகப் பெற்ற தவச்செம்மலே! இந்த ஏழையின் இந்த சிறிய அன்பளிப்பை பெற்றுக் கொள்ளவேண்டும்... இது ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டு!

பெரியாழ் : அரசே...! எனக்கு இதெல்லாம் வேண்டாம்... ஆசைக்கு முத்துமாலையைக் குழந்தை கழுத்தில் போட்டீர்கள்...கழற்றச் செய்வது நல்லதல்ல... அதனால் தான் பேசாதிருந்தேன்... இந்த பொன்னும்...பொருளும் எனக்கு வேண்டாம்.

செல்வ : அம்மா...! இது எங்கள் அரசனின் அன்புக் காணிக்கை! ஏற்றுக்கொள்ளச் சொல்லுங்கள்!

விரசை : மன்னவனின் அன்பிற்கு ஈடு இணையாகுமா...? இந்த ஆடை ஆபரணங்கள்...!

வல்லப : நீங்கள் ஏற்றுக்கொள்ளத் தான் வேண்டும்!

பெரியாழ் : அரசே...! நான் ஒருநாள் உங்களை நாடி வருவேன்... அன்று எனக்கு ஆதரவு தாருங்கள்... ஏற்றுக் கொள்கிறேன்.

வல்லப : இது தட்டிக்கழிப்பதற்காக சொல்லும் வார்த்தை அல்லவா...?

பெரியாழ் : இல்லை அரசே...! என் மனம் திறந்து வந்த வார்த்தைகள்...! ஏதோ ஒரு உண்மையை தங்களுக்கு உணர்த்துகிறது என்பது மட்டும் நிச்சயம்... தயவு செய்து இவற்றை எடுத்துச் செல்லுங்கள்... இந்த விஷயத்தில் என்னை மன்னித்து விடுங்கள்...!

விரசை : ஆம் அரசே...! என் நாயகனுக்கு விருப்பம் இல்லை என்றால் விட்டு விடுங்கள்...

வல்லப : என் செல்வத்தைத் தான் ஏற்றுக் கொள்ளவில்லை... என்னையாவது ஏற்றுக்கொள்வீர்களா...?

பெரியாழ் : தங்களை ஏற்றுக்கொள்வதா... புரியவில்லை!

வல்லப : என்னைத் தாங்கள் சீடனாக ஏற்றுக்கொள்ள வேண்டும... அது எனது பிரார்த்தனை!

பெரியாழ் : அரசே...! தங்களுக்கு குருவாக இருக்கும் தகுதி எமக்கு ஏது...?

வல்லப : தங்களை...அன்றைக்கே ஆயிரம் பேர் கூடியிருந்த அவையிலேயே...என் குருநாதராக ஏற்றுக்கொண்டு விட்டேன்...தாங்கள் கழியறுத்து பொன்னை அடைந்தீர்கள்... அத்தோடு என் வினை அறுத்து அகக்கண்களைத் திறந்தீர்கள்... தயவுசெய்து தட்டாதீர்கள்... என்னை சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள்...!

பெரியாழ் : அரசே...! உங்கள் அன்புக்கட்டளைக்கு அடி பணிந்தேன்... ஆனால்... அதற்கும் தருணம் வர வேண்டாமா...?

வல்லப : தங்களது இந்த ஒப்பற்ற வார்த்தைகளையே குருமார்க்க உபதேசமாகக் கொள்கிறேன்! குரு தேவா...! வல்லபதேவனின் குருதக்ஷிணையாக இவற்றை ஏற்றுக்கொள்ளுங்கள்!

பெரியாழ் : அரசே! நீங்கள் என்னை வென்று விட்டீர்கள்... நீங்கள் குருவுக்கும் மிஞ்சிய சிஷ்யனாகி விட்டீர்கள்... எப்படியோ என்னை தக்ஷணையை ஏற்றுக் கொள்ள செய்து விட்டீர்கள்...!

—திரை—



## காட்சி : 29

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : கோதை — தோழி-1 — தோழி-2— பெரியாழ்வார்—விரசை—அந்தணர்

[விரசை, கோதைக்கு பாவடை தைத்துக்கொண்டிருத்தல்]

விரசை : கோதை! கோதை...!

[கோதை உள்ளிருந்து துள்ளிக் குதித்து கொண்டு வருதல்]

கோதை : என்னம்மா...

விரசை : வாம்மா கோதை... பாவாடை உயரம் சரியா இருக்கான்னு பார்க்கலாம்...

கோதை : இந்த பாவாடை எத்தனை அழகு... தங்க ஜரிகை கண்ணை பறிக்குதே அம்மா...

விரசை : இது உனக்கு...நம்ம ராஜா... கொடுத்து அனுப்பியது...

கோதை : அப்பாகிட்டே சொல்லி... என்னை ஒருவாட்டி கூட்டிக்கிட்டு போகச் சொல்லம்மா...

விரசை : கண்டிப்பா போகலாம்...

[தோழியர் இருவரும் வருதல்]

விரசை : நல்லவேளை... வந்தீங்களே... கோதை... நீ இவுங்களோடு விளையாடிக்கிட்டு இரு... நான் கோவில் அர்ச்சகர் இல்லம் வரை போய் வருகிறேன்.

கோதை : சரி அம்மா...

[விரசை பாவாடையை பெட்டிக்குள் வைத்து விட்டு, வெளியே போகிறாள்]

கோதை : வாடி... தட்டாமாலை சுத்தி விளையாடலாம்.

[கோதை தோழியர்களுடன் தட்டாமாலை சுற்றி விளையாடுதல்— விளையாட்டை நிறுத்தி விடு கிறாள்]

கோதை : தட்டாமாலை வேண்டாம்... வேறு ஏதாவது விளையாடலாம்...

தோழி-1 : கண்ணாமூச்சி...

கோதை : எனக்கு பிடிக்காது...

தோழி-2 : அப்படீன்னா... கோதை... கல் விளையாட லாமா...?

கோதை : கல்லும் வேண்டாம்... கற்கண்டும் வேண்டாம்... கண்ணன் விளையாட்டு விளையாடலாம்.

தோழி 1 : அதென்ன புது விளையாட்டு...?

கோதை : என் கண்ணன் எத்தனை அழகு தெரியுமா...? நான் கண்ணனைத் தான் கல்யாணம் செய்துக்கப் போறேன்...

தோழி 2 : எந்தக் கண்ணன்...? நம்ம பக்கத்து தெரு தூங்குமூஞ்சி கண்ணனா...?

[கோதை சிரித்தல்— வீட்டிற்குள் இருந்துவந்த பெரியாழ்வார், மறைந்து நின்று கவனித்தல்]

தோழி 1 : ஏன் சிரிக்கறே...?

கோதை : சிரிக்காம என்ன பண்றது...? நான் சொல்ற கண்ணன்... அலைகடல் நிறம் கொண்டான்... ஆநிரை மேய்த்து ஆயர்க்குலம் காத்த கோகுலத்து குலக் கொழுந்து... இருள் அகற்றி நம் மனதை ஒளிமயமாக்

கும் திருவருளின் திங்கள் முகத்து மாயவன்-மதுசூதனன் ஆயர்கள் போற்றும் அரங்கன்— என் உள்ளம் கவர் கள்வன்—மணிவண்ணன் — மால் அழகன் — மயக்கும் மோகன சுந்தரரூபன்...

தோழி 1 : அடேயப்பா...இந்த சின்ன வயசிலே...எவ்வளவு அழகா பேசறே...!

தோழி 2 : பேசறது இருக்கட்டும்... ஏண்டி கோதை... நாம... மனிதர்கள்... நீ சொல்ற கண்ணன் நமக்கு தெய்வம்! அவரை எப்படி நீ கல்யாணம் செய்துக்க முடியும்...?

கோதை : அதனாலென்ன...? ஜீவாத்மாவும்... பரமாத்மாவும் ஒண்ணுங்கற தத்துவத்தை விளக்கறதுக்குதானே... கோபியர்களோட... கண்ணன் நடத்திய ரஸக்ரீடை...

தோழி 1 : நீ பேசற தத்துவம் உங்கப்பாவுக்கே புரியாது...

கோதை : ஏன் புரியாது... எங்கப்பா... பல புலவர்களை வென்று பொற்கிழி பெற்ற மகாமேதை... அவருக்கு என்னைவிட நிறையவே தெரியும்.

தோழி 2 : கண்ணன் உனக்கு மணாளனா வந்தா... எங்களுக்கெல்லாம் பெருமைதானே...!

கோதை : ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிடாத... பூத்த நீள் கடம்பு ஏறிப் புகழ் பாய்ந்து — வாய்த்த காளியன் மேல்நடம் ஆடிய கூத்தனார் வரில்... கூடிடு கூடவே...

[பெரியாழ்வார், ஓடிவந்து கோதையை வாரி அணைத்து முத்தம் கொடுத்தல்]

பெரியாழ் : கோதை... நீ கண்ணனுக்கு ஏற்ற ராதை... உன் ஆசைப்போல் நீ அவனுக்கே மாலையிடுவாய்...! என் கண்மணி கோதை... நீ அந்த கோவிந்தனுக்காகப் பிறந்தவள். நம் நந்தவனத்தில் அவதரித்தவள்...அந்த நந்தகுமாரனுக்குத் தான் மனைவியாக வேண்டும்... ஒருமுறை எம்பெருமானே... இந்த எளியவனிடம் நமது

இல்லத்திற்குப் பெண் கேட்டு வருவேன் என்று திருவாய் மலர்ந்து அருளினார்...

தோழிகள் : கோதை... நாங்க வர்றோம்...!

கோதை : நாளைக்கு வாங்க... நாம கண்ணன் விளையாட்டு விளையாடலாம்...

[தோழிகள் இருவரும் போகிறார்கள்]

கோதை : தந்தையே! நான் தினமும் என் கண்ணனை... கனவிலே காண்கின்றேன்... செங்கமல நாள்... மலர் மேல் தேன் நுகரும் அன்னம் போல்... செங்கண் கரு மேனி வாசுதேவனுடைய கைத்தலம் ஏற்பக் கனாக் கண்டேன்... அந்த வேணுகோபாலனின்... வேய்குழல் கானம்... என் செவிகளில் அநவிரதமும் தேனாக ஒலித்துக் கொண்டே இருக்கிறது...

பெரியாழ் : கோதை! நீ கவிதை பாடுவதில் தேனாக இனிக்கிறாய்! இந்த சின்ன வயசிலேயே... உனக்கு எப்பேர்ப்பட்ட புலமை...!

கோதை : தந்தையே! நான்கூட ஏடு எடுத்து... என் மாதவனுக்கு உகந்த மார்கழி மாதத்து வைகறைப் பொழுதின் பேரின்ப சுகத்தை சுந்தரத் தமிழில் எழுதப் போகிறேன்.

பெரியாழ் : நல்லது மகளே...! எனக்கு நேரமாச்சு...நான் நந்தவனம் போய் வருகிறேன்.

கோதை : தந்தையே! நாளை முதல் நானும்... தங்களுடன் வைகறைத் துயிலெழுந்து— மலர் பறிக்க வரப் போகிறேன்.

பெரியாழ் : நீ இன்னும் கொஞ்சம் பெரியவள் ஆனதும் வரலாம்...

கோதை : கண்ணனுக்கு கைங்கரியம் செய்வதற்கு காலம் எதற்கு...? நேரம் எதற்கு...? நாம் பிறவி எடுத்

தத்தே அந்த கோபாலனைக் கொண்டாடுவதற்கு தானே...!

[அனந்தன், அந்தணர் உருவில் வருகிறார்]

அந்தணர் : இது தானே விஷ்ணுசித்தர் இல்லம்!

பெரியாழ் : ஆமாம்... சுவாமி! வாருங்கள்... உட்காருங்கள்... அடியேன் தான்... விஷ்ணுசித்தர்... எம்மை பெரியாழ்வார் என்றும் அழைப்பர்... என் மகள் கோதை... பத்தினி விரசை... வெளியே சென்றிருக்கிறாள்...

[இருவரும் நமஸ்கரித்தல்— அந்தணர் ஆசீர்வதித்தல்]

அந்தணர் : மங்களாநுபவந்து...!

பெரியாழ் : சுவாமி! தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்...?

அந்தணர் : நான் துவாரகையிலிருந்து வருகிறேன்.

பெரியாழ் : அப்படியென்றால்... வரும் வழியில் நிறைய திவ்ய க்ஷேத்ரங்களை தரிசித்தீர்களா...?

அந்தணர் : நான் க்ஷேத்திரங்கள் சென்று... பரமனைச் சேவிப்பதில்லை.

பெரியாழ் : அதற்கான காரணத்தை... இந்த எளியவன் அறியலாமா...?

அந்தணர் : நான் அடியார்களைத் தான் சேவிப்பது என்று ஓர் நியமத்தைக் கடைப்பிடிக்கின்றேன்... திருத்தொண்டர்களின் பாததூளிகள் என் சிரசுக்கு...சிரஞ்சீவி போல்... அடியார்களின் அன்பிற்கும்... பக்திக்கும் கட்டுப்பட்டவன்... ஒருத்தி மகனாய்ப் பிறந்து...ஒருத்தி மகனாய் வளர்ந்தவன்!

கோதை : என் கண்ணனும் அப்படித்தான்...!

அந்தணர் : எந்தக் கண்ணன்... மண்ணை உண்டவனா...? சேலை உரித்தவனா...?

கோதை : அவன் மண்ணை உண்டாலும்... பதினான்கு லோகங்களையும் வாயில் காட்டியவன்... கோபியர் சேலைகளைத் திருடினாலும்...அன்று இதயகமலவாசா ...என்று அபயக் குரல் கொடுத்த பாஞ்சாலிக்கு துகில் கொடுத்து... மானம் காத்த மாயவன்! என் கண்ணன் பிறந்த உடனேயே பேசியவன்... நாம் பிறவிப்பயனை பெறுவதற்கு "ஸர்வமும் நானே! ஸர்வம் கிருஷ்ணார்ப்பணமஸ்து" என்று அருள்வாக்கு சொன்னவன்; கண்ணன்! நான்கு திருக்கரங்களுடன் பிறந்தகண்ணன் நான்கு வேதங்களுக்கும் நாயகனாக விளங்குகிறான் கருமை நிறத்துடன் பிறந்த கண்ணன் மூவுலகிற்கும் ஞானஒளி காட்டும் தீபப்பிரகாச வண்ணனாக காட்சி தருகிறான்... பஜகோவிந்த பிரியனான பரந்தாமனின் கிருஷ்ணாவதார வைபவம் பிரம்ம தத்துவத்தை நமக்கு போதிக்கிறது. கண்ணனின் திருநாமத்தை ஜபித்தாலும் அவனைப் பூஜிப்பதாலும்...அவனை சர்வசதா காலமும் நினைத்துக் கொண்டிருப்பதாலும் நமக்கு வாழ்க்கையில் ஏற்படும் சகல துன்பங்களும் நீங்கி இன்பம் நிலைக்கிறது.

அந்தணர் : கண்ணனிடம் உனக்கு இத்தனை பிரேமையா...? உங்கள் மகளுக்கு அந்த கண்ணனையே கல்யாணம் செய்து வைத்து விடுங்கள்... கோதை! உன் கிருஷ்ண பிரேமைக்கு நான் ஒரு பரிசு கொடுக்க போகிறேன்.

[துணிப் பையில் இருந்து கண்ணன் பதுமை எடுத்தல்]

இந்தா... கண்ணன் விக்ரஹம்! இதை... நான் துவாரகையில் இருந்து உனக்காகவே கொண்டு வந்தேன்.

[அந்தணர் கிருஷ்ணர் விக்ரஹம் கொடுத்தல்—கோதை வாங்கி கொள்ளுதல்]

கோதை : கண்ணா... எனக்கு நீ கிடைத்து விட்டாய்... என் ஜென்மம் சாபல்யம் அடைந்துவிட்டது...

[கண்ணன் விக்ரஹத்தை அணைத்து மகிழ்கிறாள்; கோதை]

அந்தணர் : என்ன புலமை... நான் வருகிறேன்...

பெரியாழ் : எதுவும் புசிக்காமல்...

அந்தணர் : கோதையின் அன்பு ஒன்றே இந்த அடியவனுக்குத் திருக்கண் அமுது! கோதையின் தமிழின் இனிமை எனக்கு அமிர்தமாய் இருந்தது!

—திரை—



## காட்சி : 30

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்—விரஜை—கோதை

[ஓலையில் பெரியாழ்வார் பூக்குடலை செய்தல் கோதை கண்ணன் விக்ரஹத்தை வைத்துக் கொண்டு இருத்தல்]

கோதை : அப்பா...கண்ணனைப் பற்றி...இன்னும் சொல்லுங்கப்பா...

பெரியாழ் : உன்னை மாதிரித்தான்... கோகுலத்திலே... கோபிகா ஸ்திரீகள் கண்ணா...கண்ணா என்று அல்லும் பகலும் கண்ணனையே நினைந்து நினைந்து உருகினர்... ஆயர்பாடியில் அந்த ஆரணங்குப் பதுமைகள் கண்ணனுடைய பங்கஜ மலர்ப் பாதங்களைத் தஞ்சம் என்று பற்றி கொண்டனர்... இதனால் கோபமுற்ற கோபாலர்கள் அவர்களை வீட்டிற்குள் சிறை வைத்தனர்... சிறையில் பிறந்தவனை எண்ணி... எண்ணி... சிறையில் அடைபட்ட கோபியர்களும்... சிறகு ஒடிந்த பறவை போல் துன்பமுற்றனர்... ஊன் மறந்து... உலகம் மறந்து... உறக்கம் மறந்து... உடல் இளைத்து... வெண்ணை போல் உருகினர். இந்த சமயத்தில் மழை இன்றி பஞ்சம் பெருகியது... நீர் நிலைகள் வற்றி வறண்டன... பச்சை பசேலென்ற சோலை போன்ற ஆயர்ப்பாடி அனல் காற்றால் வறண்ட பாலை போலானது... அப்பொழுது ஆயர்குலத்தார் ஒன்றுகூடி... கோபியர்களிடம் மழைக்காக காத்யாயனீ என்னும் விரதம் அனுஷ்டிக்க வேண்டிக் கொண்டனர்... அதற்கு கண்ணனே அந்த நோன்பினை தலைமை ஏற்று நடத்த வேண்டும் என்றும் முடிவு பூண்டனர்.

கோதை : காத்யாயனீ விரதம் என்றால் என்ன...?

பெரியாழ் : வைகறைத் துயிலெழுந்து... நீராடி... ஆற்று மணலில் தேவி சிலை வடித்து நோன்பு நோற்பதாகும்... கோபியர் கிருஷ்ணனையே இந்த நோன்பினால் பர்த்தாவாக அடைந்தனர் என்பது பாகவத சித்தாந்தம்...!

கோதை : கோபியர்பாடு கொண்டாட்டம்தான்... அவர்கள் நோன்பிருந்து கேசவனைக் கொண்டாடிய பேரின்ப கோலாகலத்தை... நானே என் மனக்கண்களில் எண்ணிப் பார்க்கின்றேன்... ஏன் அப்பா இந்த நோன்பினை... நானும் என் தோழியர்களுடன் சேர்ந்து கடைப்பிடித்தால்... கண்ணனின் கருணை... இந்த கோதைக்கும் கிட்டுமல்லவா...?

பெரியாழ் : கண்டிப்பாக கிட்டும்... நோன்பின் மகிமையால் உன் மனத்திற்கேற்ற மணாளனே... உன்னை மாலையிட்டு மணம் செய்து கொள்வான்.

[''கோதை'' என்று உள்ளிருந்து விரஜை குரல் கொடுக்க... கோதை உள்ளே ஓடுகிறாள்]

பெரியாழ் : மாவலி வேள்வியில் மாண் உருவாய்ச் சென்று... மூவடிதா என்று இரந்தவனே... மாவலியை வென்றவனே... வேணுகான பிரியனே... பரந்தாமா! பாற்கடல் வாசா! பன்னகசயனா...! உன்னை நினைச்சு... என் மகள் அலைகடல் துரும்பாக இளைத்து விட்டாளே... இந்த ஆறு வயசிலேயே... இப்படியென்றால்... பதினாறு வயசிலே... அவள் எப்படி இருப்பாள்...?

[மேடையில் இருள்— மீண்டும் ஒளி— பதினாறு வயது பருவத்தை அடைந்த கோதை- பக்கத்தில் கிருஷ்ணவிக்ரஹகம்-கையில் ஏடும்... எழுத்தாணியும் கொண்டு எழுதுதல்]

பெரியாழ் : என்னம்மா கோதை... வாழை நார் எடுத்த உனது கைகள்... இப்பொழுதெல்லாம் ஏடும் எழுத்தாணியும் எடுத்துக் கொண்டு விட்டதே!

கோதை : தந்தையே! அன்று என் தாமோதரனுக்கு பூ மாலை தொடுத்தேன்... இன்று அவனுக்கு பாமாலை சாத்துகிறேன்... அன்று அவனுக்கு மலரிலே ஆரம்... இன்று தமிழிலே ஆரம்... இந்த பாமாலையில் தமிழ் தேன் சிந்தும்...! அந்தத் தேனைப் பருக என் கண்ணன் வண்டாக வந்து ரீங்காரமிடுவான்!

பெரியாழ் : அப்படியா...?

கோதை : அப்பா உங்கள் கோதை... அந்த கோவிந்தன் மீது ஒரு காவிய காதை வடிந்துள்ளேன்... இந்த ஸ்ரீவில்லி புதூரை ஆயர்பாடியாகக் கண்டேன்... வடபெருங் கோவில்... நந்தகோபனது திருமாளிகையாகக் கொண் டேன்... நான் என்னையும்... என் தோழியர்களையும் கோபிகாஸ்திரீகளாக பார்த்துக் கொண்டேன்...நாங்கள் அதிகாலைப் பொழுது... கண்ணனை அழைத்துக் கொண்டு... யமுனை நதிக்குச் சென்று... அவனுடன் ஜலக்ரீடை புரிந்து... அவனது அருளால் நோன்பினை நடத்துகின்றோம்... இந்த பேரின்பத்தை முப்பது பாசுரமாக அமைத்துள்ளேன்!

பெரியாழ் : பட்டபிரானுக்குப் பிறந்தவள்... பரந்தாமன் மீது பாசுரங்கள் பாடப் பிறந்தவள் தானே!

கோதை : நானும் என் தோழியரும்... வைகறைப் பொழுது...துயிலெழுந்து... புறப்பட்டு... கண்ணனோடு சேர்ந்து நோன்பினை... ஆரம்பிப்பதுதான் என் பாசுரத்தின் ஆரம்பமே!

[ஆண்டாள் ஆடி பாடுகிறாள்]

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர்! போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கு மாய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்

ஏரார்ந்த கண்ணிய கோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறை தருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்!!

பெரியாழ் : கோதை! உன்னை என் மகளாக அடை வதற்கு என்ன தவம் செய்தேனோ... எத்தனை ஆழ மான கருத்து... அத்தனை எழுத்துக்களும் முத்துக்கள்... மாணிக்கபரல்கள்... தெவிட்டாத தமிழ்த்தேன் துளி கள்... ''மாதங்களில் நான் மார்கழி'' என்று கண்ணன் திருவாய் மலர்ந்ததனை மனத்திலே கொண்டு... மார்கழி மாதம்... பிரம்ம முகூர்த்த வேளையில்... முதி யோர் வெளியே வர அஞ்சும் பனி காலை வேளையில்... கோபிகா ஸ்திரீகளாகிய நீங்கள்... வெளியே புறப் படுவது... எத்தனை கருத்தை உள்ளடக்கச் சொல் கிறது... போதுவீர் போதுமினோ... இறைவனை அடை வதற்கு விருப்பம் ஒன்றே போதும்... விருப்பம் உடை யோர்க்கு அவன் எளிதில் கிடைப்பான் என்ற ஜீவாத்மா... பரமாத்மா தத்துவத்தை அழகாக சொல்லிவிட்டாய் கோதை! இப்படி விளக்கங்கள் சொல்லிக் கொண்டே போகலாம்.

கோதை : முழுக்கப் படிக்கிறேன் கேளுங்கள்...

பெரியாழ் : கோதை! நல்ல சோற்றுக்கு ஒரு பருக்கையும் போதும்... ஏடுகளைக் கொடு... நானே பார்த்து... படித்து மகிழ்வேன்... அதுதான் இன்னும் இன்பம்... கண்ணுக்கு இன்பம்... என் நாவிற்கு இன்பம்... என் செவிக்கு இன்பம்... என் மனதிற்கும் இன்பம்...கோதை! உனது இந்த பிரபந்தம் உலகிற்கே இன்பம்! உனது பிரபந்தம் கீதையிலும் மேம்பட்டது... கீதை... பார்த்த னுக்கு மட்டும் உபதேசம்... இது பக்தர்களுக்கு எல்லாம் உபதேசம்!

[கோதை ஏட்டைக் கொடுத்தல் - கண்களில் ஒற்றிக் கொண்டு, அவள் கைகளையும் கண்களில் ஒற்றிக் கொள்ளுதல்— பெரியாழ்வார் பாடத் துவங்குதல்— விரசை உள்ளிருந்து வருதல்]

பெரியாழ் : வாம்மா... நீயும் கேள்... நம் கோதை... கண்ணனை பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு மிக அற்புதமான பாசுரங்களைப் பாடியிருக்கிறாள்.

விரசை : அப்படியா...?

[பெரியாழ்வார் பாடுதல்]

வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்குச்
செய்யுங் கிரிசைகள் கேளீரோ—பாற்கடலுள்
பையத் துயின்ற பரம னடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட் டெழுதோம்—மலரிட்டு நாம்முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையு(ம்) ஆந்தனையுங் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்!!

[மேடையில் இருள்—மீண்டும் ஒளி—பெரியாழ்வார் கடைசி பாசுரத்தைப் படித்தல்]

வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட வாற்றை, அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதுந் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பா ரீரிரண்டு மால்வரைத் தோள்
செங்கண் திருமுகத்துச் செல்லத் திருமாலால்
எங்குந் திருவருள்பெற் றின்புறுவ ரெம்பாவாய்!!

பெரியாழ் : ஆஹா! என்ன அற்புதம்... மாயச்சகடம் உடைத்து...மருது இறுந்து... ஆயர்களோடு போய்...

ஆநிரை காத்து... அணிவேயன் குழல் ஊதி... வித்தக னாய்...நின்ற கோபாலனுக்கு என் கோதை சூட்டிய பொன்னாரம்... மணி ஆரம்...சங்கத்தமிழ் முத்தாரம்... தலையாலே... சுமந்து ஏற்றித் தொழவேண்டிய ஒரு திவ்யப்பிரபந்தம்... என் பூமகள் சொன்ன முப்பது பாசுரங்களும் முப்பது ரத்தினங்கள்...கோபியர் நோன்பு நோற்றதனை... நம் ஆண்டாள் அனுசரித்து எழுதி யுள்ள ஆற்றலை எப்படித்தான் அளவிடுவது...!

இந்த பாசுரங்கள் படிப்போரும்... கேட்போரும் நற் பேற்றை அடைவர்! நாராயணனின் பேரருளால்... நன்மையுறுவர்... இந்த பாசுரங்களிலே வரும் கோபியர்... கண்ணனின் பொற்பாதங்களில் சரண டைந்து... மார்கழி நோன்பினை அனுஷ்டித்து... மாதவம் பூண்ட மங்கையர்கள்... இவர்கள் நோன்பிற் காக புலர்காலைப் பொழுது துயிலெழுந்து... கண்ண னின் திருமாளிகை சென்று கண்ணனை எழுப்பி... அவ னோடு... சேர்ந்து நோன்பு நோற்கின்றனர்... இறை வனை அணுக முடியாத ஆத்மா...அவனை அணுக முடி யாமல் தவித்திடும் துயரநிலை நீங்க... அவனுடன் ஆடிப்பாடி கூடி மகிழ்ந்து... அவனது திருவடியை அடைவதற்கு பாடி. பரவசம் கொள்வது போலாகும்... கோதை! நாளை ஆலயம் செல்வோம்... அவனது பாத கமலங்களில் உனது பாசுரங்களை சமர்ப்பித்து அங்கீகாரம் பெறுவோம்!

— திரை —



## காட்சி : 31

இடம் : கோவில் சந்நதி

கதாபாத்திரங்கள் : அர்ச்சகர்—பெரியாழ்வார்—கோதை

[எம்பெருமான் திருப்பாதத்தில் — பாசுரங்கள் வைக்கப்பட்டிருக்கிறது அர்ச்சகர் ஆராதனை செய்கிறார்—செய்த பிறகு ஏடும், புஷ்பமும் கோதையிடம் கொடுத்தல்- கோதை கண்களில் ஒற்றிக் கொள்ளுதல்]

பெரியாழ் : சுவாமி...! கோதை... என் புத்திரி என்பதற்காக நான் பெருமைப்பட்டுக்கொண்டு சொல்லவில்லை... மிக உயர்ந்த காவியத்தை என் கண்மணி... கனகமணி கட்டிகள் மாதிரி மிக உயர்வாக எழுதியிருக்கா... ஒவ்வொரு பாசுரங்களும் பரமபதத்தின் தேஜோ மயமான மணிமண்டபத்தின்... அணிமிகும் தூண்களைப் போன்றது.

அர்ச்சகர் : கோதை... தெய்வக் குழந்தை! அதிலும் தெய்வ அருள் பெற்ற பெரியழ்வார் பொற்பாவை அல்லவா...? பிறந்தது... திருப்பாற்கடல்! வளர்ந்தது எம்பெருமான் அணிமார்பில்... கோதை! ஒரு பாசுரத்தை பாடம்மா...

[கோதை பாடுதல்]

பாடல்

கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தா! உன்றன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறும் சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே யென்றனைய பலகலனும் யாமணிவோம்
ஆடையுடுப்போ(ம்) அதன்பின்னே பாற்சோறு

மூட நெய்பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்!

[பாடி முடிந்ததும்— கர்ப்பகிரஹத்தில் ஒளி தெரிகிறது அசரீரீ கேட்டது]

அசரீரீ : கோதை எழுதிய இக்காதை... திருப்பாவை என்று நாமம் பெறும்... என் மீது அவள் பாடிய இந்த பாசுரங்களை...யாம் அங்கீகாரம் செய்கின்றோம்... மாதங்களில் நான் மார்கழி... அந்த மார்கழி திங்களுக்கு பெருமைச் சேர்க்கும் கோதையின் பாசுரங்கள் கலியுகம் முடியும் வரை பக்தர்களுக்கு ஞானவழி காட்டும்... பகவத்கீதையாகத் திகழும்.

அர்ச்சகர் : இதைவிட வேறு என்ன வேண்டும்...? ஸ்ரீமந் நாராயணனே திருவாய் மலர்ந்து... நம் கோதையின் பாசுரங்களை... அங்கீகரித்து... அனுக்கிரஹித்தது எப்பேர்ப்பட்ட பாக்கியம்...!

கோதை : என் பாசுரங்களை அங்கீகரித்த எம் பெருமான் இந்த கோதையை அங்கீகரிக்கவில்லையே!

அர்ச்சகர் : கோதை... நீ பாடிய பாட்டின் பொருளிலே... நான் உனது ஆசையின் ஆழத்தைப் புரிந்து கொண்டேன்... உன்னோடு கூடாதாரை... வெல்லக்கூடிய குணங்கள் வாய்ந்த கோவிந்தா... என்று... விளித்து... இதுவரையில் பிரிந்திருந்த துக்கமெல்லாம் தீருமாறு நீயும்... நாங்களுமாகக் கூடியிருந்து... இன்பம் பெறுவோம்... என்று உனது இதய வேட்கையை உணர்த்திய போதே... உன் எண்ணத்தை நான் அறிந்தேன்!

பெரியாழ் : ஆம் சுவாமி...! என் கோதை... அந்த கோவிந்தனையே... கணவனாக வரித்துவிட்டாள்... அவனுக்கே மாலையிடுவேன்... என்று தவமிருக்கிறாள்... அவனையே தியானித்துக் கொண்டிருக்கிறாள்.

அர்ச்சகர் : கோதை உனக்கு மனம் போல் மாங்கல்யம் கிடைக்கும்!

—திரை—

## காட்சி : 32

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : கோதை—பெரியாழ்வார்—விரஜை

[கோதை கண்ணன் விக்ரஹத்தை வைத்துக் கொண்டு தனியாக பேசுகிறாள்]

கோதை : கண்ணா! நீலமேக சியாமள வண்ணா! இந்த எளியவள் உனக்கு ஈடானவள் தானா...? உனக்கு மாலையிடும் பேறு பெற்றவள் தானா...? இந்தக் கோதையை நீ கைத்தலம் பற்றுவாயா...? இருக்கும் இடம் தேடி வந்து... என்னை ஆட்கொண்டருள மாட்டாயா...? உன் அழகிற்கு ஈடான அழகு எனக்கு இருக்கிறதா...? கண்ணனுக்கு ஏற்றவள் தானா...?

[குவளையில் இருந்த பூமாலையை எடுத்து அணிந்து கொண்டு, கண்ணாடியில் பார்த்தல்—கிருஷ்ணன் விக்ரஹத்தை முகத்தோடு சேர்த்து வைத்துக் கொள்ளுதல்]

முகுந்தனுக்கு மாலையிடும் பேறு இந்த மங்கை நல்லாளுக்கு கிட்டும்... நான் அவனுக்கு ஈடான அழகை பெற்றவள்தான்... இத்தனை நாளும் மாலைகளை... அவன் புகழ்ப் பாடி தொடுத்தேன்... இனிமேல்... இந்த மாலைகளை நான் சூடிக்கொடுத்து அவனுக்கு அனுப்புகிறேன்... அவன் இம்மாலைகளை ஏற்றுக்கொண்டால்... என்னையும்... ஏற்றுக் கொள்ளட்டும்!

[மாலையைக் கழற்றி மீண்டும் குவளையில் வைத்தல்— பெரியாழ்வார் வருகிறார்.]

பெரியாழ் : கோதை! கண்ணனையும் பார்க்கிறாய்... கண்ணாடியில் உன்னையும் பார்க்கிறாய்...?

த : நான் கண்ணனுக்கு பொருத்தமானவள் 'னா... என்று என் முகத்தை கண்ணாடியில் பார்த் க்கொண்டேன்!

ரழ் : கண்ணாடி வேண்டாம்... கோதை! நீ அவ க்காகப் பிறந்தவள்தான்...! தகுந்த காலம் வந் 'ல்... உன் எண்ணங்கள் கைகூடும்...!

[குவளையை எடுத்துக் கொண்டு போகிறார்]

த : கண்ணா! மார்கழி நோன்பில் என்னையும்... ன் தோழியர்களையும்... கோபியர்களாகக்கொண்டு... னோடு கூடியிருந்து... விளையாடி மகிழ்ந்த பேரின் ்தை எழுதி... மனம் மகிழக் கண்டேன்... அடுத்து நம் தை மாதம்... மன்மதனுக்கு உகந்த மாதம்... ந்த மன்மதனை வேண்டி... திருவேங்கடமுடையா டன் சேர்ந்திட... விண்ணப்பிக்கப் போகிறேன்... ப்பெருமானைப் பிரார்த்திக்கும் விதத்தில்... மன்மத னயும் ஆராதித்து... என்னை அந்த பெருமானோடு... ர்த்து வைக்குவான் வேண்டுவதுபோல்... அந்த னந்தன் மீது பாசுரங்களை எழுதப்போகிறேன் அந்த சுரங்கள் சிற்றின்ப சுலோகங்கள்... இந்த நாச்சி 'ரின் திருமொழி! நாயகனுக்குத் தேன்மொழி!

[ஏடு எடுத்து எழுதுதல்... விரசை வருகிறாள்]

: என்னம்மா கோதை... என்ன எழுதுகிறாய்...?

த : அம்மா... இப்பொழுது தான் முதல் பாசுரம் ரம்பித்தேன்... படிக்கிறேன்... கேள்!

பாடல்

தயொரு திங்களுந் தரைவிளக்கித்
தண்மண் டலமிட்டு மாசிமுன்னாள்
ருண் மணற்கொண்டு தெருவணிந்
தழகினுக் கலங்கரித் தனங்கதேவா!

உய்யவு மாங்கொலோ வென்று சொல்லி
உன்னையு மும்பியை யுந்தொழுதேன்
வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கட வற்கென்னை விதிக்கிற்றியே!!

விரசை : பாசுரத்தின் விளக்கத்தை... நீ சொல்லி கேட்க நான் ஆசைப்படுகிறேன்!

கோதை : அம்மா...! என் மனதை... அந்த மன்மதன் மூலம் நந்தகுமாரனுக்கு சொல்லி அனுப்புகிறேன்... அம்மா! வெண்மையான நுண்ணிய மணல் கொண்டு... மன்மதன் வரும்வழி எல்லாம் அலங்கரித்து... கீழ் வானம் வெளுக்கும் முன்... நீராடி சமித்தனால் ஹோமத் தீ வளர்த்து... உன் மூலம் பயனுறுவதற்கு விரதம் அனுஷ்டிக்கப் போகிறேன்... அதற்காக மன்மதா! நீ எனக்குச் செய்ய வேண்டியது என்ன என்றால்... தேன் பெருகுகின்ற மலர் அம்புகளைத் தொடுத்துக் கொண்டு... கடல் நிற வண்ணனான என் கண்ணனின் திருநாமத்தை அம்பிலே எழுதி... பகாசுரனுடைய வாயைக் கிழித்து... மாய்த்த என் பெருமானை... அடைவதற்கான உபாயங்களைச் செய்வாயாக!

விரசை : ஒவ்வொருவரும் மானையும்... மயிலையும்... குயிலையும்... தூது விடுவார்கள்... நீ மன்மதனையே தூது அனுப்புகிறாய்...உனது இந்த திருமொழிக்கு மறுமொழி சொல்வார் எவருளார்... இந்த வையகத்தில்!... இத் தோடு...உன் ஏடும்... எழுத்தாணியும்...வைத்துவிட்டு... உனக்காக நறுநெய் சொட்ட சொட்ட... நான் செய்து வைத்திருக்கும் பொங்கலை அமுதுண்ண வா...!

கோதை : அம்மா... கண்ணனையே சர்வசதா காலமும்... நினைத்துக் கொண்டிருக்கும்... எனக்கு உணவு எதற்கு ..? உறக்கம் தான் எப்படி வரும்...?

விரசை : துரும்பா இளைச்சிட்டியே அம்மா... வயிற்றுக்கு எதுவும் இல்லாமல்... விரதம் வேறு... அனுஷ்டிக்கிறாய்... உடம்பிற்கு தெம்பு வேண்டாமா...?

கோதை : என் வெண்ணெய் உண்ட கண்ணனின் நாமம் தான் எனக்கு வெண்பொங்கல்... கண்களை மூடிக் கொண்டு... அவனோடு ஆனந்தமாக இருப்பதுதான்... எனக்கு நல்ல அமைதியான உறக்கம்... நான் அவன்மீது பாடுகின்ற பாசுரங்கள்தான்... பசலை பூத்த என் மேனிக்கு இதமான மருந்து!

விரசை : நீ சொல்வதை எல்லாம்... நான் ஒத்துக்கொள்கிறேன்... சுவர் இல்லாமல் சித்திரம் எழுத முடியாது... நாளைக்கு உனக்கு ஏதாவது நோய் என்று வந்தால்... நானும் உன் தந்தையும்... அதனைப் பார்த்து சும்மா இருப்போமா...? நீ இப்படி பிடிவாதம் பிடித்தால் உன்னோடு சேர்ந்து... நாங்களும் காற்றையும்... நீரையும் உட்கொண்டு அனுதினமும் உபவாசம் இருப்போம்.

கோதை : அம்மா!

விரசை : உனக்கு அம்மா வேணும்னா... முதல்லே... வெண் பொங்கல் சாப்பிடவா!

கோதை : சரி அம்மா!

— திரை —



## காட்சி : 33

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : கோதை—பெரியாழ்வார்

[கோதை குவளையில் இருக்கும் மாலைகளை அணிந்து கொண்டு கண்ணாடியில் பார்த்தல் — பாடுதல்]

கண்ண னென்னுங் கருந்தெய்வம்
காட்சி பழகிக் கிடப்பேனைப்
புண்ணிற் புளிப்பெய் தாற்போலப்
புறநின் றழகு பேசாதே
பெண்ணின் வருத்த மறியாத
பெருமா னரையிற் பீதக
வண்ண வாடை கொண்டென்னை
வாட்டந் தணிய வீசீரே!

கோதை : கண்ணா...இன்றைக்கு கோகுலாஷ்டமி... எல்லோரும் வீடுதோறும் உனது திருப்பாதங்களை கோலமிட்டு அழகு பார்ப்பர்... நீயும் அத்தனை பேர் வீட்டுக்கும் அருள் பாலிப்பாய்...ஒரே சமயத்தில் எத்தனையோ கோபிகாஸ்திரீகள் எண்ணத்தில் மலர்ந்தவன் அல்லவா...? நான் தேன தமிழ் பாக்களால் உன் சுந்தர உருவத்தையே... என் இதயத்தில் கோலமிட்டுள்ளேன்... நீ என் நெஞ்சம் முழுதும் நிறைந்திருப்பவன் அல்லவா...? என் வாட்டத்தை போக்கிட வருவாய் கண்ணா! நான் சூடிக்கொடுத்த மாலைகளை...நீ ஏற்று மகிழ்கிறாய்... நீ சூடிய மாலையை... எப்பொழுது என் கழுத்தில் சூட்டப்போகிறாய்...

[பெரியாழ்வார் வருகிறார்—மாலையும் கழுத்து மாக இருக்கும் கோதையைப் பார்த்து திடுக்கிடு கிறார்]

பெரியாழ் : அபச்சாரம்! அபச்சாரம்! கோதை... என்ன காரியம் செய்து விட்டாய்...? பரந்தாமனுக்கு சாத்த வேண்டிய மாலைகளை... நீ அணிந்து கொண்டாயே... இது தகுமா...? முறையா?... இப்படி... எத்தனை நாட் களாக செய்கிறாய்...? அதுவும் இன்று கோகு லாஷ்டமி! கண்ணன் பிறந்த நாளன்று உன்னால் அவ னுக்கு இப்படி ஒரு களங்கமா...?

கோதை : எப்படியப்பா அபச்சாரம் என்று சொல்கிறீர் கள்...? சபரி ஸ்ரீராமனுக்கு எச்சில் பழத்தைக் கொடுக்கவில்லையா...? ஸ்ரீராமரும்... அதனை அமுது செய்யவில்லையா...?

பெரியாழ் : ஸ்ரீராமர் மனிதர்... வடபத்ரசாயி அர்ச்ச வடிவில் கோவில் கொண்டிருக்கும் பெருமான்!

கோதை : ஜீவாத்மா...பரமாத்மா... என்ன வேறுபாடு?

பெரியாழ் : கோதை! நீ செய்த தவறுக்கு எப்படிப்பட்ட விளக்கங்கள் சொன்னாலும்... நான் ஏற்றுக் கொள் ளும் நிலையில் இல்லை... குற்றம்... குற்றம்தான்!

கோதை : எப்படி அப்பா குற்றமாகும்...? அப்படியே... நான் செய்தது தவறாக இருந்தாலும் தெய்வம் பொறுத்துக் கொள்வார்... தண்டிப்பவருக்குப் பெயர் தெய்வம் என்றாகாதே!

பெரியாழ் : உன் வேதாந்த விளக்கங்கள் இனியும் எனக்கு வேண்டாம்!

கோதை : வாதம் புரியவில்லை தந்தையே!

பெரியாழ் : நீ மாலையும் கழுத்துமாகவே இரு... நான் வேறு மாலைகளை தொடுத்துக் கொண்டு போய்... கோவிலுக்கு சமர்ப்பிக்கின்றேன்.

[பெரியாழ்வார் வேதனையோடு பாடுகிறார்]

செண்பக மல்லிகையோடு
செங்கழுநீர் இருவாட்சி
எண் பகர்பூவும் கொணர்ந்தேன்
இன்று இவை சூட்டவா என்று
மண் பகர் கொண்டாளை ஆய்ச்சி
மகிழ்ந்து உரை செய்த இம்மாலை
பண் பகர் வில்லிபுத்தூர்க்கோன்
பட்டாபிரான் சொன்ன பத்தே!

பெரியாழ் : இப்படி பாமாலையும்... பூமாலையும் தொடுத்த நான்... உனக்கு பெரும் அபச்சாரம் செய்தது போலானதே! இதற்கு நான் என்ன பரிகாரம் செய்வேன்...? எப்படி பரிகாரம் தேடுவேன்... எங்கே என்று பரிகாரம் தேடுவேன்...? இதோ வந்து விட்டேன்... உன் பங்கஜ மலர்ப்பாதங்களை என்கண்ணீரால் நனைக்கிறேன்... அதுவே என் மகள் செய்த இந்த பாபத்துக்கு பிராயச்சித்தம்!

[பெரியாழ்வார் போகிறார்]

கோதை : கண்ணா! உனக்கு அபச்சாரம் செய்ததாக எனக்கு தோணலை... நீ கனவில் காட்சி தந்தபோது கூட... நான் சூடிக்கொடுத்த மாலையைத் தானே அணிந்திருந்தாய்... நான் எத்தனை வாத்ஸல்யத்துடன் உனக்கு மாலை கொடுத்தேன் என்பதனை உணராமல் என் தந்தை... இப்படி என்னை ஏசிவிட்டு போகிறாரே... நீதான் அவரது கண்களைத் திறக்கவேண்டும்!

—திரை—



## காட்சி : 34

இடம் : கோவில் சந்நிதி

கதாபாத்திரங்கள் : அர்ச்சகர்—பெரியாழ்வார்

[பெரியாழ்வார் மாலையை அர்ச்சகரிடம் கொடுத்தல்]

அர்ச்சகர் : சுவாமி! இன்றைக்கு... இந்த மலர்மாலைகளில் அத்தனை வாசனை இல்லையே... என்ன காரணம்...? தினமும் தாங்கள் கோபுரவாசல் வரும் போதே... கர்ப்ப கிரஹத்தில் பூ மணம் கமழும்... இன்று கையில் வாங்கிய பிறகும் வாசனையைக் காணோமே!

பெரியாழ் : அப்படி எல்லாம் ஒன்றுமில்லையே... என்றும் போல் தான் இன்றும் மலர் பறித்தேன்... மாலை தொடுத்தேன்!

[அர்ச்சகர் மாலையை சாற்றுகின்றார்—மாலை பகவான் கழுத்திலிருந்து கீழே விழுதல்—பெரியாழ் வார் திடுக்கிடுகிறார்—பாடுகிறார் — அர்ச்சகர் மீண்டும் மாலை சாற்றுதல்]

என் குற்றமே என்று சொல்லவும் வேண்டா : காண்
என்னை நான் மண் உண்டேனாக
அன்புற்று நோக்கி அடித்தும் பிடித்தும்
அனைவர்க்கும் காட்டிற்றிலையே!
வன்புற்று அரவின் பகைக் கொடி வாமன
நம்பீ! உன் காதுகள் தூறாம்;
துன்புற்றன எல்லாம் தீர்ப்பாய், பிரானே!
திரியிட்டுச் சொல்லுகேன் மெய்யே!!

பெரியாழ் : கண்ணா... என்கோதை... சின்னக்குழந்தை! அவள் உன்னையே நினைத்து உருகும் பேதை! அவளது

## காட்சி : 35

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்-எம்பெருமான்-விரசை கோதை

[பெரியாழ்வார் உறங்கிக் கொண்டிருத்தல்-புல்லாங் குழல் இசை-ஸ்ரீமந் நாராயணன் சங்கு, சக்ர கதாபாணியாக காட்சி தருகிறார் - பெரியாழ்வார் எழுந்து நமஸ்கரித்தல்]

பெருமான் : அன்ப! கோதை சூடிக் கொடுக்கும் மாலைகளே ...எமக்கு பெருமை சேர்ப்பது... அம்மாலைகளே எமக்கு உகந்தது... உல்லாசம் தருவது... கோதை எனக்குச் சூடிக் கொடுத்த சுடர்க்கொடி நாச்சியார்... அவள் என் பரமபக்தை... அவளால் எனக்கு எவ்வித அபச்சாரமும் நேர்ந்து விடவில்லை...

[பெருமான் மறைகிறார்—பெரியாழ்வார் கனவு கலைந்து எழுதல்]

பெரியாழ் : கோதை! கோதை!

[உள்ளிருந்து கோதையும், விரசையும் எழுந்து வருகின்றனர்]

விரசை : என்ன சுவாமி! என்ன நடந்தது...? பொழுது புலரப் போகும் இந்த விடியல் வேளையில்... கோதை என்று எதற்காக கத்தினீர்கள்...? கனவு கண்டீர்களா...

பெரியாழ் : கோதை... என்னை மன்னித்து விடு... உன் பக்தியும்... பரமன் உன் மீது கொண்டுள்ள அன்பும்...

எப்பேர்ப்பட்ட வைபவம் மிக்கது என்பதனை... இந்த எளியவன் அறியாது போனேனே! ஸ்ரீமந் நாராயணன் என் கனவிலே எழுந்தருளி, ''கோதை சூடிக் கொடுக்கும் மாலைகளே... என் மனதுக்கு உகந்தது'' என்று திருவாய் மலர்ந்தார்...நீ சாதாரண மானிட பெண்ணல்ல... அந்த பூமிதேவியாரின் அவதாரம். பகவானுக்கு மாலை சூடிக் கொடுத்து... பெருமை பூண்ட உன்னை... சூடிக் கொடுத்த சுடர்க்கொடி நாச்சியார்... என்று குவலயம் கொண்டாடும்... என்று திருவாய் மலர்ந்தருளினார் எம்பெருமான்! பரந்தாமனையே ஆட்கொள்ளும் உன்னை... இனி ஆண்டாள்... என்று பக்தர் உலகம் போற்றிப் புகழ் மாலை சூடும்... நான் மாலைகளை தொடுத்துக் தொடுத்தேன்... மகிமை இல்லை... நீ சூடிக் கொடுத்தாய்... என் பெருமான் கோடி இன்பம் பொங்க... அவைகளை ஏற்றுக் கொண்டான்... கோதை... நான் உனக்குத் தந்தையாக இருக்கலாம்... ஆனால்... நீ தான் எனக்குத் தாய் தந்தை குரு எல்லாம்... கோதை... நாளை முதல் மாலைகளை நீ சூடிக் கொடு... நான் அதனை... வடபத்ரசாயிக்கு பாடிக் கொடுக்கிறேன்.

கோதை : தந்தையே! என்னை நீங்கள் வெகுவாகப் புகழ்கிறீர்கள்... அதற்கெல்லாம் தகுதி இல்லாதவள் நான். ஸ்ரீமந்நாராயணனின் பரிபூரண பேரருளைப் பெற்றவர் தாங்கள்...! பரந்தாமனையே குருவாகக் கொண்ட பெரும் பாக்கியசாலி தாங்கள்! உங்களால் பாடப் பட்ட திவ்யபிரபந்தங்கள் ஒன்றே போதுமே... உங்கள் பக்தியை பறை சாற்றுவதற்கு!

விரசை : நீங்கள் இரண்டு பேருமே... போற்றப்பட வேண்டிய பரம பக்தர்கள்! பொழுது புலருவதற்கு இன்னும் சிறிது நேரம் தான் இருக்கிறது... நீராடி வரலாம்!

பெரியாழ் : நாம் மூவருமே சென்று... நந்தவனத்திலிருந்து நிறைய பூபறித்து... தொடுத்து கோவிலுக்கு எடுத்துச் செல்லலாம்.

விரசை : கோதைக்கு அணிந்து அழகு பார்த்து... எடுத்துச் செல்வோம் என்று சொல்லுங்கள்.

—திரை—



## காட்சி : 36

இடம் : பெரியாழ்வார் இல்லம்

*கதாபாத்திரங்கள் : கோதை — தோழி 1 — தோழி 2 — கண்ணன்—பெரியாழ்வார்*

*[கோதை உறங்கிக் கொண்டிருத்தல்— அவள் கனவு காண்பதனை நிழற் காட்சியில் காண்பிக்கின்றோம்—புல்லாங்குழல் ஓசை— கண்ணன் வருதல்— கோதை கண் விழித்தல்]*

கோதை : *கண்ணா... வந்துவிட்டாயா? இந்த அபலையின் குரல் உனது திருச்செவிகளில் விழுந்ததா...? மன்மதன் ...கரும்பு வில்லில் உனது மனதை இளகச் செய்தானா? நான் சூடிக்கொடுத்த மாலையை நீ ஏற்றுக் கொண்டாயா...?*

கண்ணன் : *மாலையை மட்டுமா...? உன்னையும் ஏற்றுக் கொள்ளத்தான் வந்தேன்... உன் பாவை நோன்பு என்னை உனக்கு சொந்தமாக்கி விட்டது... உன்னால் இயற்றப்பட்ட பாசுரங்கள் ஒவ்வொன்றும் பரலோகத்து பாரிஜாத விருக்ஷத்தில் பூத்துக் குலுங்கும் புது மலர்கள் போல் இன்பமணம் வீசுகிறது... கோதை! எனக்காக...நீ எப்பேர்ப்பட்ட அலங்காரங்களைச் செய்திருக்கிறாய்... பூரண பொற்கும்ப கலசங்கள் வைத்து... வேதம் முழங்க... கீதம் இசைக்க... வாத்தியங்கள் ஒலி முழங்க...என்னை எதிர்கொண்டழைத்த உனது அபரிதமான பக்திக்கு அளவே கிடையாது!*

கோதை : *பரந்தாமா; ஆயிரம் யானைகள் சூழ— தேவர்கள்... முனிவர்கள் புடைசூழ வந்த உன்னை... இன்னும்*

கோலாகலத்துடன் வரவேற்க வேண்டாமா...? இதுகூட செய்யவில்லை என்றால்... நானும் உன் பக்தை என்று சொல்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது...?

கண்ணன் : இந்த வில்லிபுதூரை... எத்தனை அழகாக அலங்கரித்திருக்கிறாய்? வில்லிபுதூர் கோவிலில்... என் கோதை தேவகானம் இசைக்கும் ஓர் சுந்தர பூங்குயில்!

[கோதை கண்ணனை ஆசனத்தில் அமரச்செய்து— வலம் வந்து நமஸ்கரித்தல்— பாதத்தை திருமஞ்ச னம் செய்தல்— புஷ்பங்களை அர்ச்சிக்கிறாள்]

கோதை : கார் வண்ண மேனி! நவரத்ன கிரீடம்... மகர குண்டலங்கள்... கௌஸ்துப வன மாலைகள்... புல்லாங் குழல்... பட்டு பீதாம்பரம்... உன் அழகை பார்த்துக் கொண்டே இருக்கலாம்... கண்ணா...! நீ என்னை எப் பொழுது திருமணம் செய்து கொள்ளப் போகிறாய்?

[கண்ணன், கோதையை கையைப் பற்றி மகிழ்தல்]

கோதை : கண்ணா! எப்பொழுது நம் திருமணத்தை வைத்துக் கொள்ளலாம்...?

கண்ணன் : என்னை மணம் புரிவதற்கு... நீ அங்கு வர வேண்டும்.

கோதை : அங்கே... என்றால் எங்கே...?

கண்ணன் : குடதிசை முடியை வைத்து... குணதிசை பாதம் நீட்டி... வடதிசை பின்பு காட்டி... தென்திசை இலங்கை நோக்கி... அரவணைத்துயில் கொள்ளும் அரங்கமா நகரத்துக்கு வரவும்... நான் போய்வரு கிறேன்!

[கண்ணன் மறைகின்றான்— மேடையில் இருள்— மீண்டும் ஒளி— தோழியர் இருவரும் கட்டிலருகே நிற்கின்றனர்— கோதை துயில் எழுதல்]

கோதை : கண்ணா... கண்ணா... என்னை விட்டு எங்கே ஓடிப் போகிறாய்...? கண்ணா!

[தோழியை கோதை கட்டிக் கொள்கிறாள்]

என்ன... நான் கண்டது கனவா...? நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்...?

தோழி 1 : கண்ணா... கண்ணா என்று கத்தினாயே... அதற்கு முன்பே வந்துவிட்டோம்!

கோதை : நான் கண்ணனோடு பேசிக்கொண்டிருந்ததை நீங்கள் பார்த்தீர்களா...?

தோழி 2 : நன்றாகச் சொன்னாய்... எங்களுக்கு நினைவிலேயே வராத கண்ணன்... கனவிலே ஏன் வரப் போகிறான்?

தோழி 1 : கோதை... உனக்கு கண்ணன் கனவிலே வருவான் .. கதை சொல்லுவான்... உன்னோடு சல்லாபம் கொள்வான்... எங்களுக்கு கனவில்... பசுமாடும்... எருமை மாடும்தான் வரும்.

[மூவரும் சிரித்தல்]

கோதை : என் கண்ணன் கனவில் வந்தான்... அதுவும் எப்படி வந்தான் தெரியுமா...?

(கோதை பாடுகிறாள்)

வாரண மாயிரஞ் சூழ வலஞ்செய்து
நாரண நம்பி நடக்கின்றா னென்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான்!

கோதை : ஆயிரம் யானைகள் மத்தியில்... ஓர் வெள்ளை யானையில் பவனி வந்த நாரணன் என்னைத் தழுவினான்... என் பாசுரங்களைப் புகழ்ந்தான்... என் அழகைப் புகழ்ந்தான்... என்னையே மணம் புரிந்து கொள்வேன் என்று கைத்தலம் பற்றிச் சொன்னான்.

தோழி 1 : அப்புறம்...?

கோதை : மறுநாள் எனக்கும் அவனுக்கும் திருமணம்... நாங்கள் இருவரும் அலங்காரம் பொங்க... மணவறையில் கூடினோம்... என் தலைவன் சிங்கம்போல் வீறு நடை போட்டு வந்தான்... பெரிய பிராட்டியாரின் நாயகன்... ஆவினம் காக்கும் கோபாலன்... அழகின் அவதாரமாக வந்தான்... எனக்கு துர்க்கை கூறப் புடவை உடுத்தி... நறுமலர் மணமாலை அணிவித்த பேரழகைத்தான் என்னென்பேன்... அஷ்டதிக்குகளிலிருந்தும் திருமஞ்சனநீர் கொண்டு வந்து எங்களுக்கு புரோக்ஷித்தார்கள்... என் நாயகன் எனக்கு கங்கண நாண் கட்டி... ரக்ஷாபந்தனம் செய்தான்...

தோழி 2 : அப்புறம்...?

கோதை : மத்தளம் கொட்ட... வரி சங்கம் முழங்க... முத்து மாலைகளின் வரிசைகள் தாழ்ந்த பந்தலின் கீழ்... என் கண்ணன் என்னை பாணிக்கிரஹணம்செய்து கொண்டான்.

தோழி 1 : நீ கொடுத்து வைத்தவள் கோதை... அப்புறம் கனவிலே... என்னென்ன காட்சிகளை கண்டாய்...?

கோதை : எங்கும் புருஷஸூக்தம் ஒலிக்கிறது...என் மதுசூதனன் என் மென் கரம் பற்றி... அக்னியை வலம் வந்தான்... கட்டை விரலை சுவைத்துக் கொண்டு ஆலிலை துயிலும் கண்ணன் என் கால் கட்டைவிரலை பிடித்து... அம்மி மீது வைத்து... அருகே நின்றிருந்த அருந்ததியைப் பார்க்கச் செய்தார்...இதெல்லாம் முடிந்ததும்... நானும் கண்ணனும்... வெள்ளையானை மீது பவனி வந்தோம்...

[பெருமூச்சு விடுகிறாள்; கோதை]

தோழி 2 : ஏண்டி பெருமூச்சு விடறே...?

கோதை : இப்படி எல்லாம் நடக்கும்... நடக்கணும்னு கனவு கண்டேன்... ஆனா...என் கண்ணன்... என்னை கனவிலே ஏமாற்றிவிட்டு ஓடிவிட்டான்.

தோழி 1 : பகலில் காணும் கனவு நினைவாகும்!

கோதை : அப்படி நினைவானால்... உங்கள் வாய்க்கு சர்க்கரை நிச்சயம்!

[பெரியாழ்வார் வருகிறார்]

பெரியாழ் : எல்லோரும் ஒரே சந்தோஷமாக இருக்கிறீர் கள்...?

தோழி : 1 கோதை... கனவிலே கண்ணனைக் கண்ட கதை யைப் பற்றி சொல்லிக் கொண்டு இருக்கிறாள்.

பெரியாழ் : இந்தாம்மா... கோவில் பிரசாதம்!

[பெரியாழ்வார் பூ, பழம் கொடுக்க கோதையும் தோழி யரும் எடுத்துக் கொள்ளுதல்]

பெரியாழ் : கோதை! இப்பொழுதெல்லாம்... நாம் கொடுக்கும் பூமாலைகள் மிகவும் மணம் வீசுகிறது... அதற்கான காரணம் நீ சூடிக் கொடுக்கும் வைபவம் தான்!

கோதை : தந்தையே...! நான் கண்ணனை கனவிலே கண்டதனையும்... அவன் என் கைத்தலம் பற்றிய தையும்... பின்னர் என்னை விட்டுச் சென்றதையும் ஏட்டில் எழுதப் போகிறேன்.

பெரியாழ் : அப்படியே...! மிக்க மகிழ்ச்சி!

—திரை—



## காட்சி : 37

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார், கோதை

[தந்தையும் மகளும் குவளையில் இருக்கும் பூக்களை பிரித்துக் கொண்டிருத்தல்]

பெரி : ஏம்மா கோதை... நீ மனத்திலே வரித்து விட்ட அந்த மணாளன்... மணிவண்ணன்... மாயவன், முகுந்தன் நூற்றெட்டு திவ்யதேசங்களிலும் கோவில் கொண்டுள்ளான்... நீ எந்த தேசத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாளை... நாயகனாக கைத்தலம் பற்றக் கருதி உள்ளாய்...?

கோதை : தந்தையே! நூற்றெட்டு திவ்ய தேசங்களில் கோவில் கொண்டுள்ள எம் பெருமான்களின் திவ்ய மங்கள மகிமைகளைப்பற்றி... நீங்கள் எடுத்துச் சொல்ல- நான் கேட்க ஆசைப்படுகிறேன்...

பெரி : கோதை... சொல்கிறேன்...அந்த புருஷோத்தமனின் பெருமைகளை நாளெல்லாம் சொல்லிக்கொண்டே இருக்கலாம்... அதில் தானம்மா... நமக்கு பேரானந்தம்... பெருமிதம்! பூரிப்பு...!

[பெரியாழ்வார் சொல்ல ஆரம்பிக்கிறார்]

பெரி : ஓம்... நமோ நாராயணா... நமோ நாராயணா...

ச்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ
ஸ்மரணம் பாத சேவநம்
அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம்
ஸக்யம் ஆத்ம நிவேதனம்

இதிபும்ஸா அர்பித விஷ்ணோ
பக்தி : சேத நவலக்ஷ்ணா

விஷ்ணுவின் புகழை செவிக்குளிர கேட்பது...அவனுடைய கல்யாண குணங்களை வாயாரப் பாடுவது... அவனது திருநாமத்தை மனதார நினைப்பது... அவனுக்குத் திருத்தொண்டு செய்வது... அவனை புஷ்பத்தால் அர்ச்சிப்பது... அவனது பாத பங்கஜங்களை தலையால் தொழுது பணிந்து மெய்யுருகுவது... அவனுக்கு அடிமை பூண்டு வாழ்நாளை கழிப்பது... இதுதானேம்மா இம்மைக்கும் மறுமைக்கும்... நாம் சேர்த்து வைக்கும் நிலையான செல்வங்கள்...

கோதை : அப்பா... நீங்கள் ஒவ்வொரு திருநாமங்களாக சொல்லிக் கொண்டே வாருங்கள்...நான் ஒவ்வொரு மலராக போட்டுக் கொண்டே வருகிறேன்.

பெரி : நல்லதம்மா... ஓம் ஸ்ரீ ரெங்கநாச்சியார் ஸமேத ஸ்ரீரங்கநாதபெருமான்—

[கோதை பூவை போடுகிறாள்]

வாஸலக்ஷ்மி சமேத அழகியமணவாளன்—செங்கமலவல்லி சமேத நீலமேகப்பெருமான்—அழகியவல்லி சமேத திருவடிவழகிய நம்பி—பூர்வாதேவி சமேத புருஷோத்தமன்—பங்கஜசெல்வி சமேத புண்டரீகாக்ஷன் —பொற்றாமரையாள் சமேத வல்லிராமாயன்— கமலவல்லித்தாயார் சமேத அப்பக்குடத்தான்—ஸ்ரீரங்க நாயகி சமேத ஆண்டளக்குமையன்—

ஸ்ரீ செங்கமலவல்லித்தாயார் சமேத ஆமருவியப்பாயன்— திருமாமகள் நாச்சியார் சமேத அருள்மாக்கடலோன்—ஸாரநாயகி சமேத ஸாரநாதன்—

கோதை : பன்னிரண்டு...

பெரி : தலைச்சங்கநாச்சியார் சமேத நாண்மதியன்— கோமளவல்லித்தாயார் சமேத சாரங்கபாணி—கமல

வல்லி நாச்சியார் சமேத அரன்சாபந்தீர்த்தான்—பூமி தேவி நாச்சியார் சமேத உப்பிலியப்பன்—கண்ணபுர நாயகி சமேத சௌரிராஜான்—அம்ருதகடவல்லி சமேத வயலாளிமணவாளன்—

ஸ்ரீ சௌந்தர்யவல்லி சமேத சௌந்தர்யராஜன்—நம்பிக்கைநாச்சியார் சமேத நம்பிமூர்த்தி—செண்பக வல்லி சமேத விண்ணகர ஜகந்நாதான்—சாபவிமோசன வல்லி சமேத சுகந்தவளநாதான்—புண்டரீகவல்லி சமேத கோவிந்தராஜன்--மட்டவிழுங்குழலி சமேத தாடாளான்—பத்மாஸனவல்லி சமேத வையங்காத்த பெருமான்—அரவிந்தவல்லி சமேத சியாமள மேனியன்—அபிஷேகவல்லித்தாயார் சமேத பக்தவத்ஸலன்—

ஸ்ரீரமாமணிவல்லி சமேத கஜேந்திர வரதன்—மரகத வல்லித்தாயார் சமேத கோலவில்லிராமன்—புண்டரீக வல்லி சமேத நந்தாவிளக்கு பெருமான்—வைகுந்தவல்லி சமேத வைகுந்த நாதன்—அமிர்தகடவல்லி சமேத குடமாடு கூத்தாயன்—கடல்மகள் நாச்சியார் சமேத தெய்வநாயகன்—புருஷோத்தமநாயகி சமேத புருஷோத்தமன்—அல்லிமாமலர் நாச்சியார் சமேத பேரருளாளன்—செங்கமலவல்லி சமேத செங்கண்மால்—

கோதை : முக்கனிசாறாக இனிக்கும் முப்பத்தாறு திவ்ய தேசம் ஆயிற்று... அடுத்து...

ஸ்ரீதிருமாமகள் நாச்சியார் சமேத மணிக்கூட நாயகன்—செங்கமலநாச்சியார் சமேத கோபால கிருஷ்ணன்—பூவார்திருமகள் நாச்சியார் சமேத கண்ண நாராயணன்—தாமரைநாயகி சமேத தாமரையாள் கேள்வன்—சுந்தரவல்லி நாச்சியார் சமேத ஸௌந்திரராஜன்—திருமாமகள் நாச்சியார் சமேத சௌம்ய நாராயணன்—உய்யவந்தாள் சமேத ஸத்யகிரிநாதன்—கல்யாணவல்லி சமேத கல்யாண ஜெகந்நாதன்—அன்னநாயகி சமேத அப்பன்—

ஸ்ரீமோஹனவல்லி சமேத காளமேகப் பெருமான்—மதுரவல்லி நாச்சியார் சமேத வீயுக சுந்தரராஜன்—ஆண்டாள் சமேத வடபத்ரஸயன ரங்கமன்னனார்—

கோதை : தந்தையே! எளியவளுக்கு ஏற்றவர் வடபத்ர சாயி என்று தீர்மானித்து விட்டீர்களா?

பெரி : நீ சூடிக் கொடுத்த மாலைகளை அந்த மால் வரையன் ஏற்றுக் கொண்டான் அல்லவா...அதனால் தான்...

கோதை : உங்கள் விருப்பப்படி என்னோடு...அந்த நாரணன் நம்பி நாற்பத்தெட்டு திவ்ய தேசங்களில் சேவை சாதிக்கிறார்...

பெரி : நாற்பத்து ஒன்பது...ஆதிநாதவல்லி சமேத ஆதி நாதப்பெருமான்—கருந்தடங்கண்ணி சமேத தேவ பிரான்—ஸ்ரீவரமங்கை நாச்சியார் சமேத தெய்வ நாயகன்—மலர்மகள் நாச்சியார் சமேத காய்ச்சின வேந்தன்—குழைக்காதுவல்லி சமேத மகரநெடுங்குழைக் காதன்—வைகுந்தவல்லி சமேத கள்ளப்பிரான்—

வரகுணவல்லி சமேத விஜயாஸன்—குளநாதை வல்லி சமேத மாயக்கூத்தாரன்—குறுங்குடிவல்லி சமேத வைஷ்ணவநம்பி—கோனார்வல்லி சமேத வைத்தமா நிதிப்பெருமான்—ஸ்ரீஹரிலக்ஷ்மி சமேத அனந்தபத்ம நாபன் — கமலவல்லிநாச்சியார் சமேத திருக் குறளப்பன்—பெருஞ்செல்வநாயகி சமேத காட்கரை யப்பன்—மதுரவேணி நாச்சியார் சமேத திருமூழிக் கழத்தான்—பொற்கொடி நாச்சியார் சமேத மாயப் பிரான்—

ஸ்ரீசெங்கமலவல்லி சமேத இமயவரம்பன்—மலர் மங்கை நாச்சியார் சமேத நாராயணன்—திருக்கொ ளுந்து நாச்சியார் சமேத கோலப்பிரான்—கமலவல்லி நாச்சியார் சமேத பாம்பணையப்பன்—மரகதவல்லி

நாச்சியார் சமேத ஆதிகேசவன்—வித்துவகோட்டுவல்லி
சமேத உய்யவந்த பெருமான்—பத்மாஸநநாச்சியார்
சமேத திருக்குறளப்பன்—கற்பகவல்லித்தாயார் சமேத
அற்புதநாராயணன்—வைகுண்ட நாயகி சமேத
தெய்வநாயகப்பெருமான்—

கோதை : என் நாயகனின் எழுபத்தி இரண்டாவது தேசம்...

பெரி : பூங்கோவல் நாச்சியார் சமேத திரிவிக்ரமன்—
பெருந்தேவித்தாயார் சமேத பேரருளாளன்—அலர்மேலு
மங்கை சமேத ஆதிகேசவன்— மரகதவல்லித்தாயார்
சமேத தீபப்பிரகாசன் — வேளுக்கைவல்லி சமேத
முகுந்தநாயகன்— ருக்மணிசத்யபாமாதேவி சமேத
பாண்டவதூதன்— நிலமங்கைவல்லி சமேத ஜகதீசப்
பெருமாள்— நேரொருவல்லிசமேத நிலாத்திங்கள்
துண்டத்தான்—அமுதவல்லிநாச்சியார் சமேத உல
களந்தான்—

கோமளவல்லி சமேத சொன்ன வண்ணஞ் செய்த
வன்— பத்மாமணி நாச்சியார் சமேத கருணாகரப்
பெருமான்— கமலவல்லிநாச்சியார் சமேத கள்வர்
பிரான்— அஞ்சிலை நாச்சியார் சமேத ஆதிவராகப்
பெருமாள்— பவளவல்லி சமேத பவளவண்ணப்
பெருமான்— வைகுந்தவல்லி சமேத பரமபதநாதன்—
மரகதவல்லி நாச்சியார் சமேத விஜயராகவன்—

பெரியாழ் : எண்திசை போற்றும் மணிவண்ணப் பெருமா
னின் எண்பத்து எட்டாவது திவ்ய தேசம்... அடுத்து
எண்பத்து ஒன்று... என்னைப் பெற்ற தாயார் சமேத
பக்தவத்ஸலன்— கனகவல்லித் தாயார் சமேத வீரராக
வன்—அணிமாமலர் மங்கை சமேத நீலமுகில்வண்ணன்
—கோமளவல்லித் தாயார் சமேத நித்திய கல்யாணன்—
நிலமங்கை நாச்சியார் சமேத தலசயநத்துறைவன்—
ருக்மணிப் பிராட்டி சமேத வேங்கடகிருஷ்ணன்—
அமிர்தவல்லி சமேத யோகநரஸிம்ஹன்—அலர்மேலு

மங்கைத் தாயார் சமேத திருவேங்கடன்—லக்ஷ்மிநாச்சியார் சமேத நரஸிம்ஹன்—சீதா பிராட்டி சமேத ரகு நாயகன்—ஸ்ரீ ஹரிலக்ஷ்மி சமேத தேவராஜன்—

ஸ்ரீ தேவிநாச்சியார் சமேத ஸ்ரீமூர்த்தன்— நூறு... அரவிந்தவல்லி சமேத பத்ரி நாராயணன்— புண்டரீக வல்லி சமேத நீலமேகப் பெருமான்— பரிமளவல்லி நாச்சியார் சமேத பரமபுருஷன்... கல்யாணநாச்சியார் சமேத கல்யாண நாராயணன்—சத்தியபாமை சமேத கோவர்த்தநேசன்— ருக்மணிஸத்யபாமா சமேத நவமோஹனகிருஷ்ணன்—கடல்மகள் நாச்சியார் சமேத க்ஷிராப்திநாதன்— ஸ்ரீபெரியபிராட்டியார் சமேத பரம பதநாதன் நூற்றுஎட்டு...

கோதை : நாராயணன் நாம வைபவங்களைக் கேட்டு மகிழ்ந்தேன்...

பெரி : உனக்கு... ஒவ்வொரு தேசத்து எம்பெருமான் களின் வைபவத்தைச் சொல்லும் புண்ணிய சரித்திரத்தை... விவரமாகச் சொல்கிறேன்... அதன் பிறகு நீ யாரை மணக்க விரும்புகின்றாய்... என்பதனைக் கூறிடுவாய்...

கோதை : ஆகட்டும் தந்தையே...!

ஆமையாய்க் கங்கையாய் ஆழ்கடலாய்
அவனியாய் அரு வரைகளாய்
நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த்
தக்கணையாய்த் தானும் ஆனான்
சேமம் உடை நாரதனார் சென்றுசென்று துதித்து
இறைஞ்சக் கிடந்தான் கோயில்
பூ மருவிப் புள்இனங்கள் புள்அரையன் புகழ்குழறும்
புனல் அரங்கமே!

பெரியாழ் : இப்பேர்ப்பட்ட புகழ் மணக்கும் அரங்கன் திருக்கோயில்... ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய க்ஷேத்திரங்களில்

முதன்மையாகக் கருதப்படுகிறது... இங்கு ஸ்ரீரங்கன் பெரிய பெருமாள்—நம் பெருமாள்... அழகிய மண வாளன் ஸ்ரீரங்கநாயகி சமேதராய்க் கோயில் கொண்டுள் ளான்... ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு கிடைக்கப் பெற்ற ஒப்பற்ற திவ்ய க்ஷேத்ரம்... அதற்கு காரணம் இது ஒரு ஸ்வயம் வ்யக்த க்ஷேத்ரம்...

திருவின் அரங்கம் திருவரங்கம்... மகாலக்ஷ்மியே இத் திருக்ஷேத்ரத்தில் அரங்கம் ஏறி ஆடினாள் என்பது புராணம்... திருவரங்கத்தான் தானே விரும்பி எழுந் தருளி பக்தர்களை பரிபாலிக்கும் புண்ணிய க்ஷேத்ரம்... ஓங்கார பிரணவத்தின் அமைப்பைக் கொண்ட மிகப் புனிதமான ப்ரணவாக்ருதி விமானத்தின் உள்ளே அரங்கன் யோகசயனத்தில் பள்ளிக் கொண்டிருக்கும் இந்த அழகைக் காணக் கண் கோடி வேண்டும்...

அலைகடல் வெள்ளம்போல் பொங்கி வரும் பக்தர் களுக்கு அருள் மழை பொழியும் அரங்கன் திருவடிக்கு நிகர் ஏது...? அரங்கனின் திருவடி தரிசனமும்... திருமுக தரிசனமும்... பெற்று வாழும் பக்தர்க்கு எடுக்கின்ற பிறவியில் எல்லாம் புண்ணிய பலனே கிட்டும்... திருப் பாற்கடலில் அனந்தனன் மீது அருதுயில் கொள்ளும் பேரானந்த காட்சியைப் பார்த்துக் கொண்டே இருக்க லாம்...அவன் குழலழகர், வாயழகர், கண்ணழகர், கொப்பூழில் எழுகமலப் பூவழகர்! அரங்கன் திருவடியை விட்டு நீங்கவே மனம் வராது!

கோதை : என் அரங்கன் ஆனந்தசொரூபி... ஞான சொரூபன்... வேதசரீரன்... உபயகாவேரியின் மத்தியில் பள்ளிகொண்டிருக்கும் கருணா சாகரன்...அவனது பாத கமலங்களுக்கு கோதையின் அநேக கோடி பிரணா மங்கள்!

[பெரியாழ்வார் மீண்டும் பாடுகிறார்]

மாயவனை மதுசூதனனை
மாதவனை மறையோர்கள் ஏத்தும்
ஆயர்கள் ஏற்றினை அச்சுதனை
அரங்கத்து அரவணைப் பள்ளியானை
வேயர் புகழ் வில்லிபுத்தூர் மன்
விட்டுசித்தன் சொன்ன மாலைபத்தும்
தூய மனத்தினர் ஆகி வல்லார்
தூ மணிவண்ணனுக்கு ஆளர் தாமே!

[பாடி முடிக்கிறார்]

பெரியாழ் : இரண்டாவது திவ்ய தேசம்... எம்பெருமான் நின்ற திருக்கோலத்துடன் கமலவல்லித் தாயார் சமேத ராய் எழுந்தருளி பக்தர்களை பரிபாலிக்கும் திருக் கோழியூர்... எனும் உறையூர்!... அதுபோலவே திருமா லிருஞ்சோலை... புனிதமான திவ்யக்ஷேத்ரம்... எம் பெருமான் திருவிக்ரம அவதாரத்தின் பொழுது பிரம்ம தேவன்... பரந்தாமனின் பாத கமலங்களுக்கு திரு மஞ்சன நீர் வார்த்து அபிஷேகம் செய்கிறான்... பகவா னின் தண்டை சலங்கையில் பட்ட நீர் தெளித்து...

இத்திரு நகரில் வீழ்ந்து நதியாக ஓடுகிறது... அந்த நதிக்கு சிலம்பாறு என்று பெயர்... இங்கு எம்பெருமான் ...மாலிருஞ்சோலை நம்பி... அழகர் கள்ளழகர்... மாலாங்காரர்... என்ற திருநாமங்களைத் தாங்கி... சுந்தரவல்லித் தாயாருடன் காட்சி தருகிறார்.

[மேடையில் ஒளி—பெரியாழ்வார் பாடுகிறார்]

எட்டுத் திசையும் எண்—இறந்த பெரும் தேவிமார்
விட்டு விளங்க வீற்றிருந்த விமலன்மலை
பட்டிப் பிடிகள் பகடு உரிஞ்சிச் சென்று மாலைவாய்த்
தெட்டித் திளைக்கும் தென் திருமாலிருஞ் சோலையே!

[பாடி முடிந்ததும்—மேடையில் ஒளி மங்கி மீண்டும் பிரகாசம் — கோதை பெரியாழ்வாரை நமஸ் கரித்தல்]

குரல் : இப்படியாக 108 திவ்ய தேசத்து எம்பெருமானின் ...கருணா விலாசத்தையும் கோதைக்கு விடிய விடிய ...அமுதமாக பிரவசனம் செய்தார்; பெரியாழ்வார்!

பெரியாழ் : கோதை! இந்த 108 திவ்ய க்ஷேத்ர எம்பெரு மான்களில்... நீ யாரை விவாஹம் செய்ய எண்ணு கிறாய்... எல்லோரும் அர்ச்சாவதார மூர்த்திகள்... நீ யாரை அர்ச்சிக்கிறாய்...? சொல்!

கோதை : தந்தையே! நான் அரங்கனுக்குத்தான் மாலை யிட விரும்புகிறேன்!

—திரை—



## காட்சி : 38

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார் — விரசை — எம்பெருமான்— அர்ச்சகர்—வல்லபதேவன்

[பெரியாழ்வாரும், விரசையும் பேசிக் கொண்டிருத்தல்]

விரசை : சுவாமி! நம் புதல்வி...நாளுக்கு நாள்...இளைத்து கொண்டே போகிறாள்...மனத்தில் வரித்தவரை...வாய் விட்டுச் சொன்னால்தானே... நாம் ஏதாவது செய்ய முடியும்... அவளது தோழியர்களிடமும் கேட்டுவிட்டேன்...அவர்களிடமும் உள்ளக் கிடக்கையை...வெளிப் படுத்த மாட்டேன் என்கிறாளே...!

பெரியாழ் : அதற்குத்தான்... நம் கோதைக்கு 108 திவ்ய க்ஷேத்ர எம்பெருமான்களின் வைபவங்களையும் எடுத்துச் சொன்னேன்...அவள் அரங்கனை மாலையிட உறுதி பூண்டுள்ளாள்!

விரசை ; அப்படியா...? கோதை கொடுத்து வைத்தவள்...! ஆக வேண்டியதை பார்க்க வேண்டியதுதானே!

பெரியாழ் : கோதையை... இங்கிருந்து நாம் திருவரங்கத்திற்கு... அழைத்துப் போக வேண்டும்... எப்படி என்று தான் புரியவில்லை!

விரசை : சுவாமி! எனக்கொரு ஆலோசனை... நல்லதாகவே தோன்றுகிறது!

பெரியாழ் : என்ன?

விரசை : மன்னன் வல்லப தேவன் தங்களுக்காக என்ன வேண்டுமானாலும் செய்கிறேன் என்று சொல்லு

கிறார்... அவரிடம் கோதையின் திருமணத்தைப் பற்றி பேசினால் என்ன...?

பெரியாழ் : மன்னிரிடம் கேட்பதற்கு சற்று மனம் கஷ்ட மாகத்தான் தெரிகிறது.

விரசை : மனக் கஷ்டத்திற்கு இடம் ஏது...? மன்னன் கோதை பிறந்த நாளையே... கல்யாணம் போல்கொண் டாட எண்ணினார்... கோதைக்கு கல்யாணம் என்றால்...

பெரியாழ் : நீ சொல்வதும் சரிதான்... பார்ப்போம்!

[இருவரும் படுத்துக் கொள்ளுதல்— புல்லாங்குழல் இசை — ஒளி மங்குகிறது — பகவான் சங்கு, சக்ர கதாபாணியாக எழுந்தருளுதல்]

பெருமான் : பக்தா! கோதை திருமணத்திற்காக மனம் கலங்கவேண்டாம்... ஆண்டாள்... எம்மை ஆண்டவள்! அவளைத் திருமணம் புரிவதற்கு திருவுள்ளம் பற்றியுள் ளோம்... அவளை அழைத்துக்கொண்டு எம்மிடம் வருவீர்... நீங்கள் முகூர்த்த நாள் குறித்தால் போதும்... மற்றவை யாம் பார்த்துக் கொள்கிறோம்.

பெரியாழ் ; விரசை! விரசை!

விரசை : என்ன சுவாமி!

பெரியாழ் : ஸ்ரீமந் நாராயணன் சங்கு சக்ர கதாபாணியாக எழுந்தருளி... திருமணத்திற்கு நாள் குறிக்கச் சொன் னார்... மற்றவைகளை அவன் பார்த்துக் கொள்கிறா னாம்!

[ஒளி மங்குகிறது — தனி Spot — பஞ்சணையில் அரங்க மாநகரத்து அர்ச்சகர் துயில் கொள்ளுதல்— பகவான் அவர்முன் தோன்றுகிறார்]

பெருமான் : ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழும் விஷ்ணு சித்தர் என்னும் பெரியாழ்வார் எமது பரமபக்தர்! எமக்குத் தவறாது திருத்துழாய் கைங்கர்யம் செய்து வரும்

தொண்டன்... அவரது மகள் கோதை நாச்சியார் சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாள்... எம்மை ஆண்டவள்... திருவாய் மொழி எனும் பாசுரங்களால் எம்மை பாடிப் பரவசம் பூண்டவள்... யாம் அவளைத் திருமணம் செய்து கொள்ளத் திருவுள்ளம் பற்றியுள்ளோம்! அவர்கள் அரங்கத்திற்கு வரப் போகிறார்கள்... அவர் களை எதிர் கொண்டழைக்கவும்!

[மேடையில் இருள்— பஞ்சணையில் வல்லப தேவன் படுத்திருத்தல்]

பெருமான் : வல்லபதேவா! உமது அத்யந்த நண்பன்... எமது பக்தன் பெரியாழ்வார் மகளை... யாம் மணம் புரியப் போகிறோம்... அன்பர்கள் புடைசூழ அவளை திருவரங்கத்துக்கு அழைத்து வருவாயாக!

—திரை—



## காட்சி : 39

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்— விரஜை—கோதை—வல்லபதேவன்—காவலன்—செல்வநம்பி

[பெரியாழ்வார் பகவானை பிரார்த்தித்தல்]

பெரியாழ் : கேசவா! புருஷோத்தமா! என்குல தெய்வமே! என் நாயகனே! என் மனத்தே கோவில் கொண்ட கோவிந்தா! கொழுங்குளிர் முகில் வண்ணா! ஆயர் ஏற்றை அமரர் கோவே! பனிக்கடலில் வாழும் பரமா... என் மனக்கடலில் வாழ வல்ல மாயமணாள நம்பீ! அருட்புனலே! அமுத ஒளியே! நீ எனக்குக் கவிபாடும் திறம் தந்தாய்! புவி ஆளும் பூமானின் துணை தந்தாய்! பூ மகளைப் புத்திரியாக வளர்க்கும் பேறு தந்தாய்! இத்தனைக்கும் மேலாக உன்னையே மருமகனாக பெறும் அளவிலா ஆனந்த நிலையையும் இந்த எளிய வனுக்கு அருளினாய்... உனக்கு என்ன கைமாறு செய் வேன்! வாழ்நாள் முழுவதும் தமிழ்ப் பாசுரம் எழுதி... எழுதி உன் திருமேனிக்கு சாத்தினாலும் ஈடு இணையாகாதே... மாலே! மணிவண்ணா...!

[விரஜை உள்ளிருந்து வருகிறாள்]

விரஜை : சுவாமி! என்ன முடிவு எடுத்தீர்கள்...?

பெரியாழ் : விரஜை! நம் கோதை கல்யாணம்... விஷயத்தையும், எம் பெருமான் திருவாய் மலர்ந்து அருளிய அமுதமொழிகளையும் சொல்லி மன்னனைத் திருமணத்திற்கு வருமாறு அழைக்கிறேன்... மன்னன் வல்லப

தேவனைப் பார்த்து வருவதற்கு நாளை காலை புறப்படுகிறேன்.

விரசை : நல்ல யோசனை தான்... ஏன் நாதா! வெறுங்கையோடு... அரசனைப் பார்க்கப் சென்றால் நன்றாக இருக்குமா...?

பெரியாழ் : சந்தன மாலை ஒன்றை எடுத்துச் செல்கிறேன்.

விரசை : கிருஷ்ணனைப் பார்க்க குசேலர் கையில் அவல் எடுத்துச் சென்றார்...

பெரியாழ் : கிருஷ்ணர் கடவுள்...வல்லபதேவன் மனிதன்... கிருஷ்ணனும், குசேலரும் நண்பர்கள்...நாங்கள் அப்படி அல்லவே!

விரசை : தாங்கள் இப்படி பேசினால் எப்படி...? அரசன் உங்களை சிஷ்ய பாவத்துடன் பார்க்கிறார்.

பெரியாழ் : இந்த புலவனுக்கு... பொற்கிழி தந்த புரவலனுக்கு... பொன்னும் பொருளும் ஒரு பொருட்டாகுமா...? அரசன் நம்மைவிட உயர்ந்த பக்திமான்... பரந்தாமனின் பேரருளைப் பரிபூரணமாக பெற்ற தவச்செம்மல்... அந்த மகானு பாவனுக்கு... நான் குரு என்றால்... விரசை! வெறுங்கையோடு தான் செல்லப் போகிறேன்... சந்தன மாலையை மன்னவன் கழுத்திலே போட்டு... நம் மகள் கழுத்திலே மணமாலை ஏற வேண்டும் என்று விண்ணப்பிக்கப் போகிறேன்.

[காவலன் வருகிறான்]

காவலன் : ஸ்ரீ பெரியாழ்வார் சுவாமிகள் இருக்கிறார்களா?

பெரியாழ் : அடியேன் தான் பெரியாழ்வார்!

காவலன் : தங்களைப் பார்க்க மதுரையம்பதி மகாராஜஸ்ரீ ...வல்லபதேவ பூபதி, அமைச்சர் செல்வ நம்பியுடன் வந்து கொண்டு இருக்கிறார்...

பெரியாழ் : அப்படியா? வெண்ணையே திரண்டு வந்தாற் போல் இருக்கிறது என்னே என் அரங்கத்தான் கருணை!

[பெரியாழ்வார், விரசை வாயிற்பக்கம் ஓடிச் சென்று, அரசனையும், செல்வநம்பியையும் உள்ளே எதிர் கொண்டு அழைத்து வருதல்]

பெரியாழ் : மன்னா...! ஒரு வார்த்தை சொல்லி அனுப்பி இருந்தால்... தங்கள் மாளிகைக்கு நானே வந்திருப் பேனே... அதுமட்டுமல்ல... நாளை புலர்காலையில் மதுரைக்கு புறப்படலாம்... என்று இருந்தேன்... அதுவும் தங்களைப் பார்க்கத்தான்!

வல்லப : என்னையா...?

பெரியாழ் : ஆமாம்... அதற்குள் என் இறைவன்... தங்களை எமது இல்லத்திற்கு வரப் பணித்துவிட்டார்.

வல்லப : கோதைக்கு கல்யாணம்... முன்னின்று நடத்தி வைக்க வேண்டும் என்பது அவன் கட்டளை!

பெரியாழ் : தங்களுக்கு எப்படி தெரியும்...?

வல்லப : அரங்கமா நகரத்து... அரவணைப்பள்ளி கொண் டான்... எமது கனவிலே எழுந்தருளி தங்கள் திரு மகளுக்கும்... தமக்கும் திருமணம் என்பதனை திருவாய் மலர்ந்து அருளினார்... நாம் நம் கோதையை முத்துப் பல்லக்கில்... கோலாகல வைபவத்துடன் ஸ்ரீரங்கத்திற்கு அழைத்து வரவேண்டும் என்பது அவனது அன்புக்கட் டளை... முடி சூடியபோதுகூட இத்தனை மகிழ்ச்சியாக இருந்ததில்லை... படைபல கொண்டு... நாடு பல கைப்பற்றிய போது கூட இந்த பூரிப்பு இல்லை... ஆண்டவனின் இந்தக் கட்டளை தான் எனக்கு கிட் டாத பேரின்ப சுகத்தைக் கொட்டி குவித்திருக்கிறது... என் குருவின் மகளுக்குத் திருமணம்... மணமகன் நம் பரந்தாமன்... நடத்தி வைக்கும் திருத்தொண்டு இந்த எளியவனுக்கு! ஆஹா... எப்பேர்ப்பட்ட பாக்கியம்!

பெரியாழ் : மன்னா... கோகுலத்தில் கோபியர்களையும் கோபாலர்களையும் ஆட்டிப்படைத்தவன்... நம்மிடம் எப்படி எல்லாம் விளையாடுகிறான் .. அரசே! என் கோதை கல்யாணத்திற்கு நாள் குறித்துச் சொல்கிறேன்... அதற்கு தகுந்தாற்போல் மன்னர் தாங்களும்... அமைச்சர் அவர்களும் மற்ற ஏற்பாடுகளைச் செய்யலாம்...

வல்லப : மிக்க மகிழ்ச்சி... சுவாமி! கோதையின் கல்யாணம் நாற்திசையும் புகழ்ப்பாட.... மூவுலகமும் வியந்து போற்றும். இதுவரை எவருக்குமே இந்த மாதிரி திருமணம் மண்ணுலகில் நடந்ததில்லை என்று சொல்ல வேண்டும்... இந்த நல்ல தருணத்தில் ஐயனிடம் வல்லப தேவனின் ஒரு விண்ணப்பம்!

பெரியாழ் : என்ன அரசே...?

வல்லப : தாங்கள் எனக்கு ஒரு உறுதிமொழி அளிக்க வேண்டும்.

பெரியாழ் : அரசர் சமூகத்திற்கு ஆணையிட்டு தருகிறேன்.

வல்லப : இந்த திருமணத்தைப் பொறுத்தவரை... தேவரீர் கைகள் ஏடும்... எழுத்தாணியும் தான் எடுக்க வேண்டுமே தவிர... பொன்னும்... பொருளும் செலவு செய்தல் கூடாது... மலையத்தன பொருள் கிடக்கிறது... தங்கம், வெள்ளி... வெண்பட்டு வஸ்திரம்... போஜனம்... அலங்காரம் இப்படி எல்லாவற்றிற்கும் அடியேனது கஜானா தான்! எனக்கு அது வேண்டாம்... இது வேண்டாம் என்று தாங்கள் இயம்பக் கூடாது.

பெரியாழ் : உறுதிமொழி என்று கேட்கும்போதே நினைத்தேன்... ஏதோ ஒரு சிக்கலில் நான் மாட்டிக் கொள்வேன் என்று... அரசே! தாங்கள் இதுவரை எமக்கு அளித்துள்ள பொன்னும்...பொருளும்... மான்யங்களும்

எத்தனையோ தலைமுறைக்குக் காணுமே... அவற்றை வைத்துக் கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன்?

வல்லப : இப்படிச் சொல்லுவீர்கள் என்று தெரிந்து தானே... உறுதிமொழி பெற்றுக்கொண்டேன்! சுவாமி! இங்கு இரண்டு காவலர்கள்... ஒரு அரசாங்க அதிகாரியை... நிரந்தரமாக தங்க ஏற்பாடு செய்துள்ளேன்... தாங்கள் முக்கியமான தகவலை அவர்கள் மூலம் சொல்லி அனுப்பலாம்...

[கோதை ஓடி வருதல்]

பெரியாழ் : எதற்கம்மா... இப்படி இறைக்க... இறைக்க ஓடி வருகிறாய்...?

கோதை : அரசரைப் பார்க்கத்தான் ஆவலோடு ஓடிவந்தேன்... அரசருக்கு கோதையின் வந்தனங்கள்.

வல்லப : அம்மா... நீதான் தொழுதற்குரியவள்... என் கோன் வாழ... குடி வாழ... நீதான் அருளவேண்டும்...

கோதை : நாம் சொல்ல வேண்டிய வார்த்தைகளை... அரசர் நம்மிடம் சொல்கிறார்.

வல்லப : பூ மகளே! உன்னை திருவரங்கத்திற்கு அழைத்துச்செல்ல வேண்டும் என்பது நம் அரங்கனின் ஆணை... அதற்காகவே வந்துள்ளோம்!

கோதை : அப்படியா... அரசே! இந்த எளியவள் உங்களை வாழ்த்தி வணங்குகிறேன்.

[கோதை பாடுதல்]

மன்னு பெரும்புகழ் மாதவன் மா மணி
வண்ணன் மணி— முடிமைந்தன்
தன்னை உகந்தது காரணமாக என்
சங்கு இழக்கும் வழக்கு உண்டே?
புன்னை குருக்கத்தி ஞாழல் செருந்திப்
பொதும்பினில் வாழும் குயிலே!
பன்னி எப்போதும் இருந்து விரைந்து என்
பவள-வாயன் வரக் கூவாய்!!

வல்லப : உங்கள் மகள் கோதை... பாப்பாடுவதில்... உங்களுக்கு நிகர்தான்!

பெரியாழ் : அரசே! நம் கோதை பாசுரம் பல எழுதியுள்ளாள்... திருப்பாவை... திருமொழி... மற்றும் பல! வடபத்ரசாயி அங்கீகரித்து அருளியவை!

வல்லப : அப்படியா... சுவாமி! நான் மதுரைக்குச் சென்றதும்... முதல் வேலையாக... அவற்றை செப்பேடு செய்து பத்திரப்படுத்துவதற்கான ஏற்பாடுகளைச்செய்வோம்... அவ்வாறே... தேவரீர் எழுதியுள்ள பாசுரங்களையும் செப்பேடு செய்வோம்... கலி முடியும் வரை... அவைகள் பாதுகாக்கப்படும்... நான் வருகிறேன்...

விரஜை : அரசர்... சாப்பிடுவதற்கு...

செல்வநம்பி : எங்களுக்கு கல்யாண போஜனம் போதும்!

வல்லப : திருமண முகூர்த்த நாளை விரைவில் கணித்து அனுப்பவும்.

பெரியாழ் : ஆகட்டும் அரசே! இப்பொழுதே சொல்லிவிடுகிறேன்.

—திரை—



## காட்சி : 40

*இடம் :* அரண்மனை

*கதாபாத்திரங்கள் :* வல்லபதேவன் — செல்வநம்பி — அதிகாரி —

[வல்லபதேவனும், செல்வநம்பியும் உலவிக் கொண்டிருத்தல்]

செல்வ : அரசே! பெரியாழ்வார் விரும்பிய வண்ணம், கல்யாண ஊர்வலம் வருகிற திங்கள் இருபதாம் நாள் புதன் கிழமை காலை வில்லிப்புதூரில் இருந்து புறப்படலாம் என்று தீர்மானிக்கப்பட்டு அதற்கான அனைத்து ஏற்பாடுகளும் கனகச்சிதமாக செய்யப்பட்டு விட்டதாம்... வரும்வழியே... தங்கபோகும் கிராமங்களை கவின்பெற சொர்க்கலோகம் போல அலங்கரிக்கும்படி ஆங்காங்கே உள்ள நமது சிற்றரசர்களுக்கு செய்தி சொல்லி அனுப்பியுள்ளேன்...

வல்லப : மகிழ்ச்சி! ஆடை ஆபரணங்கள் அனுப்பியாகி விட்டதா...?

செல்வ : இந்நேரம் அவர்களுக்கு கிட்டி இருக்கும். வரும் பாதையில் ஆங்காங்கே உள்ள திவ்ய க்ஷேத்திரங்களில் ஆராதனைகள் நடத்த ஏற்பாடு செய்துள்ளேன்... ஒவ்வொரு நகரத்தின் எல்லையிலும் பெரும் வளைவுகளை அமைத்து... வரவேற்புக்கான ஏற்பாடுகளைச் செய்துள்ளேன்... சமஸ்தான வித்வான்களும்... பண்டிதர்களும்... பாளையக்காரர்களும் வேத விற்பன்னர்களும்... ஆன்மீக அன்பர்களும்... சத்விஷயங்களை கவனிக்கிறார்கள்.

வல்லப : செல்வநம்பி! எப்பேர்ப்பட்ட பணிகளை எத்தனை பக்தி சிரத்தையோடு செய்து வருகிறாய்... உங்களைப்

போன்ற ஓர் பக்த சிரோன்மணியை, அறிவுடைய செம்மலை... அமைச்சனாக பெற்ற நானே பாக்கிய வான்!

*[அதிகாரி வருதல்]*

வல்லப : வாரும் சமஸ்தான அதிகாரியே! சென்ற வேலை கள் எப்படி...?

அதிகாரி : அரசே! போகுமிடத்தில் எல்லாம் பருத்தியே... புடவையாக காய்த்த கதைதான்... திருவரங்கம் சென் றேன்... அந்தநகரமே விழாக் கோலம் பூண்டிருக்கிறது... அரசே! வீதி எங்கும் மிக அழகாகவும் மிக அற்புதமாக வும் அலங்காரம் செய்யப்பட்டிருக்கிறது... அங்கு வேறு ஏதோ விசேஷம் போலிருக்கிறது என்று நினைத்தேன்... கேட்டு பார்த்தால்... ஆண்டாள் கல்யாணத்திற்கான ஏற்பாடுகள் என்கிறார்கள். நமக்கு முன் இந்த திருமண விஷயத்தை யார் வந்து சொல்லியிருப்பார்கள் என்று விசாரித்தேன்... எம்பெருமான்... கோவில் அர்ச்சகர் கனவில் எழுந்தருளி... கோதையைத் தாம் திருமணம் செய்யப்போகும் வைபவத்தைத் திருவாய் மலர்ந்துள் ளார்கள்... உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆளும் நம் சோழ மன்னனுக்கும்... விவரம் அறிவிக்கப் பட்டது.

திருச்சிராப்பள்ளி எல்லையிலிருந்து முத்து பந்தல் அமைப்பதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக் கிறது... நூற்றுக்கணக்கான பணியாட்கள் இரவு பகலாக வேலை செய்கிறார்கள்... திருவரங்கத்தில் கோவில் கொண்டுள்ள க்ஷேத்ரத்தை பரமபதம் போல் அழகுபடுத்துகிறார்கள்...நான் நேராக சோழ அரசனை சந்தித்து... தாங்கள் கொடுத்த மடலைக் கொடுத் தேன்... பதில் தந்துள்ளார்.

*[மடல் கொடுத்தல்—மன்னன் படித்தல்— செல்வ நம்பியிடம் கொடுத்தல்]*

செல்வ : நம் சோழனுக்கு... எப்பொழுதுமே நம்மீது ஒரு அபரிதமான அன்பு... கோதையின் கல்யாணம் சோழனும்... பாண்டியனும் சேர்ந்து நடத்தும் பெரு விழாவாகி விட்டது... ராப்பத்து... பகல் பத்து என்று கொண்டாடுவதற்கு ஏற்பாடாம்...அரங்கன் ஆண்டாள் திருக்கல்யாணம், பாண்டியனின் புகழை மூவுலகும் வாழ்த்தும்.

— திரை —



## காட்சி : 41

இடம் : வடபத்ரசாயி சந்நிதி

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்— கோதை— விரசை அர்ச்சகர்—தோழிகள் இருவர்

பெரியாழ் : நாளை புலர்க்காலை பொழுது... நாங்கள் திருவரங்கம் புறப்படுகின்றோம்

அர்ச்சகர் : எனக்கும் வரவேண்டும் என்றுதான் ஆவல்... இப்பேர்ப்பட்ட ஒரு புண்ணிய யாத்திரையில் கலந்து கொள்ள கொடுத்து வைத்திருக்க வேண்டும்... அதுவும் மன்னன் வல்லபதேவன் முன்னின்று நடத்துகிறார் என்றால் கேட்கவும் வேண்டுமோ...?

பெரியாழ் : எல்லாம் பூமகளைப்... பொன் மகளாகப் பெற்ற பாக்கியம்தான்!

அர்ச்சகர் : கோதை! உன்னால் இந்த வில்லிபுதூருக்கே பெருமை... நீ பாடிய திருப்பாவையும்... திருவாய் மொழியும் பக்தர்களுக்கு கிடைத்த அமுத கலசங்கள் அல்லவா...?

கோதை : என் தந்தை பெரும் பண்டிதர்... அவருக்கு மக ளாகப் பிறந்ததில் தான் எனக்கு இந்த சுக்ருதங்களெல் லாம் உண்டானது என்று நான் மனம் மகிழ்கிறேன்.

பெரியாழ் : கோதை...! ஒரு வார்த்தைக்குச் சொல்லலாம். உன்னால் தான் எனக்கு புகழ்... பட்டம்... பதவி எல் லாம்! நீ சூடிக் கொடுத்த மாலையைத்தானே... இந்த மதுசூதனன் மனம் உவந்து திருமார்பில் அணிந்து கொள்கிறான்... பெருமானே! நாளை முதல் உனக்கு யார் மாலை சூடிக் கொடுப்பார்கள்...?

அர்ச்சகர் : கோதை... நீ சூடிக்கொடுக்கும் மலர் மாலைகள் வாடுவதும இல்லை... வாசனை குறைவதும் இல்லை... மறுநாள் கூட மாலைகள் அன்றலர்ந்த பூப் போல் பரிமளம் கமழ... புத்தம் புது மலர்கள் போல வண்டினங்கள்... ஆர்க்கும் வண்ணம் பொலிவுடன் காணப் படுகின்றன.

தோழி : உனது திருப்பாவை பாசுரங்களை... நாங்கள் தினமும் பாடிப் பரவசம் கொள்வோம்... ஆலயத்து மயில்கள் கோதை... கோதை என்று விளிப்பது போல் அகவும்... குயில்களும் கிளிகளும் கோதை... கோதை என்று தான் கூவும்... கத்தும்...கோதை! இப்படி பட்ட வில்லிபுதூரை மறந்துவிடாதே!

கோதை : மறப்பதா...? என் உடன்பிறவா சகோதரிகளே! உங்களையா? இந்த வில்லிபுதூரிலிலுள்ள ஒவ்வொருவரையும்... நான் மனத்தில் கொள்வேன்... ஒரு போதும் மறக்கமாட்டேன்.

அர்ச்சகர் : சுவாமி நாளை காலை... கோதையை வழி அனுப்ப வருகிறேன்!

—திரை—



## காட்சி : 42

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்— கோதை— விரசை அதிகாரி— அர்ச்சகர்

[பெரியாழ்வார் ஊஞ்சலில் ஆடிக்கொண்டிருந்தல்- விரசை எடுத்துச் செல்ல வேண்டிய பொருள்களை அடுக்கி வைத்தல்— அதிகாரி, காவலர் ஒவ்வொரு பொருள்களாக வெளியே கொண்டு போதல்— கோதை கிருஷ்ண விக்ரஹத்தை கொண்டு வருகிறாள்]

கோதை : அம்மா! இந்த கிருஷ்ண விக்ரஹத்தை நீ பூஜிப்பாயாக... உனக்கு பேரின்பம் கிட்டும்... தந்தையே சேர்ந்து நில்லுங்கள்... நமஸ்கரிக்கிறேன்.

[கோதை நமஸ்கரித்தல்]

பெரியாழ் : அவன் நடத்துகின்ற நாடகத்தில்... இப்படி சில காட்சிகளா...?

விரசை : கோதை...

[கட்டிக்கொண்டு அழுதல்]

கோதை : அம்மா! அழாதீர்கள்... நான் உங்களை நிரந்தரமாக பிரியவில்லை... அரங்களை மாலையிடத்தானே போகிறேன்.

பெரியாழ் : விரசை! விசனப்படாதே... கோதை... எப்பொழுதும் நம்முடனேயே இருப்பதாக பாவித்துக் கொள்ள வேண்டும்... என்றைக்காவது... ஒரு நாள் பிரிந்துதானே ஆகவேண்டும்!

அதிகாரி : சுவாமி! எல்லாம் தயாராகி விட்டது... கோதை நாச்சியார்... முத்துப்பல்லக்கில் எழுந்தருளலாம்.

[அர்ச்சகர் மாலையுடன் வருதல்]

அர்ச்சகர் : கோதை... இத்தனை நாளும் நீ சூட்டிக் கொடுத்த மாலையை... நம் பெருமான் ஏற்றுக் கொண் டார்... இன்று அவன் சூடிக்கொடுத்த மாலையை நீ அணிந்து கொள்ள வேண்டும்.

[ஆண்டாள் மாலையை வாங்கிக் கொண்டு கழுத் தில் அணிந்து கொள்ளுதல்]

ஆண்டாள்...! நீ உலகையே ஆண்டாள்... கோதை... நீ புண்ணியத்தின் பாதை! சத்தியத்தின் பாதை... தர்மத் தின் பாதை! ஸ்ரீ வில்லிபுத்தூரின் செல்லக் குழந்தை!

[விரஜை கண்ணீர் பொங்க புறப்படுதல்]

[வெளியே கோஷம் முழங்குகிறது]

கோஷம் : பெரியாழ்வார் வாழ்க! சூடிக்கொடுத்த சுடர்க் கொடி நாச்சியார் வாழ்க... அரங்கன் கைத்தலம் பற்றப் போகும் அருந்தமிழ்ப் பாவை கோதை வாழ்க! ஆண்டாள் வாழ்க!

[ஆண்டாள், அனைவரும் புடைசூழ புறப்படுதல்]

—திரை—



## காட்சி : 43

இடம் : கோவில் கோபுரவாசல்

கதாபாத்திரங்கள் : வல்லபதேவன்—அர்ச்சகர்—கோதை—பெரியாழ்வார்—விரசை—பக்தர்கள்—பெண்கள்—ஆலய அதிகாரிகள்—சோழ மன்னன் செல்வநம்பி.

[ஆண்டாள் பல்லக்கில் நின்றும் இறங்குதல்... பக்தர்கள் மலர் தூவுதல்—பூரண பொற் கும்ப கலசங்கள் வைத்து வரவேற்றல்—பெரியாழ்வார்—விரசை—வல்லபதேவன் — செல்வநம்பி — சோழ மன்னர்—தோழியர்—கோவில் அதிகாரிகள் கூடி நிற்கின்றனர்]

—கோஷம் ஒலிக்கிறது—

பட்டபிரான் வாழ்க!

பெரியாழ்வார் வாழ்க!

ஆண்டாள் வாழ்க!

சூடிக்கொடுத்த சுடர்க்கொடி நாச்சியார் வாழ்க!

கோதை நாச்சியார் வாழ்க!

பாண்டிய மன்னன் வாழ்க!

சோழ மன்னன் வாழ்க!

வல்லப : அரங்கனைத் திருமணம் புரியப் போகும் என் குருநாதர் ஸ்ரீமத் பெரியாழ்வார் பெற்றெடுத்த ஞானப் பெருவிளக்கே! அழகின் எழில்மிகும் அலங்கார மாளிகையே! திருப்பாவை பாடி திருமாலைப் பணிந்து போற்றும் பைந்தமிழ்ச் சுடரே! நானிலம் போற்றும் கோதை நாச்சியாரே! பாண்டியனும்... சோழனும்

சேர்ந்து விழா எடுப்பதில் அளவிலா இன்பம் கொள் கின்றோம்.

சோழன் : அரங்கனின் பேரருளைப் பரிபூரணமாகப்பெற்ற கோதை நாச்சியாரே! உங்கள் தங்கமலர் பாதம்பட்டு இந்த மண் மகிழ்கிறது...புனிதம் பெறுகிறது... உங்கள் வருகையால் திருவரங்கத்து பக்தர்களின் பெருமை... இக்கோபுரம் போல் வானளாவி ஓங்கி உயர்ந்தது... திருவரங்கத்தில் வாழும் பக்தகோடிகள்... உங்கள் தரிசனத்திற்காக கடந்த பல திங்களாக தவம் கிடக் கிறார்கள்...நாங்கள் எடுத்த பிறவியில் உய்யும் நிலை பெற... தாங்கள் திருக்கண் மலர்ந்து எங்களை திருநோக்கம் செய்து அருளுவீர்... தாங்கள் மென்சீரடி பதித்து... அரங்கனின் திருமுன் எழுந்தருளுவீர் என்று பிரார்த்திக்கின்றோம்.

கோதை : நீங்கள் அனைவரும்... இந்த எளியவளின் திருமணத்திற்காக... எவ்வளவு சிரமப்பட்டீர்கள்... எத்தனை நாட்கள் அயராது உழைத்தீர்கள்... என்ப தனை என்னால் எண்ணிப் பார்க்கவே முடியவில்லை... நோக்கு இடமெல்லாம் முத்துப்பந்தல்கள்... வாழை, மாவிலைத் தோரணங்கள்... அழகிய வளைவுகள்... எப்பேர்ப்பட்ட அலங்காரம்...வழி எங்கும் வாசனை திரவியங்கள் தெளித்து... எத்தனை அழகாக வண்ண மிகு கோலம் போட்டுள்ளார்கள்... உங்கள் உண்மை யான பக்திக்கு உவமையே சொல்ல முடியாது... என் அரங்கன் மீனாக்ஷிக்கு கல்யாணம் மதுரையில் நடத்தி னான்... இங்கே அரங்கனுக்குக் கல்யாணத்தை மதுரை மன்னன் நடத்துகிறார்... அவருக்குத் தோள் கொடுக் கிறார்... சோழ மன்னர்! எத்துணை பொருத்தம்!

வல்ல : இந்த திருக்கல்யாண வைபவத்தில் பாண்டிய நாடும்... சோழ நாடும் பூண்டிருக்கும் நட்பு மேலும் நிலைக்கும்... நீடு புகழ் பெறும்.

பெரியாழ் : கோதையின் திருமணத்தில் சோழ நாடு செழிக்கும்... பாண்டியநாடு செல்வத்தால் சிறக்கும்... எங்கும் மும்மாரி பொழியும்!

அரங்கத்து அர்ச்சகர் : நாம் எல்லோரும் சந்நிதிக்கு நாச்சியாரை ஏளப்பண்ணுவோம்!

[ஆண்டாளை மேளதாளத்துடன் அழைத்துப் போகிறார்கள்]

—திரை—



## காட்சி : 44

இடம் : அரங்கன் சந்நிதி

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்— கோதை— திருமால்

[அரங்கன் பள்ளிக்கொண்டிருத்தல் — ஆண்டாள், பெரியாழ்வார் வணங்கியவாறு நிற்கின்றனர்]

பாடல்

பெரி : பெருவரங்கள் அவைபற்றிப்
பிழக்கு உடைய இராவணனை
உருஅரங்கப் பொருத்து அழித்து இவ்
வுலகினைக் கண்பெறுத்தான் ஊர்
குரவு அரும்பக் கோங்கு அமரக்
குயில் கூவும் குளிர்பொழில்சூழ்
திருவரங்கம் என்பதுவே
என் திருமால் சேர்விடலே!!

(பாடி முடிந்ததும்)

பெரியாழ் : இப்பேர்ப்பட்ட அரங்கமா நகரத்தில் பாம்பணையில் அருதுயில் கொள்ளும் அனந்தா... அச்சுதா... என் மகள் கோதையை உன் திருச்சந்நிதிக்கு அழைத்து வந்துள்ளேன்... அவளை உனது பத்தினித் தெய்வமாக ஏற்றுக்கொள்வாய்... திருத்துழாய் கைங் கரியம் செய்து வந்த எளியவனுக்கு பூமகளை பொன்மகளாகத் தந்து... அருள் செய்த அரங்க மாநகரத்து மணிவண்ணப் பெருமாளே... என் மகளை உன் திருச் சந்நிதிக்கு அழைத்து வந்துள்ளேன்... அவளை உகந்த பிராட்டியாராக ஏற்றுக்கொள்வாய்...

எனக்கு ஞானப்பால் ஊட்டி என்னை வான்புகழ் புலவனாக்கி... இன்று என் மகளை மணம் பூண்டு...

என்னை உன் மாமனாக்கி... அற்புத திருவிளையாடல் புரியும் அனந்தசயனா... அனந்தகோடி சொரூபா... திரிவிக்ரமா! வாமனா! நான் வளர்த்த கோதை உன் முன்னே மணமகளாக நிற்கின்றாள்... அவளை உன் மனம் கமழ் மங்கை நல்லாளாக ஏற்றுக்கொள்...

விண்ணெல்லாம் எதிரொலிக்க நீ அழுதிட்ட போது... உன் திருவாயில் மண்ணெல்லாம் காட்டிய கார்முகில் கடல்வண்ணா! பிறந்திட்டபோது அழுத என் கோதை... உன்னை மணக்கப் போகிறோம் என்று ஆனந்தக் கண்ணீர் வடிக்கின்றாள்... அவளை நின் கைத்தலத்தால் பற்றி பெருமிதம் பொங்க பாரியாளாக ஏற்றுக்கொள்வாய்... அலங்கார பதுமையாய்... ஆடி வரும் பொன்விளக்காய்... தங்கமும் வைரமும்... வைடூரியமும் அணிமணி ஆபரணங்களுஂம... பரிமள மணமாலைகளும்... பொன்னும்... பட்டுப்புடவையும் உடுத்தி உன் மூன் ஆயிரம் கோடி ரதிகள் சேர்ந்து வந்தாற்போல் அழகின் மொத்த வடிவாய் எழுந்தருளி வந்திருக்கின்ற என்மகள் ஆண்டாளை உனது அகமுடையாளாக ஏற்றுக் கொள்வாய்!

இன்னும்... ஆடாகம், தாடகம், மணி பூரகம் இப்படி எத்தனை எத்தனையோ... முத்துமணி நகைகளுடன் சர்வாலங்கார பூஷிணியாய்... சௌந்தரவல்லியாய்... மென்சீரடியில் சிலம்புகள் ஆர்க்க... அழகுமிகும் திருக்கரங்களில் பொன் முத்து வளையல்கள்... மென் விரல்களில் பவள மோதிரங்கள்... நெற்றியிலே சுட்டிகை... கழுத்திலே அட்டிகை... துவளும் கொடி இடையில் ஒட்டியாணம்... முத்துபுல்லாக்கு... வங்கி... காதள ஓடிய மை விழியாளின் கடைக்கண்பார்வை உன் திருநயனங்களை கண்டு களிக்க... என் மகள் கோதை அலங்காரத் திருவுருவாய்... அண்ட சராசரங்களும்... நாணிப் போகும் வண்ணம்... பேரழகுத் திருமகளாய் வந்து நிற்கின்றாள்... அவளை ஏற்றுக்கொள்...

என் அன்பு கோதை... உன் ஆலிங்கன பாவை...! அவள் திருப்பாவை பாடியவள்... திருமொழி செப்பியவள்... உனக்கு திருத்துழாய் கைங்கரியம் செய்தவள்... மாலை சூடிக்கொடுத்தவள்... உன்னைப் பாடி மகிழ்வித்தவள்... உன்னோடு கற்பனையில் கூடி மகிழ்ந்தவள்... உன்னையே மணப்பேன் என்று நோன்பு இருந்தவள்... அவள் உன்னை நாடி வந்து நிற்கின்றாள்... நீ அவளை ஏற்றுக்கொள்... எங்கள் பிரார்த்தனையை ஏற்றுக்கொள்...

கோதை : நாக பரியங்கத்தின்மேல் சயனித்திருக்கும் அச்சுதா... கண்ணா! குன்றம் ஏந்தி ஆயர்குலம் காத்த அமரர் தலைவா! அமுதமழை...பொழியும் உனது கமல நயனங்களால் எங்களைத் திருநோக்கம் செய்து... ஜென்ம சாபல்யம் அடைய திருவருள் புரிந்திடுவாய்! ஸ்ரீமதே நந்தகோப குமாராய! உன் செவ்வடித் திருகாப்புக்கு சரணம்! ஸ்ரீலக்ஷ்மி பதயே நமோ நம: வைகுண்ட நிலயாய ஸ்ரீநிவாஸா! உன் பொன்னாற் மேனிக்கு... என் பல்லாயிரம் சரணங்கள்... நீலமேக சியாமளாய... துளசி மகுட நாராயணா... ராஜாதி ராஜா சேவிதபாதபத்மாய சரணம்! சரணம்! உன் திருவடியைப் பற்றுகிறேன்... உனது வலது பக்க திருமார்பில் திருமகளுக்கு இடம் தந்தாய்... இந்த அபலைக்கு உன் இடப் பக்கத்து திருமார்பில் இடம் தருவாய்!

[அனந்தன் நின்றும் மாலை ஆண்டாள் திருக்கழுத்தில் விழுதல்— அனந்தன் மீது பேரொளி பிரகாசம் பொங்குகிறது]

பெருமா : சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே! எம்மோடுவந்து அணைவாய்! நீ எமை ஆண்டாள்! எமது ஆண்டாள்!

[ஆண்டாள் அரங்கனுடன் ஐக்கியமாகிறாள்— பூமலர் பொழிகிறது]

பெரியாழ் : பலே மணிவண்ணா! உன் கோலத் திருமார்பில் திருத்துழாய்ப் பூண்டு, திருநாடு காத்தருள கருடாழ் வார் மீது பவனி வரும் பரமதயாளா! கோதை நாச்சி யரைக் கரம் பற்றிய வைகுந்தவாசா! மாயனே! மன்னு புகழ் கோசலை தன் மணிவயிற்றில் உதித்த மாதவனே! மதுசூதனனே... தூயவனே! எங்கள் நானிலம் போற் றும் நாயகனே! நின் நாமம் தனைப் பன்கோடி முறை போற்றிப் பணிகின்றேன்! நீவிர் பிறவி அறுக்க அருளு வாய்! பற்றினோம் நின்பொற்பதம்! பல்லாண்டு... பல்லாண்டு என்று பரமனே உன் சேவடிக் கமலங்களைப் பற்றினோம்! போற்றி! போற்றி!

எம்பெருமான் : விஷ்ணுசித்தா! கடல்மன்னனைப் போல் நீரும் எமக்கு மமானாராகி விட்டீர்... நீ வடபத்ரசாயி யான எம்மை வழிபட்டு பல்லாண்டு பாடி பலகாலம் வாழ்வீர்! உமக்கு எமது கரத்தால் துர்த்தம்... பரி வட்டம்... மாலை... சடகோபம் சாத்தி அருள்செய் வோம்!

[பெருமான் அருள் செய்தல்]

பெரியாழ் : பரந்தாமா! ஒரே மகள்...அவளைத் திருமகள் போல் வளர்த்தேன்... அந்த செங்கண்மால் தான் அவ ளைக் கொண்டு போனான்... இனி எப்படி நான் மட்டும்... தனித்து திரும்புவேன்... கோதை இல்லாமல் எனக்கு வாழ்வு ஏது... அரங்கமா நகரத்து பேரரு ளாளா! கொடுப்பது போல் கொடுத்து என் செல் வத்தை எடுத்துக் கொண்டாயே... கோதை... கோதை!

[பெரியாழ்வார் கதறி அழுதல்]

பெருமன் : பெரியாழ்வார்! நீ பிறவி எடுத்தது பாசத்திற் காக புலம்புவதற்கு அல்ல! நமது பக்தர்கள் உய்யும் மார்க்கத்தை அடைய திவ்யபாசுரங்களைச் சொல்வதற் காக...நீ பிறவி எடுத்தது அந்த புனித கைங்கரியத்துக்கே அன்றி... வளர்த்த பாசத்திற்காக பெண்ணை நினைந்து

வருந்தி வருந்திக் கண்ணீர் வடிப்பதற்கு அல்ல... பக்தியை உலகில் பரப்புவான் நிமித்தம் பெரியாழ் வாராக அவதரித்த நீ... பலகாலம் பூவுலகில் வாழ்ந்து, பாசுரங்கள் பல எழுதி—முடிவில் எமை வந்தடைவாய்!

[பெரியாழ்வார் வலம்வந்து நமஸ்கரித்தல்]

பெரியாழ் : நான் தன்யனானேன்... அரங்கமா நகரத்து தலைவா! மூவுலகிற்கு முதல்வா... மூவடி அளந்த வாமனா! எம்மை ஆட்கொண்ட கேசவா! கோவிந்தா! கோபாலா! உனது சேவடிக் கமலங்களுக்கு என் பல கோடி நூறாயிரம் நமஸ்காரங்கள்!

[விரசை, அரசன், மந்திரி மற்றும் அர்ச்சகர், பக்த கோடிகள் நமஸ்கரித்தல்—கோதை புகழ் கோஷ மிடப்படுகிறது]

பெரியாழ் : தேவாதி தேவாய! கோபக்நய நாதாயா கருடத்வஜாய புருஷோத்தமா! இந்த எளியவனுக்கு மற்றொரு பிரார்த்தனை! இந்த ஆண்டாள், அரங்கன் திருக்கல்யாண வைபோகத்தை பாரெல்லாம் புகழ்ந்திட பக்தி சிரத்தையோடு செய்து கொடுத்த மன்னன் வல்லபதேவன், செல்வநம்பி— மற்றும் பக்தகோடிகள் அனைவர்க்கும் ஐயன் சேவை சாதித்து பிறவாப் பெரு வாழ்வு வாழ அருள வேண்டும்.

[ஓம் நமோ நாராயணாய — துதி ஒலிக்கிறது]

பெருமன் : பக்தா! உனது அன்பு வேண்டுகோளை யாம் ஏற்று அருள் புரிந்தோம்!

[கர்ப்ப கிரஹத்தில் ஜோதி தெரிகிறது— சங்கு முழங்குகிறது—

புல்லாங்குழல் ஓசை— அரங்களின் திவ்ய தரி சனம்—எல்லோரும் சிரமீது கரம் உயர்த்தி பரந் தாமனைப் போற்றிப் பணிதல்]

—திரை—

## காட்சி : 45

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார் -- விரசை—பண்டிதர், அதிகாரி

[பெரியாழ்வார் சிந்தனையில் ஆழ்ந்து இருத்தல்—விரஜை பாலுடன் வருதல்]

விரசை : சுவாமி! எந்த கோட்டையைப் பிடிக்க இப்படியொரு சிந்தனை...?

பெரியாழ் : ஒன்றுமில்லை விரஜை...நம் மகள் கோதையைப் பிரிந்த ஏக்கத்தையும்...துக்கத்தையும் என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை... அரங்கன் குடியிருந்த என் இதயகமலத்தில்...கோதையும் குடி புகுந்து விட்டாள் ... சதா... நம் கோதையின் நினைவு என்னை வாட்டுகிறது.

விரசை : சுவாமி! கோதையைப் பிரிந்த வேதனை எனக்கு மட்டும் இல்லையா என்ன...? பெண்ணாக பிறந்தால் ...என்றாவது ஒரு நாள் புக்ககம் போக வேண்டியது தானே...ஆண்டாளைப் பிரிந்து... இப்படி அன்ன ஆகாரமின்றி பட்டினி கிடப்பது நல்லதா சுவாமி...? இந்த பால், பழமாவது சாப்பிடுங்கள்.

[பால் அருந்துதல்]

பெரியாழ் : விரசை! எனக்கு நெடுநாளாக ஒரு ஆசை... என் இதயத்தை வாட்டிக் கொண்டிருக்கிறது...அது நிறைவேறுமா என்ற ஐயம் என்னை மேலும் வருத்துகிறது.

விரசை : பற்றற்ற துறவிபோல் வாழ்வு நடத்தும் தங்களையும் ஆசை பற்றிக் கொண்டதா? சொல்லுங்கள்...உங்

கள் ஆசை நிறைவேறும... நிறைவேறாதா என்று நான் ஆருடம் சொல்கிறேன்.

பெரியாழ்: நம் ஆண்டாளுக்கு வடபத்ரசாயி திருக்கோயி லில் ஒரு சந்நிதி அமைத்து...சோதையின் சிலையை பிரதிஷ்டை செய்ய வேண்டும்...எனது இந்த ஆசை நிறைவேறுமா...?

விரசை: சுவாமி! இதற்கு ஆருடமே தேவை இல்லை... உங்கள் எண்ணம் கண்டிப்பாக நிறைவேறும்...அரசனி டம் பெற்ற பொற்கிழியால்...வடபத்ரசாயி திருக்கோ வில் கோபுரத்துக்கு திருப்பணி செய்த தாங்கள்...இன் றைக்கு இந்த திருப்பணியைச் செய்வது எத்தனை பொருத்தமானது...அரங்கனின் அணிமார்பில் எழுந் தருளிய நம் கோதைக்கு, வடபத்ரசாயி கோவிலுக்குள் திருச்சந்நிதி அமைப்பது மகத்தானது.

பெரியாழ்: இது விஷயமாக மன்னனைக் கண்டு வரலாம் என்று எண்ணுகிறேன்...மன்னன் மனம் வைத்தால் நம் மனோபீஷ்டம் நிறைவேறும் என்று தோன்றுகிறது... மன்னனிடம் எப்படி....இந்த விஷயத்தை பிரஸ்தா பிப்பது என்று தான் யோசிக்கிறேன்...

விரசை: தயக்கம் வேண்டாம்...தைரியமாகப் புறப்படுங் கள்...போகும் போது அப்படியே...நம் கோதை எழுதிய ஏடுகளையும் எடுத்துச் செல்லுங்கள். மன்னன் அத னைச் செப்பேடு செய்வதற்கு வழிவகை செய்வதாக சொன்னார் அல்லவா...?

பெரியாழ்: இதுவும் ஒரு நல்ல யோசனை தான்...ஒரே கல்லில் இரண்டு மாங்காய்...நம் மன்னனிடம் கோதை யின் பாசுரங்கள் செப்பேடு செய்வதனைப் பீடிகை யாகத் தொடங்கி...கோவிலில் சிலை எடுக்கும் விஷயத் தைப்பற்றிய பேச்சை எடுக்கலாம்...என்ன இருந்தாலும் அரசனுக்கு ஓர் அமைச்சன் எப்படியோ...அப்படித் தான்...கணவனுக்கு மனைவி என்பது!

விரசை : என்னைப் புகழ வேண்டாம்...புறப்படுவதற்கு வழி பாருங்கள்.

[பண்டிதர்—அதிகாரி வருதல்—விரசை உள்ளே போகிறாள்.]

பெரியாழ் : வாருங்கள்...உங்களைப் பார்த்தால் அரசன் வல்லபதேவனின் ஆஸ்தான பண்டிதர் போல் தெரிகிறது...உட்காருங்கள்!

[பண்டிதர் அமருகிறார்]

பண்டிதர் : ஆஸ்தான பண்டிதர் தான்...அரசர் தங்களுக்கு மடல் அனுப்பியுள்ளார்கள்...இந்தாருங்கள்!

[பண்டிதர் மடலை பெரியாழ்வாரிடம் கொடுத்தல்—படித்தல்]

பெரியாழ் : [படித்து முடித்ததும்] நாம் நினைப்பதனை அரசன் எப்படி அறிகிறான் என்பது தான் அற்புதமாக இருக்கிறது...என் மகள் கோதையின் பாசுரங்களை செப்பேடு செய்து பத்திரப்படுத்தும் விஷயமாக மன்னனைக் காண்பதற்கு...நாளைக்கு மதுரை புறப்படலாம் என்று இருந்தேன்...அதற்குள் அரசரே அதனை முடிப்பதற்குத் தங்களை அனுப்பியுள்ளார்...வல்லபதேவன் ஓர் தீர்க்கதரிசி!

பண்டிதர் : சுவாமி! ஆண்டாள் எழுதியுள்ள பாசுரங்களை...மற்றொரு பிரதி எடுக்கப் போகிறேன்...மூல ஏடுகளை நீங்கள் இங்கே வைத்துக் கொள்ளுங்கள்...யாம் அதற்கென்று...இங்கு சில நாட்கள் தங்குவதாக உத்தேசித்துள்ளோம்

பெரியாழ் : உங்களுக்கு ஆக்ஷேபணை இல்லை என்றால்...எளியவன் இல்லத்தில் தங்கலாம்.

பண்டிதர் : அரசர்...அதற்கான ஏற்பாடுகளை...பாளையக்காரர்க்கு கட்டளை இட்டுள்ளார்.

பெரியாழ் : இவையெல்லாம் முடிந்து தாங்கள் ஊர் திரும்பும் போது...நானும் உங்களுடன் வருகிறேன்...மன்னனைப் பார்த்து வேறு ஒரு காரியம் ஆக வேண்டும்... உங்களிடம் சொல்வதற்கு என்ன...? என் மகள் கோதைக்கு...வடபத்ரசாயி கோவிலில் விண்விமானத்துடன் கூடிய ஒரு சந்நிதி அமைக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்.

பண்டிதர் : நல்ல ஏற்பாடாயிற்றே...கோதை நம் குல தெய்வம் அல்லவா...விஷ்ணுநாயகியின் சாக்ஷாத் அவதாரம் தானே விஷ்ணு சித்தரின் கோதை என்பது உலகமறிந்த விஷயமாயிற்றே...கண்டிப்பாக அரசர் இதைக் கேட்டதும் ஆனந்தப்படுவார்...கோதைக்கு கோவில் கட்டுவதினை தனது பெரும்பாக்கியம் என்று முடிமீது சுமந்து செயலாக்குவார்!

பெரியாழ் : மன்னனின் மனம் அறிந்து செயல்படும் தங்களைப் போன்ற நல்ல பண்டிதர்கள்... அறம் தெரிந்த அமைச்சர்கள்... நம்பிக்கையான அதிகாரிகள்... படை வீரர்கள் என்று இருக்க போய்த்தான்... நம் பாண்டிய நாட்டில் மாதம் மும்மாரி பொழிகிறது... சுவாமி! என் கோதை முப்பது பாடல்களைக் கொண்ட திருப்பாவை, திருமொழி பாடியுள்ளாள்.

பண்டிதர் : திருப்பாவை... திருமொழி... தலைப்பே அடிக் கரும்பினைச் சுவைத்தாற் போல் தித்திக்கிறது.

பெரியாழ் : கண்ணனைப் பிரிந்து வாடிய கோபியர்... மார்கழி நோன்பு நோற்றதைப்போல் தானும் நோன்பு இருந்து... கண்ணனை அடைய வேண்டும் என்று கருத்தில் கொண்ட கோதை... இந்த ஸ்ரீவில்லிபுதூரை ஆயர்பாடியாகவும்... தனது தோழியர்களை கோபிகா ஸ்திரிகளாகவும்... வடபத்ரசயியை கண்ணனாகவும் கருத்தில் கொண்டு மார்கழி நோன்பு நோற்றாள்... ஒரு நாளைக்கு ஒரு பாட்டு... என்று மார்கழி முப்பது

நாளைக்கும் முப்பது பாட்டு என்று எழுதி முடித்தாள்... இந்த நிலையிலும்... கோதைக்கு கண்ணன் மீதுள்ள தணியாத தாகம் தீரவில்லை... கண்ணன் தனக்குக் கணவனாக வரவேண்டும் என்று மன்மதனின் உதவியை நாடுகிறாள்... தையொரு திங்கள் என்று தொடங்கி பிருந்தாவனத்தே கண்டோமே என்று ஈரேழு பதிகங்கள் கொண்ட பிரபந்தம் பாடியுள்ளாள்... அதற்குப் பெயர் நாச்சியார் திருமொழி என்று இறைவனே அருள் செய்துள்ளார்.

பண்டிதர் : சூடிக்கொடுத்த ஆண்டாள் பாடிக் கொடுத்த பாசுரங்களைப் பாடிக்கொண்டே, வேறு ஏட்டில் எழுதுவதனை எமதுபெரும் புண்ணியமாகக் கொள்கின்றேன்... இந்த கைங்கரியத்தை வடபத்ரசாயி திருக்கோவில் மண்டபத்தில் ஆரம்பிக்கிறேன்.

பெரியாழ் : சுவாமி! தாங்களும் உடன் வந்திருப்பவரும் முதலில் சிரமப்பரிகாரம் செய்து கொள்ளும்... பிறகு மற்றவைகளை கவனிப்போம்.

பண்டிதர் : தாகத்திற்கு ஏதாவது தந்தால் போதும்... இங்குள்ள பாளையக்காரர் எங்களுக்குத் தேவையான மற்ற ஏற்பாடுகளை கவனிக்கிறார்கள்... சுவாமி! எமக்கு ஒரு யோசனை... இந்த கோவில் கட்டும் விவரத்தை அரசர்க்கு ஓர் மடலில் எழுதுங்கள்... நாங்கள் வந்து சேர்ந்த விவரம் அரசனுக்கு அறிவிப்பதற்காக நாளைக்கு ஒரு வீரன் குதிரையில் மதுரை போகிறான்... அவன் மூலம் உங்கள் மடலை சேர்த்து விடலாம்... அதில் தாங்கள் எங்களுடன் அடுத்த திங்கள் புறப்பட்டு வர இருக்கும் விவரத்தையும் எழுதுங்கள்.

பெரியாழ் : அப்படியே செய்கிறேன்... இதுவும் ஒரு நல்ல யோசனைதான்...

— திரை —

## காட்சி : 46

இடம் : கோவில் சந்நதி

கதாபாத்திரங்கள் : அர்ச்சகர்—பண்டிதர்—பெரியாழ்வார்

[கோவில் அர்ச்சகரும் பெரியாழ்வாரும் ஆண்டாள் பாசுரங்களை வெள்ளித்தட்டில்வைத்து பண்டிதரிடம் கொடுத்தல்-அவர் அதனை வாங்கி கண்களில் ஒற்றிக் கொள்ளுதல்]

[ஏட்டைப் புரட்டிப் பண்டிதர் ராகத்துடன் பாடுதல்]

பாடல்

மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்
மேலையார் செய்வகைகள் வேண்டுவனகேட்டியேல்
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலி னிலையாய்! அருளேலோ ரெம்பாவாய்!!

பண்டிதர் : எத்தனை ஆழமான கருத்து... எப்பேர்பட்ட உயர்ந்த தத்துவத்தை நம் கோதை இந்த பாடலால் உணர்த்துகிறாள்... பாஞ்ச சந்நியம் என்னும் சங்கின் வடிவம் பிரணவம்... அந்த பிரணவத்தின் ஓங்கார ஒலியால்... அகங்காரம் அழிந்து பக்தர்கள் பரந்தாமனுக்கு உரிய பாகவதோத்தமர்கள் ஆவார்கள்... பறை என்ற திருமந்திரம் நம: என்ற பதம் குறிப்பால் உணர்த்தப் படுகிறது... இப்பதத்தை உணர்ந்தோர் சத்துவகுணம்

பொருந்திய பெருமானை வழிபடுவர்... நாம் பெருமா னுக்கு கைங்கரியம் செய்யும் பொழுது... நான் செய் கிறேன் என்ற அகந்தை நம்மை ஆட்கொள்ளாமல் இருப்பதற்கு "தொண்டீர் வம்மின்" என்று நம்மை கைங்கரியத்திற்கு அழைப்பது எத்துணை சிறப்பு!

யாழ் : சுவாமி! கோதையின் பாசுரங்களுக்கு தாங்கள் கொடுத்த விளக்கம் மிக மிக அற்புதம்!

தீதர் : எப்பேர்ப்பட்ட புதையல்... அன்று பாண்டியன் அவையில் பொற்கிழி அறுத்தீர்கள்... இன்று திருப் பாவை எனும் பொற்கிழியை உலகிற்கு அளிக்கிறீர்... கோதை தந்த திருப்பாவை... வேத கருத்துக்கள் விவரித் திடும் திருமந்திரம்... இந்த திவ்விய பிரபந்தம் பரம் பொருளே... நமக்கு உபாயமாகவும்... உபயோகமாகவும் விளங்குகிறார் என்ற திண்ணிய கருத்தைப் போதிக் கிறது.

யாழ் : சுவாமி! மண்டபத்திதிற்குச் செல்வோமா...

தீதர் : ஆகட்டும் சுவாமி!

சகர் : சுவாமி! தங்களுக்கு எந்த உதவி வேண்டுமா னாலும்... இங்குள்ள சிப்பந்திகளைக் கேட்கலாம்.

யாழ் : அடியேனும் இங்குள்ளேன்... தாங்கள் என் என்றால் எண்ணையாக இருப்பேன்.

தீதர் : சுவாமி! தாங்கள் எப்பேர்ப்பட்ட மகான்... அதைவிடுத்து... இந்த சாமான்யனுக்கு தாங்கள்... கைங்கரியம் செய்வது... தங்கள் அடக்கத்தை மேலும் உயர்த்துகிறது... தங்களைப் "பெரியாழ்வார்" என்று இந்த பூவுலகம் கொண்டாடுவதில் நாம் எல்லாம் பெருமை கொள்ள வேண்டும்!

—திரை—

## காட்சி : 47

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : விரசை—வல்லபதேவன் (மாறு வேடத்தில்)—பெரியாழ்வார்

[விரசை கண்ணன் விக்ரஹத்திற்கு பூஜை செய்கிறாள் — அதுசமயம் வல்லபதேவன் மாறுவேடத்தில் வருகிறார்]

வல்லப : அம்மணீ... அம்மணீ!

விரசை : வாருங்கள்... அமருங்கள்... உங்களுக்கு அவரைப் பார்க்க வேண்டுமா...? அவர் வடபத்ரசாயி கோவிலுக்கு போயுள்ளார்... வருகின்ற நேரம் தான்... தாங்கள் யார்...?

வல்லப : நான் பூமகளைப் பெற்றெடுத்த பெரும் ஞானத் தவயோகி பெரியாழ்வார் சீடன்!

விரசை : என் நாதரின் சீடரா...? தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்...?

வல்லவ : கூடல் மாநகரத்திலிருந்து வருகிறேன்.

விரஜை : ஓ... மன்னருக்கு வேண்டியவரா...?

வல்லப : அப்படியும் வைத்துக் கொள்ளலாம்.

விரஜை : அப்படியும் வைத்துக் கொள்ளலாம் என்றால்... தங்களையே அரசராக பாவித்துக் கொள்ளலாமா...

வல்லப : நீங்கள் என்ன கூறுகிறீர்கள்...?

விரஜை : அரசே! உங்களை அடையாளம் கண்டுபிடிக்க முடியாதா என்ன...? உங்கள் தர்மத்தின் கண்கள் உங்களை அடையாளம் காட்டுகிறது... என் நாதரின்

சீடர் என்று சொன்ன போதே... நீங்கள் மன்னர் என்பதனை உணர்ந்து கொண்டேன்.

வல்லப : அம்மணி! உங்களுக்கு ஒருகுறையும் இல்லையே...?

விரசை : ஆண்டவன் அருளும்... அரசர் கருணையும் நிலைத்து இருக்கும் போது... எங்கள் வாழ்க்கையில் குறை எதற்கு வரப்போகிறது...?

வல்லப : குருதேவரின் ஓலை கிடைத்தது... உடனே புறப்படுவதற்கு ஆயத்தமானேன்... இப்பொழுது தான் நீங்கள் கல்யாணத்திற்காக நெடுந்தூரம் பயணத்தை மேற்கொண்டீர்கள்... மீண்டும் அவர் என்னைக் காண்பதற்கு... மதுரைக்கு வரவேண்டுமா என்று தான்... நான் ரதத்தில் புறப்பட்டு வந்தேன்.

விரசை : அதோ... அவரே வந்துவிட்டாரே!

[பெரியாழ்வார் வருகிறார் விரசை உள்ளே போகிறாள்]

வல்லப : வணக்கம்... குருதேவா!

பெரியாழ் : மங்களம் உண்டாகுக! நினைத்த மாத்திரத்தில் ஆண்டவன் வருவான்...என் விஷயத்தில் அரசனும் வருவார்... இன்னும் ஒரிரு தினங்களில்... நான் பண்டிதருடன் மதுரைக்கு புறப்படலாம் என்றிருந்தேன்... அதைத் தான் ஏட்டிலும் எழுதியிருந்தேன்.

வல்லப : தங்களுக்கு வீண் சிரமம் எதற்கு என்று தான் நானே புறப்பட்டு வந்தேன்... சுவாமி! ஆண்டாள் திருக்கல்யாண வைபவத்தை... கல்வெட்டில் பதிக்கச் செய்து... பட்டயத்திலும் பொறிக்கச் செய்துவிட்டேன்... அதே கையோடு தான்... ஆண்டாள் பாசுரங்களையும் செப்பேடு செய்து பத்திரப் படுத்துவதற்கான முயற்சியில் இறங்கியுள்ளேன்... நமது ஆஸ்தான பண்டிதரின் எழுத்து வேலை எம்மட்டும் உள்ளது...?

பெரியாழ் : திருப்பாவை முடிந்துவிட்டது... திருவாய் மொழியில் மொத்தம் 143 பாடல்கள்... 100 முடிந்து விட்டன... வருகின்ற வெள்ளிக்குள் பூர்த்தியாகிவிடும்... அரசர் பெருமானே! பாண்டிய வம்சத்தில் உங்கள் ஆட்சி பொன் எழுத்துக்களில் பொறிக்கப்படும்... உங்கள் புகழ் உலகு உள்ளளவும் நிலைத்து நிற்கும்.

வல்லப : அதற்குக் காரணம் தாங்கள் தான்... பூவோடு சேர்ந்தால் நாருக்கு மணம்... அந்த பூ பகவான் திருவடிக்கு போகும்போது... பகவானால் பூவுக்கு பெருமை... அந்த பகவான் அடியார்கள் உருவில் தோன்றும் போது அடியார்க்குப் பெருமை அந்த அடியார்களோடு பக்தர்கள் சேரும்போது...பக்தர்களுக்குப் பெருமை.. அப்படித் தானே! இந்த வல்லபதேவனுக்கு கிட்டுகின்ற புகழ்! பெருமை... சிறப்பு எல்லாம்!

பெரியாழ் : தாங்கள் வீரத்தில் வல்லவர்...என்று சொல்லக் கேட்டுள்ளேன்...இப்பொழுது தான் புரிகிறது...தாங்கள் சொல்லிலும் வல்லவர் என்று!

வல்லப : இந்த வல்லபதேவனுக்கு வல்லமை தந்தது... எனது குருநாதர் ஸ்ரீமத் பெரியாழ்வார் என்பதனை யாரே மறுக்கவல்லார்...இல்லாவிட்டால்...கோதைக்கு திருச்சந்நிதி கட்டும் ஓர் ஒப்பற்ற பொறுப்பைத் தருவாரா என்ன...? சுவாமி! உங்கள் விருப்பப்படியே கோதைக்கு திருச்சன்னதி அமைப்பதற்கானகட்டுமானப் பணியை எப்பொழுது வேண்டுமானாலும் ஆரம்பிக்கலாம்!

பெரியாழ் : அப்படியா...மிக்க சந்தோஷம்!

வல்லப : சுவாமி! தாங்கள் திருத்துழாய் கைங்கரியம் செய்து வரும் நந்தவனத்தில்...ஆண்டாள் அவதரித்த துளசிச்செடி நிறைந்திருக்கும் புனித இடத்தில் கோவில் கட்டுவோம்.

பெரியாழ் : நான் நினைத்ததை...நீங்கள் சொல்கிறீர்கள்!

வல்லப : சிலை அமைப்பதற்கு...கைதேர்ந்த சிற்பிகள் பலரை வரவழைத்து பரீக்ஷிக்க சொல்லியுள்ளேன்... குறிப்பாக இத்தாலியில் இருந்தும்...இலங்கையில் இருந்தும்...வடக்கே இருந்தும் வரவழைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்துள்ளேன். செல்வநம்பி அந்த பணியைச் செவ்வனச் செய்வார்!

பெரியாழ் : மிக்க மகிழ்ச்சி அரசே! நாளையே தங்களுக்கு நாள் குறித்துச் சொல்கிறேன்.

வல்லப : ஆண்டாளுக்கு அமைக்கப் போகும் சந்நிதியில் ஒவ்வொரு தூண்களும்...கலை நுட்பத்துடன் நிர்மாணிக்கப்படவேண்டும். விண்விமானத்தை தங்கத்திலேயேசெய்யலாம்...அதுமட்டுமல்ல...சம்புரோக்ஷணம் எனப்படும் கும்பாபிஷேக வைபவத்தை...நாத்திசையும் புகழும் வண்ணம் கொண்டாடுவோம்...ஓராண்டு காலம் விழா எடுப்போம்...ஆடலும்...பாடலும் ஆன்மீக சடங்குகளும்...ஸ்ரீவில்லிபுதூரை சொர்க்க லோகமாக மாற்றும்.

பெரியாழ் : அரசே! உங்கள் பேச்சைக் கேட்ட பிறகுதான் ...என் மனதுக்கு எதனாலோ ஒரு ஆறுதல்... இத்தனை நாளும் கோதையை நினைத்து நினைத்து கண்ணீர் வடித்த இந்த நெஞ்சம்...இப்பொழுது இந்த கோதையை நினைத்து பெருமைப்படுகிறது.

[விரசை உள்ளிருந்து வருகிறாள்]

விரசை : பிரபோ! அரசர்க்கு...அமுது...

பெரி : வாடிக்கையான பதில்தானே அரசே!

வல்லப : இல்லை...உங்களை வியப்பில் ஆழ்த்தும் பதில்...

பெரி : அப்படி என்றால்...

வல்லப : இன்று... உங்கள் இல்லத்தில் அமுது செய்வதற்காகவே வந்துள்ளேன் என்கிறேன்...

விரசை : என்னே எங்கள் பாக்கியம்...

—திரை—

## காட்சி : 48

இடம் : கோவில் சந்நிதி

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார் — வல்லபதேவன்— செல்வநம்பி—சிற்பி.

[சிற்பிகள் கட்டிடக்கலை நிபுணர்கள் ஆண்டாளுக்குத் திருக்கோவில் கட்டுவதில் ஈடுபட்டிருக்கின்றனர்...ஒரு புறம் திருக்குறுங்குடியைச் சேர்ந்த ஸ்தபதி ஆண்டாள் சிலை செதுக்குதல்—மறுபுறம் சில ஸ்தபதிகள் கல்தூண் செதுக்குகின்றனர். மன்னன் வல்லபதேவன் செல்வநம்பி—பெரியாழ்வார் பார்வையிடுதல்]

பெரியாழ் : ஆலய கட்டுமானப்பணிகள் இத்தனை சீக்கிரம் ஆரம்பித்து பூர்த்தி பெறும் நிலைக்கு வரும என்று நான் சற்றும் எண்ணவில்லை.

வல்லப : எல்லாவற்றிற்கும் என் குருதேவராகிய உங்களது அன்பும்...ஆசியும்தான்!

செல்வ : கோதை நாச்சியார் சிலை கூட பூர்த்தி பெறும் நிலையில் உள்ளது.

வல்லப : அப்படியா...?

[ஆண்டாள் சிலை அருகே போகின்றனர்—ஸ்தபதி சிலை செதுக்குவதனை நிறுத்திவிட்டு...அரசனைப் பணிகின்றார்]

சிற்பி : இரண்டு வாரங்களில் மூல விக்ரஹம் பூரணமாக முடிந்து விடும் அரசே!

வல்லப : ஸ்தபதியாரே! உமது கை வண்ணம் கண்டு யாம் கள் உண்ட வண்டு போலானோம்...எத்தனை...அழகு

...எத்தனை கலைநுட்பம்... ஆண்டாளை நேரில பார்ப்பது போன்ற பிரமிப்பை ஏற்படுத்துகிறது...வட்டநிலா வடிவு வதனம்...முத்து நகை சிந்தும் கொவ்வைச் செவ்வாய்...காதளவோடிய குமுதமலர் போன்ற கண்கள்—வில் ஒத்த புருவம்...குவளை மலர் போன்ற நாசி ...கார் குழல், அணிமணி ஆபரணங்களைக் கூட தாங்க சக்தியற்ற கொடி இடை... சிற்பியின் கை வண்ணத்தில் எத்துணை அழகாக செதுக்கப்பட்டுள்ளது...

கை வளையல்களில் முத்துக்களும் நவரத்தினங்களும் பதித்தாற் போல் செதுக்கி இருப்பது...கைகளிலே நரம்புகள் தெரிவது போன்ற பிரமை ஏற்படும் வண்ணம் மிக்க நேர்த்தியாக சிலைவடித்து இருக்கிறீர்களே! எவ்வளவு பெரிய கலை நுணுக்கத்தைக் காண்பிக்கின்றது... இத்தனைக்கும் மேலாக கோதையின் பாதங்கள்... விரல்களின் அழகு... நகங்களின் நுட்பமான வேலைப்பாடு... அடாடா! அற்புதம் ஸ்தபதியாரே! உமது சிற்றுளிக்கும்... சுத்திக்கும் திருஷ்டி சுத்திபோட வேண்டும்... இதோ...உமக்கு எமது அன்பளிப்பு...நவரத்தின மணிமாலை!

[மன்னன் கழுத்தில் கிடந்த நவரத்தின மணி மாலையைக் கழற்றி சிற்பிக்கு பரிசளித்தல்.]

சிற்பி : பாண்டிய பூபதி! இந்த எளியவனுக்கு...என்ன வார்த்தைகளால் அரசருக்கு எப்படி நன்றி கூறுவதென்றே புரியவில்லை... அரசர் வாழ்க! பல்லாண்டு வாழ்க! ஆழ்கடல் உள்ளவரை அரசன் புகழ் நிலைத்திருக்கும்.

பெரியாழ் : ஸ்தபதியாரே! நீர் மிக அற்புதமாக அரசரை வாழ்த்தி விட்டீர்கள்...ஒவ்வொருவரும் உலகம் உள்ளவரை என்று வாழ்த்துவர்... ஆனால்...நீரோ... ஆழ்கடல் உள்ளவரை என்றீர்... எவ்வளவு பெரிய தத்துவம்...

கடல் இருந்தால் தானே மழை... மழை இருந்தால் தானே பயிர்... பயிர் செழித்தால் தானே சுபிக்ஷம்... நாடுசுபிக்ஷம்அடைந்தால் தானே மன்னருக்குமகிழ்ச்சி... புகழ் எல்லாம்...

வல்லப : நான் உமக்கு அளித்தது முத்துமாலை... நம் சுவாமிகன் எமக்கு அளித்தது சொல்லாரம்... அத்தனையும் சத்தியம் எனும் முத்துக்களால் கட்டப்பட்ட புகழாரம்! செல்வநம்பி! கோதையர் கோவில் முடிவறும் தருவாய்க்கு வந்துவிட்டது... நாளைக்கே நாம் மதுரைக்கு புறப்பட்டுச் செல்வோம்... ஜோதிடர்களை வரவழைத்து சம்புரோசணத்திற்காக முகூர்த்தத்தை குறிப்போம்... அப்படியே வடபத்ரசாயி திருக்கோவிலையும் அழகுப்படுத்தி கும்பாபிஷேகம் செய்வோம்... ஸம்சன விமானத்திற்கு தங்கதகடுகள் வேயலாம்... திருமுக் குளத்தினை சுத்தம் செய்வோம்... குருநாதர் கட்டிய நந்தவனத்தைச் சுற்றி அழகிய மதிற்வர் எழுப்புவோம்... கோபுரத்திற்கு வண்ணம் பூசி... கோபுர கலசங்களை தங்கத்தில் அமைப்போம்!

செல்வ : நல்ல ஏற்பாடுதான் அரசே!

வல்லப : மதுரை ஆலவாய் அழகற்கு விழா நடந்தது போல்... மூவுலகமும் போற்ற வடபத்ரசாயிக்கும் பெரு விழா நடத்துவோம்... அரங்கத்திலே ஆண்டாள் கல்யாணத்தை நடத்தினோம்... வில்லிபுதூரிலே அவள் கோவில் திருப்பணியை முடிப்போம்... இம்மைக்கும்... மறுமைக்கும் புண்ணியம் தேடுவோம்... குருதேவா! வல்லப தேவனுக்கு ஒரு விண்ணப்பம்! ஆண்டாள் சந்தியில் எப்பொழுது என்ன...என்ன விழாக்கள் நடத்த வேண்டும்... தினப்படி பூஜைகள் எப்படி...? இதுபோன்ற ஆகம, வேத, சாஸ்திர சம்பிரதாய முறைகளைத் தாங்கள் சிரமப்படுத்தவும்... அதன்படி பூஜைகளும்... விழாக்களும் நடத்துவதற்கு யாம்ஆணைபிறப்பிபோம்!

பெரியாழ் : ஆகட்டும் அரசே!

வல்லப : பாண்டியநாட்டுத் திருக்கோவில்கள் புகழ் பாரெல்லாம் போற்றப்படும். வைஷ்ணவ, சைவ, சமய கலாசார பண்பாடும்... இந்து தர்ம கோட்டங்களாக விளங்கும்... செல்வநம்பி எல்லாவற்றையும் கல்வெட்டுக்களில் பொறிக்க ஏற்பாடுகளை செய்யவும்.

செல்வ : உத்தரவு அரசே!

—திரை—



## காட்சி : 49

*நிழற்காட்சி*

*நாதஸ்வர இன்னிசை ஒலிக்க — வேதம் முழங்க— கோபுர கலசங்களுக்கு சம்புரோக்ஷணம் நடைபெறு வதனை நிழற்காட்சியில் காண்பிக்கின்றோம் — வாழ்த்தொலி கோஷமிடப்படுகிறது — கோதை நாச்சியார் திருவீதி உலா வருவதனையும் நிழற் காட்சியில் காண்பிக்கின்றோம்.*

*—திரை—*



## காட்சி : 50

இடம் : கோவில் மண்டபம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார் — வல்லபதேவன்— செல்வநம்பி—மற்றும் பலர்—

[பெரியாழ்வார்— வல்லபதேவன்— செல்வநம்பி— அர்ச்சகர்—ஸ்தபதி — விரசை — மற்றும் பலர்— அர்ச்சகர்— பெரியாழ்வார் வெள்ளித்தட்டில் அரசர்க்கு பிரசாதம் கொடுக்க வருதல்]

பெரியாழ் : பக்தகோடிகளே! ஸ்ரீவில்லிபுதூர் வடபத்ரசாயி ரங்கமன்னார் திருக்கோவிலில் நம் கோதைக்கு கோவில் கட்டி.... பெருமாளுக்கும் கோதை நாச்சியாருக்கும் சம் புரோக்ஷணம் நடத்தி விழா எடுத்து... மலையத்தன பகவத் கைங்கரியம் செய்த நம் மன்னன் வல்லபதேவ பாண்டியனுக்கு... வில்லிபுதூர் பக்தர்கள் ஆகிய நாம் அன்பாக... இந்த வைரம் பதித்த வெள்ளி வீரவாளைப் பரிசளிக்கின்றோம்.

[வீரவாள் கொடுத்தல்—மக்கள் கரகோஷம்

அத்துடன் இந்த பொன் வஸ்திரம் அணிவித்து கௌர விக்கின்றோம்.

[அர்ச்சகர் வஸ்திரம் அணிவித்து—மாலை போட்டு பரிவட்டம் கட்டி கௌரவித்தல்]

வல்லப : என் அருமை பிரஜைகளே! இத்திருக்கோவிலின் குட முழுக்குத் திருவிழாவினால்... இந்த பாண்டிய மன்னனுக்கு... மதுரையும் வில்லிபுதூரும் இரண்டு கண்கள்... என்று தான் சொல்ல வேண்டும். இப்படிப் பட்ட ஒரு பாசப்பிணைப்பினை ஏற்படுத்தியது... எனது

குருநாதர் பெரியாழ்வார் சுவாமிகளின் நிலையான அநுக்கிரஹமும், அன்பும் தான்! அவர், எனது அஞ்ஞான இருளை அறவே அகற்றி ஞானத்தை என்னுள்ளே பிரகாசிக்க செய்த அருட்பெருஞ்ஜோதி! அவர் திருக்கரத்தால்... இந்த ஆலய நிர்மாணப்பணியில் ஈடுபட்ட கலைஞர்களுக்கு தக்க சன்மானம் வழங்க இருக்கின்றார், வாழ்க ஸ்ரீமத்பெரியாழ்வார் சுவாமிகள்!

[வாழ்க என்று கோஷம் ஒலிக்கிறது]

பெரியாழ் : வல்லபதேவ பாண்டிய பூபதி... நம் நாட்டை மட்டும் ஆளவில்லை... அவர் நம்மையே ஆளுகின்றார்... பிரஜைகளிடம் அவர் காட்டுகின்ற அன்பிற்கும்... அரவணைப்பிற்கும் ஈடு இணையே கிடையாது... மன்னனுக்கு வெற்றி பல கிட்டட்டும்... பாண்டிய நாடு வளம் பெருகும் பொன்னாடு என்று புவனம் போற்றட்டும்... பாண்டிய நாடு பக்திவளம் கொழிக்கும் தெய்வத்திரு நாடு என்று திக்கெட்டும் முரசு கொட்டட்டும்.

செல்வ : இந்த சுபமுகூர்த்த நன்னாளில்...வில்லிபுதூர் மக்களுக்கு அரசனின் ஆணையைப் படிக்கிறேன்... அரசர்... இந்த வடபத்ரசாயி ஆலயத்தில் பூஜைக்கிரமங்கள் எவ்வாறு நடத்தப்பட வேண்டும் என்பதனை... ஸ்ரீ மத் பெரியாழ்வார் சுவாமிகள் விருப்பப்படி நிறைவேற்றி உள்ளார்.

[செல்வநம்பி படித்தல்]

மார்கழிமாதம் முப்பது நாளும் காலையும், மாலையும் நமது கோதை நாச்சியார் பாடி அருளிய திருப்பாவை, திருவாய்மொழி ஆலயத்தில் படிக்கவேண்டும்... ஆண்டாள் நாச்சியார் அவதரித்த ஆடிமாதம் சுக்ல பக்ஷம்... பூர நக்ஷத்திரத்தில் கோதை நாச்சியார் உத்ஸவம் ஆரம்பித்து பிராட்டியாரின் ஜன்மோத்ஸவமாகக் கொண்டாடப்பட வேண்டும்... இதே போல் ஒவ்வொரு மாதமும் நடத்த வேண்டிய விழாக்களைப்

பற்றிய விவரங்கள் சொல்லப்படும்... இப்பொழுது மன்னவனின் ஆணைப்படி ஸ்ரீ பெரியாழ்வார் அவர்கள் சன்மானங்களை வழங்குவார்.

வல்லப : பக்தர்களே! தொடர்ந்து பத்துநாட்கள் நடக்க இருக்கும் உத்ஸவத்தில் நீங்கள் கலந்து கொள்ள வேண்டும்... இரண்டு பொழுதும் அன்னதானம் நடக்கும்... யாகசாலை ஒரு புறமும்... போஜனசாலை மறுபுறம்... என்று வயிற்றுக்கு உணவும்... ஆத்மாவிற்கு பூஜையும் நடந்த வண்ணமிருக்கும்... இது உங்கள் வீட்டுத் திருவிழா .. ஒரு உல்லாச வசந்த விழா! ஸ்ரீ வில்லிபுதூர் கொண்டாடும் பேரின்ப பெருவிழா!

செல்வ : முதலில்... பட்டபிரான்... பெரியாழ்வார் சுவாமி களை மன்னன் கௌரவிக்கப் போகிறார்.

வல்லப : தமக்கு விவரம் தெரிந்த நாள் முதற்கொண்டு நம் வடபத்ரசாயி பெருமானுக்கு திருத்துழாய் கைங்கரியம் செய்து வரும் நம் பட்டபிரான் ஸ்ரீ பெரியாழ்வார் சுவாமிகளுக்கு... தங்கமலர்களாலான இந்த வைரமணி மாலையைச் சூட்டுகிறேன்.

[வல்லபதேவன் மாலை அணிவித்தல்]

பெரியாழ் : மன்னனின் அன்பிற்கும் அபிமானத்திற்கும் என் நன்றி! அன்று என் மகள் கோதை மலர்மாலைகளைத் தான் சூடிக்கொடுத்து பரமனுக்கு அணிவித்தாள்... இன்று நானும்... மன்னர் எமக்கு எம் புகழ்ப்பாடிக் கொடுத்த இத்தங்கமணிமாலையை... யாம் என் மகள் கோதைக்கு சூடிக் கொடுக்கிறேன்.

[மாலையைக் கழற்றி—அர்ச்சகரிடம் கொடுத்தல். அர்ச்சகர் ஆண்டாளுக்கு அணிவித்தல்]

செல்வ : அடுத்து கட்டிடக் கலைஞர்களுக்கு சன்மானம் வழங்குதல் ஆரம்பமாகும்.

[மக்கள் கரகோஷம்]

—திரை—

## காட்சி : 51

இடம் : ஆண்டாள் சந்நிதி

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்—விரஜை—அர்ச்சகர்

[விஷ்ணுசித்தர், விரஜை பூமாலையுடன் நிற்கின்றனர்—பெரியாழ்வார் பாடுகிறார்]

பெரியாழ் :

ஒருமகள் தன்னை உடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்
செங்கண் மால் தான் கொண்டு போனான்
பெருமகளாய்க் குடி வாழ்ந்து
பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமகளைக் கண்டு உகந்து
மணாட்டுப் புறம் செய்யுங் சொல்லோ?

ஆண்டாள்...இதே இடத்தில் உன்னைக் குழந்தையாகக் கண்டெடுத்தேன் அன்று... இதே இடத்தில் சிலையாக காண்கின்றோம்... இன்று நாங்கள்... உன்னைக் கண்டு சிரித்து மகிழ்ந்தோம்... ஆனால்... இன்று உன்னைப் பார்த்து அழுது புலம்புகின்றோம்.

விரஜை : பிரபோ! ஆண்டாள் பேசும் பொற்சிலையாக இருக்கிறாள்... கண்களிலே தான் எத்தனை பிரகாசம்... பார்க்க பார்க்க...நம் உள்ளம் பேரின்பம் கொள்கிறது... நம்மோடு பேசுவது போன்ற ஒரு பிரமை ஏற்படுகிறது... அந்த அளவிற்கு சிற்பி சிலை வடித்திருக்கிறார்.

பெரியாழ் : ஆண்டாள்... நீ சூடிக்கொடுக்கும் மாலைதான் ரங்கமன்னாருக்கு உகந்தது... அதனால் இந்த மலர் மாலைகளை முதலில் உனக்கு அணிவித்து ஆராதித்தப் பிறகு பெருமானுக்கு சூட்டுகிறேன்.

[பெரியாழ்வார் பூமாலையை ஆண்டாள் சிலைக்குப் போடுதல்—பிறகு அம்மாலைகளை எடுத்துக் கொள்ளுதல்]

பெரியாழ் : சூடிக்கொடுத்த என் கோதை நாச்சியாரே! உன் அழகைக்காணக் கண் கோடி வேண்டும்... இத்தனை நாளும் எனக்கு மட்டும் மகளாக இருந்த நீ... இன்று உலகிற்கே தெய்வமகளாய்... பூமகளாய்... தமிழ் பாமகளானாய்... கண்ணன் திருவடி கண்ட திருமகளானாய்!!

[பெரியாழ்வார், அர்ச்சகரிடம் பூமாலையைக் கொடுத்தல்]

பெரியாழ் : சுவாமி! என் மகள் கோதை சூடிக் கொடுத்த பூமாலை...

[அர்ச்சகர் வாங்கி சுவாமிக்கு அணிவித்து, ஆராதனை செய்தல்]

பெரியாழ் : பல்லாண்டு! பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பல கோடி நூறாயிரம் மல்லாண்ட திண்தோள்
மணிவண்ணா உன் சேவடி செவ்வி திருகாப்பு
அடியாமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம்
பல்லாண்டு

[பெரியாழ்வாரும், விரஜையும் சேர்ந்து பாசுரம் பாடுதல்]

[மேடையில் இருள்—பெரியாழ்வார், விரஜைக்கு மட்டும் தனி Spot—கர்ப்பகிரஹத்திலிருந்து அசரீரீ கேட்கிறது]

அசரீரீ : என் பக்தசிரோன்மணிகளே! நீவீர் இருவரும் பல்லாண்டு வாழ்வீர்! பெரியாழ்வார்... நீ இன்னும் பூவுலகில் பலகாலம் உமது பாரியாளுடன் வாழ்ந்து சுந்தரத்தமிழில் எம்மைப் போற்றிடுவாய்!

[ஓம் நமோ நாராயணாய!! என்ற நாமம் ஒலிக்கிறது]

—திரை—



## காட்சி : 52

இடம் : பெரியாழ்வார் இல்லம்

கதாபாத்திரங்கள் : பெரியாழ்வார்

[பெரியாழ்வார் ஏட்டில் எழுதிக் கொண்டிருத்தல்]

குரல் : கருடாழ்வார் அம்சமாக பூவுலகில் அவதரித்து... திருத்துழாய் கைங்கரியத்தால் வடபத்ரசாயியின் பேரருளைப் பரிபூரணமாகப் பெற்ற விஷ்ணுசித்தர்... பரந்தாமனின் ஆணைப்படி... பக்தர்களுக்கு பேரின்ப வாழ்வு கிட்ட... பெரியாழ்வார் திருமொழி எனும் திவ்யபிரபந்தத்தை தந்துள்ளார்...

473 பாசுரங்களைக் கொண்ட இந்த பிரபந்ததில் கண்ணனைப் பற்றி பாடியிருக்கிறார்... திருவரங்கம்—திருவெள்ளாறை—திருப்பேர் நகர் — கும்பகோணம்—திருக்கண்ணபுரம் — திருச்சித்ரகூடம் — திருமாலிருஞ்சோலைமலை — திருக்கோட்டியூர் — ஸ்ரீவில்லிபுதூர்—திருக்குறுங்குடி — திருவேங்கடம் — திருவயோத்தி—சாலிக்கிராமம் — வதரியாச்சிரமம் — திருக்கங்கைக் கரைகண்டம் — துவாரகை — வடமதுரை — திருவாய்பாடி — திருப்பாற்கடல் — பரமபதம் முதலிய திவ்ய க்ஷேத்திரங்களைப் போற்றிப் பணிந்து பாடியுள்ள பாசுரங்களைக் காணலாம்.

அத்தனையும் பக்தி தேன் சிந்தும்... இன்பத் தமிழ்க் கலசங்கள்... சர்க்கரை பொங்கல்...தெவிட்டாத தெள்ளமுது... படிக்க படிக்க... கண்ணனையே நாம் நேரில் காணும் இன்பத்தைப் பெறுகின்றோம்... மாதவனை— மதுசூதனை— மறையோர்கள் ஏத்தும் ஆயர்கள் ஏற்றினை— அச்சுதனை — அரங்கத்து அர

வணைப் பள்ளிகொண்டானை போற்றிக் கொண்டாடிய பெரியாழ்வாரின் அரிய மொழிகள்... பட்ட பிரானின் பைந்தமிழ்ப் பாசுரங்கள்... ஸ்ரீவில்லிபுதூர் மேவிடும் வடபத்ரசாயியின் வண்ணமலர் சேவடிகளை அலங் கரித்து ஆராதிக்கிறது.

பெரியாழ்வார் பெற்ற அத்தமிழ்க் காவியங்களை வல்லபதேவன் கல்வெட்டுக்களில் பொறித்துள்ளார்... செப்புபட்டயமாக்கி பத்திரப்படுத்தினான்.

இன்றும் பெரியாழ்வார் நம்மோடு வாழ்கிறார்... அவர் பெற்ற பூமிப்பிராட்டியாரின் அவதாரமான சூடிக்கொடுத்த சுடர்க்கொடி நாச்சியார் நம்மோடு வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

ஆண்டுக்கு ஒரு முறை வரும் மார்கழி நம்மை ஆண் டாளோடு இணைக்கிறது... அவள் பாடிய திருப்பாவை வீதியெங்கும் ஒலிக்கிறது...

மாதங்களில் நான் மார்கழி என்றார், கண்ணன்... அந்த கண்ணனையே கணவனாகப் பெற்ற ஆண்டா ளும் மாதங்களில் மார்கழியாக விளங்குகிறாள்.

> [''மார்கழி திங்கள் மதிநிறைந்த நன்னாளால்'' என்ற பாடலுடன் பெரியாழ்வாரையும், ஆண் டாளையும் தனி Spot ல் காண்பித்து நாடகத்தை நிறைவு செய்கின்றோம்]

அனந்தன் திருவடியே சரணம்!
ஆண்டாள் திருவடியே சரணம்!
பெரியாழ்வார் திருவடியே சரணம்!!

—நிறைவு—



ஆன்மீகச் செல்வர்

நாகர்கோவில் கிருஷ்ணன்

எழுதிய மிகச் சிறந்த நூல்கள்

| | |
|---|---|
| வரம் தரும் விநாயகர் | 3 |
| ஸ்ரீராமபக்த ஹநுமான் | 2 |
| ஸ்ரீ குருவாயூரப்பன் | 2 |
| உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணர் | 1 |
| ஐசுவரியம் தரும் அஷ்டலக்ஷ்மி | 1 |
| கல்யாண வைபோகம்—சந்தான சௌபாக்யம் | 1 |
| இந்து தர்ம வழிபாடு | 1 |
| ஸ்ரீ காயத்ரீ மஹாத்மியம் | 1 |
| ஓம் சிவசக்தி வைபவம் | (அ |
| ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கரர் | 1 |
| மீண்டும் இவர்கள் (நாடகம்) | 1 |
| தூண்கள் ,, | 1 |
| மேடையில் பூத்த மலர்கள் ,, | 2 |
| அந்த ஆறு வாரங்கள் (நாவல்) | 2 |




மஹேஸ்வரி பிரசுரம்

55, சோலையப்பன் தெரு,

மயிலாப்பூர், சென்னை-600 0



Wrapper Printed at Eskay Art Printers, Madras-

Phone : 844727